# மின்தமிழ் மேடை



## "தமிழுக்கான இன்றைய ஆய்வுகள்"

**தமிழ் மரபு அறக்கட்டளை** *(www.tamilheritage.org)*
வெளியிடும் காலாண்டு மின்னிதழ்
மின்தமிழ்மேடை - காட்சி: *18*
ஜூலை – *2019*




**18**

# மின்தமிழ் மேடை

*காட்சி: 18*

---

*ஜூலை - 2019*

## “தமிழுக்கான இன்றைய ஆய்வுகள்”



முன்னட்டைப் படம்: துன் அப்துல் ரசாக் பின் ஹுசைன் (மலேசியாவின் துணைப் பிரதமர் மற்றும் ஊரக வளர்ச்சித் துறையின் அமைச்சர்) முதல் உலகத் தமிழாராய்ச்சி மாநாட்டின் துவக்க விழாவில் (1966 ஏப்ரல் 16) உரையாற்றுகையில் மேடையில் அமர்ந்திருப்போர் (இடமிருந்து வலமாக): மலேசியாவின் தொழிலாளர் அமைச்சர் திரு. வி. மாணிக்கவாசகம், பேராசிரியர் ஜீன் ஃபில்லியோசாத், பேராசிரியர் டி.பி. மீனாட்சிசுந்தரம், பேராசிரியர் சேவியர் எஸ். தனிநாயகம், பேராசிரியர் எஃப்.பி.ஜே. கைபர் மற்றும் திரு. வி. செல்வநாயகம்.




தமிழ் மரபு அறக்கட்டளை வெளியீடு

*http://www.tamilheritage.org/*

இதழ் தொகுப்பு: தேமொழி

# தலையங்கம்: தமிழ் ஆய்வுலகின் தற்காலத் தேவை

– *முனைவர் க.சுபாஷிணி*

வணக்கம்.



10ம் உலகத் தமிழாராய்ச்சி மாநாடு அண்மையில் வட அமெரிக்காவில் இல்லினாய்ஸ் மாநிலத்திலுள்ள சிக்காகோ நகரில் நடைபெற்று முடிந்தது. இரண்டு நாட்கள் நடைபெற்ற மாநாட்டு விழாவில் ஏறக்குறைய 82 ஆய்வுக் கட்டுரைகள் படைக்கப்பட்டன. உலக அளவில் தமிழ் மக்களையும் தமிழ் மொழி ஆய்வில் ஈடுபட்டுள்ள தமிழரல்லாத ஆனால் தமிழில் ஆர்வம் உள்ள பிற இன ஆய்வாளர்களின் கவனத்தையும் கவர்ந்த ஒரு நிகழ்வாக இது அமைந்தது. இந்த மாபெரும் நிகழ்வை நடத்தி முடித்த உலகத் தமிழாராய்ச்சி மன்றத்தின் பொறுப்பாளர்களுக்குத் தமிழ் மரபு அறக்கட்டளையின் சார்பாக பாராட்டுதல்களும் நல்வாழ்த்துக்களும். இந்த வரலாற்றுச் சூழலின் அடிப்படையில் உலகத் தமிழாராய்ச்சி மன்றத்தைப் பற்றிய வரலாற்றினை பின்னோக்கிப் பார்ப்பது காலத்தின் தேவையாகின்றது.



உலகத் தமிழாராய்ச்சி மன்றம் தமிழ் மொழி வளர்ச்சியின் மீது தீவிர ஆர்வமும் பற்றும் கொண்ட தமிழ் ஆய்வாளர்களால் புதுடெல்லியில் 1964ம் ஆண்டு நடைபெற்ற 26வது உலகக் கீழைத்தேயக் கல்வி ஆய்வாளர்கள் (International Congress of Orientalists) மாநாட்டில் உருவாக்கம் பெற்றது. இதனை அடுத்து முதல் உலகத் தமிழாராய்ச்சி மாநாடு 1966ம் ஆண்டு மலேசியத் தலைநகர் கோலாலம்பூரில் நடைபெற்றது.



Tun Abdul Razak bin Hussein, Deputy Prime Minister and Minister of Rural Development, Malaysia, addressing the delegates on Malaysia's Rural Development Projects. Others seated on the rostrum are (*from left*): Mr. V. Manickavasagam, Minister of Labour, Malaysia, Prof. Jean Filliozat, Prof. T. P. Meenakshisundaram, Prof. Xavier S. Thani Nayagam, Prof. F. B. J. Kuiper and Mr. V. Selvanayagam.

CONFERENCE SEMINAR OF TAMIL STUDIES

இரண்டாம் உலகத் தமிழாராய்ச்சி மாநாடு 1968ம் ஆண்டு தமிழகத்தின் தலைநகரான மெட்ராஸில் நடைபெற்றது. திராவிட முன்னேற்றக் கழகம் 1967ல் பெரும் வெற்றியை ஈட்டி அண்ணா அவர்கள் முதல்வர் ஆன தருணம் அது. தமிழின் பால் பெரும் ஆர்வத்தையும் ஊக்கத்தையும் கொண்டிருந்த திராவிட முன்னேற்றக் கழக அரசின் தாக்கம் 1968ம் ஆண்டு நடைபெற்ற 2வது உலகத் தமிழாராய்ச்சி மாநாட்டில் எதிரொலித்தது.

இதனை அடுத்து மூன்றாவது உலகத் தமிழாராய்ச்சி மாநாடு 1970ம் ஆண்டு ஐரோப்பாவில் பிரான்சில் நடைபெற்றது. நான்காவது மாநாடு 1974ம் ஆண்டில் இலங்கையில் யாழ்ப்பாணத்தில் நடைபெற்றது. முதல் நான்கு மாநாடுகளையும் முன்னின்று வழிநடத்திச் சென்றவர் தமிழ்த்தூது சேவியர் தனிநாயகம் அடிகளாவார்.



தனிநாயகம் அடிகளாரின் மறைவுக்குப் பிறகு ஐந்தாவது மாநாடு 1981ம் ஆண்டு மதுரையிலும், அதற்கு அடுத்து ஆறாவது மாநாடு 1987ம் ஆண்டு கோலாலம்பூரிலும், ஏழாவது மாநாடு 1989ம் ஆண்டு மொரிசியசிலும், எட்டாவது மாநாடு 1995ம் ஆண்டு தஞ்சாவூரிலும் நடைபெற்றன. நீண்ட இடைவெளிக்குப் பிறகு மீண்டும் 2010ம் ஆண்டு அப்போதைய தமிழக முதலமைச்சர் கலைஞர் அவர்களால் 9வது மாநாட்டிற்கான ஏற்பாடுகள் தொடங்கப்பட்டு அறிவிப்பும் வெளிவந்த நிலையில், போதிய கால அவகாசம் இல்லை என பேராசிரியர் நொபொரு கரோஷிமா தலைமையிலான உலகத் தமிழாராய்ச்சி மன்றம் அறிவித்ததை அடுத்து, தமிழக அரசு ஏற்பாடு செய்த மாநாடு செம்மொழி மாநாடு என்ற பெயருடன் கோலாகலமாக நடந்து முடிந்தது. இந்தச் சூழ்நிலையில் ஒன்பதாவது உலகத் தமிழாராய்ச்சி மாநாடு 2015ம் ஆண்டு கோலாலம்பூரில் மலாயா பல்கலைக்கழகத்தில் நடைபெற்றது. இதனை அடுத்து 10வது உலகத் தமிழாராய்ச்சி மாநாடு இந்த ஆண்டு வட அமெரிக்காவில் நடைபெற்றுள்ளது.

உலகத் தமிழாராய்ச்சி மன்றத்தைத் தொடங்கிய தனிநாயகம் அடிகளாரும் அவரது குழுவினரும் உலகளாவிய தமிழாராய்ச்சி செயல்பாடுகள் தொடர்பாக உருவாக்கிய நோக்கம் மற்றும் செயல்திட்டங்களை தற்போது செயல்பட்டுக் கொண்டிருக்கும் உலகத் தமிழாராய்ச்சி மன்றத்தின் நிர்வாகிகளும் உலகத் தமிழர்களும் மீண்டும் மீளாய்வு செய்து தற்கால மற்றும் எதிர்கால ஆய்வுத்தளங்களை கவனத்தில் கொண்டு செயல்பட வேண்டிய தேவை இருக்கின்றது.

தனிநாயகம் அடிகள் தொகுத்து 1968ம் ஆண்டு மலேசியாவில் அச்சிட்டு வெளியிடப்பட்ட நூலான Tamil Studies Abroad - a Symposium எனும் தொகுப்பின் முன்னுரையில் அவர் கூறும் கருத்துக்கள் இன்றளவும் கவனத்திற் கொள்ளத்தக்கனவாகும். இதில், இந்த மன்றத்தின் ஆய்வு நடவடிக்கைகளில் ஒன்றாக தமிழியல் ஆய்வுகள் தொடர்பான ஆண்டறிக்கை சமர்ப்பிக்கப்பட வேண்டும் என வலியுறுத்துகின்றார். தமிழர் வாழ்வியலை ஆராயும் வகையிலான தமிழ் இனத்தின் தோற்றம், வளர்ச்சி, தற்கால உலகளாவிய தமிழ் மொழி வளர்ச்சிக்கான தேவை, பல்வேறு நாடுகளில் தமிழ் மொழியின் நிலை என்ற வகையில் ஆராயப்படும் வகையில் அமைந்திருக்க வேண்டியதை அவர் இந்நூலில் வலியுறுத்துகின்றார்.

1966 காலகட்டத்தில் ஐரோப்பாவில் தமிழ் மொழி பல்கலைக்கழகங்களில் பாடமாக மூன்றுக்கும் மேற்பட்ட ஜெர்மானிய பல்கலைக்கழகங்களிலும், அப்போதைய செக்கொஸ்லோவாக்கிய, அமெரிக்கா, ரஷியா, இங்கிலாந்து, மலேசியா, பிரான்சு ஆகிய நாடுகளிலும் இருந்துள்ளது. அத்துடன், டச்சு மற்றும் போர்த்துக்கீசிய தமிழ் ஆய்வுகள் நடந்தமை பற்றிய தகவல்களையும் காண்கின்றோம். தனிநாயகம் அடிகளாரின் தனிப்பெரும் முயற்சியாக ஒப்பந்தக் கூலிகளாக உலகின் பல காலனித்துவ தீவுகளுக்குப் பயணித்த தமிழ் மக்களின் சந்ததியினர் பற்றிய ஆய்வுச் செய்தியும், அதன் தொடர்ச்சியாக அவர்கள் வாழ்வியலில் மறைந்து வரும் தமிழ்ப் பண்பாட்டு மற்றும் மொழிக்கூறுகள் மீட்கப் பட வேண்டும் என்ற அவரது கோரிக்கையையும் இந்த நூலில் காண்கின்றோம்.

ஆக, இந்த மன்றம் தொடங்கப்பட்ட 1964 முதல் இன்று வரை அதன் நோக்கத்தில் எந்த அளவிற்கு அதன் செயல்பாடுகளின் வழி பயணப்பட்டுள்ளது என்பது நம் முன்னே நிற்கின்ற கேள்வி.

இந்த அடிப்படையிலேயே உலகத் தமிழாராய்ச்சி மன்றத்தின் நடவடிக்கைகள் மீளாய்வு செய்யப்பட வேண்டியது அவசியம். இதைச் சீர்தூக்கிப் பார்க்காமல் எதிர்காலப் பணிகளை முன்னெடுப்பது தடுமாற்றங்களையும் இடைவெளிகளையும் உருவாக்கி விடுமோ என்ற ஐயம் மேலோங்குகின்றது.

இந்த கேள்விகளின் அடிப்படையில் உலகத் தமிழாராய்ச்சி மன்றம் முன்னெடுக்க வேண்டிய மிக முக்கிய ஆய்வுத் துறைகள் விடுபட்டுள்ளன என்பது சுட்டிக்காட்டப்பட வேண்டியதாகின்றது. விடுபட்ட துறைகளில் ஆய்வுகள் செல்லும் வகையில் இந்த அமைப்பின் கவனம் செல்லவேண்டியது அவசியமாகின்றது. அவையாவன:

- தமிழரின் கடல் வணிகம் மற்றும் கிழக்காசிய மற்றும் ஐரோப்பிய நாடுகளுடனான வணிகப் போக்கு, அவை ஏற்படுத்திய தாக்கங்கள்
- கிழக்காசிய நாடுகளில் தமிழர் தடையங்கள்
- ஏனைய மொழிகளில் தமிழ் மொழியின் தாக்கம்
- இக்காலத் தேவைக்கேற்ற கலைச்சொல் வளர்ச்சி
- புலம்பெயர்ந்த தமிழ் மக்களின் தமிழ் மொழி, பண்பாடு மற்றும் புலம்பெயர் வரலாறு
- அயலக பல்கலைக்கழகங்களில் தமிழ் நடவடிக்கைகள், தமிழ் இருக்கைகள்
- தமிழ் மக்கள் கலைகள்
- கூத்து, இசை, நாடகம்
- சமூகச் சீர்திருத்தம், சமூக நலன், சாதி அமைப்புக்கள் ஏற்படுத்தும் சமூகப் பின்னடைவுகள்

- குழந்தைகளுக்கான தமிழ் இலக்கியமும் அது தொடர்பான ஆய்வுகளும்
- அரசியல் தமிழ்
- அறிவியல் தமிழ்
- மருத்துவ தமிழ்
- விவசாயத் தமிழ்
- வணிகத் தமிழ்

மேற்குறிப்பிட்ட துறைகளில் உலகத் தமிழ் மக்களின் நிலையை ஆராயும் வகையிலும் தமிழ் மொழி வளர்ச்சியை விரிவான நோக்கிலும் கொண்டு ஆராய்ச்சிகள் நடைபெறும் போது உலகளாவிய ஆய்வுத் தேவைகளை இம்முயற்சி ஈடுகட்டக்கூடியதாக அமையும் என்பதில் ஐயமில்லை.

ஆய்வு என்பது ஏற்கனவே எடுத்த முடிவினை நோக்கிய சான்றுகள் தேடும் முயற்சியாக இருக்கக்கூடாது. மாறாக உண்மைத் தன்மையைத் தேடுகின்ற, சமகால நிகழ்வுகளையும் துல்லியமான வரலாற்றுச் சான்றுகளைப் பாரபட்சமின்றி, காய்தல், உவத்தல் இன்றி சீர்தூக்கிப் பார்க்கும் தன்மையுடன் செய்யப்படுகின்ற வகையில் அமைந்திருக்க வேண்டும். தமிழ் ஆய்வுலகில் தற்கால தேவைக்கேற்ப ஆற்ற வேண்டிய ஆய்வுச்செயல்பாடுகள் மிக அதிகம் உள்ளன. அவற்றை முன்னெடுக்கும் பணியை உலகத் தமிழாராய்ச்சி மன்றம் முன்னெடுக்க வேண்டும் என்பது தமிழ் மரபு அறக்கட்டளையின் அவா.
நல்வாழ்த்துகள்.

அன்புடன்
முனைவர்.க.சுபாஷிணி

இந்த இதழில் ...

# மின்தமிழ்மேடை - காட்சி: 18; ஜூலை - 2019

## "தமிழுக்கான இன்றைய ஆய்வுகள்"

*(மின்தமிழில் ஏப்ரல் 16, 2019 – ஜூலை 15 வரை பதிவான படைப்புகளின் தொகுப்பு)*

**உள்ளடக்கம்** **பக்கம்**

## உள்ளடக்கம்

பக்கம்

# 1. ஈழத்தமிழர் வரலாற்றினை விளக்கும் இலங்கை ”கட்டுக்கரை” அகழ்வாய்வு

– *முனைவர் க.சுபாஷிணி*

தொல்லியல் அகழ்வாய்வுகள் வெளிப்படுத்துகின்ற சான்றுகள் ஒரு இனத்தின் வரலாற்றினை அறிந்து கொள்வதற்கு அடித்தளம் அமைக்கும் முக்கியக் கருவிகளாகும். தமிழ் இனத்தின் பண்டைய நாகரிகத்தையும், வரலாற்றையும், பண்பாட்டுக் கூறுகளையும் துல்லியமாகக் கண்டறிய தொடர்ச்சியான அகழ்வாய்வுகள் அவசியமாகின்றன. தமிழ் மக்கள் இன்று அதிகம் நிலைபெற்றிருக்கும் பகுதிகள் மட்டுமன்றி, இந்த இனம் பரவலாகச் சென்றிருக்கக் கூடிய பல்வேறு பகுதிகளிலும் அகழ்வாய்வுகள் நிகழ்த்தப்படும் சூழலில் தமிழ் மக்களின் வரலாறு மேலும் தெளிவு பெறும். இதன் அடிப்படையில் காணும் போது தமிழ் இனத்தின் முக்கிய வாழ்விட நிலப்பகுதியாக உள்ள தமிழகம் மட்டுமன்றி அதன் தீபகற்ப இந்தியாவின் தென்கிழக்குப் பகுதியில் அமைந்துள்ள இலங்கையிலும் அதிக அளவில் தொல்லியல் அகழ்வாய்வுகள் முக்கியத்துவம் பெறுகின்றன.



அந்த ரீதியில் அண்மையில் இலங்கையின் மன்னார் மாவட்டத்திற்குட்பட்ட கட்டுக்கரை பகுதியில் யாழ் பல்கலைக்கழகத்தின் தொல்லியல் மற்றும் வரலாற்றுத் துறைகளின் தலைவர் டாக்டர்.புஷ்பரட்ணம் அவர்கள் தலைமையில் நிகழ்த்தப்பட்ட அகழ்வாய்வு முக்கியத்துவம் பெறுகின்றது. இந்த அகழ்வாய்வு பற்றிய செய்தியைச் சிக்காகோ நகரில் நடைபெற்ற பத்தாவது உலகத் தமிழ் ஆராய்ச்சி மாநாட்டு ஆய்வரங்கில்

ஈழத்திலிருந்து கலந்து கொண்ட பேராசிரியர் புஷ்பரட்ணம் ஆய்வுக்கட்டுரையாகச் சமர்ப்பித்தார்.



இந்த அகழ்வாய்வு வட இலங்கையில் கட்டுக்கரை என்ற இடத்தில் யாழ்ப்பாணப் பல்கலைக்கழகத்தின் நிதி உதவியுடன் மேற்கொள்ளப்பட்டது. இந்த ஆய்வரங்கின் தொகுப்பில் வட இலங்கையில் இதுவரை கண்டுபிடிக்கப்பட்ட மிகப் பெரிய புராதன குடியிருப்பு மையம் கட்டுக்கட்டுரையில் கண்டுபிடிக்கப்பட்டதாகக் குறிப்பிட்ட அவர், இலங்கைத் தமிழரின் பூர்வீக வரலாறு விஜயன் வருகைக்கு முன்னர் (2500ஆண்டுகளுக்கு முன்னர்) நிலவிய பண்பாடுகளிலிருந்து தொடங்குவதை இலங்கையில் தமிழ்மக்களின் மிக நீண்ட தொடர்பினை இது உறுதி செய்வதாக அமைந்தது என்பதோடு சிங்கள மொழி உருவாக்கம் பெற்றதாகக் கருதப்படும் காலகட்டமான கிபி 6 அல்லது 7க்கு முன்னரே தமிழர்கள் வாழ்ந்த நிலப்பகுதிதான் இன்றைய இலங்கை என்பதை உறுதி செய்வதாகவும் அமைகின்ற ஒரு மிக முக்கியச் சான்று காட்டும் ஆய்வாகவும் இது அமைந்துள்ளதை விளக்கினார்.



இலங்கையில் பெருங்கற்காலப் பண்பாட்டை அறிமுகப்படுத்தியவர்கள் நாகர் இனக்குழுவினர். இதற்கு அடிப்படையை வகுக்கும் சான்றாகப் பெருங்கற்கால மக்கள் தங்கள் இறை வழிபாட்டில் நாகத்தை குலமரபுத் தெய்வமாகக் கொண்டிருந்ததே காரணம் என்பதற்குக் கட்டுக்கரை அகழ்வாய்வின் போது கண்டுபிடிக்கப்பட்ட பல நாகர் சிலைகள், சிற்பங்கள் ஆகியவை சான்றுகளாக அமைகின்றன. இந்த ஆதாரங்களைத் தமது கட்டுரை சமர்ப்பித்தலின் போது ஆதாரமாக் காட்டியமை அமர்வில் கலந்து கொண்ட ஆய்வாளர்களுக்குப் புதிய செய்தியாக அமைந்தது.

அதுமட்டுமன்றி, நாகர் இன மக்கள் தமிழ் மொழி பேசிய மக்கள் தான் என்பதற்குச் சான்றாக அப்பண்பாட்டு மக்கள் பயன்படுத்திய மட்பாண்டங்களில் பொறிக்கப்பட்ட தமிழி (தமிழ் பிராமி) எழுத்துக்களையும், தமிழ்ப் பெயர்களையும் ஆதாரமாகக் காட்டியமை

ஆய்வாளர்கள் மத்தியில் பெரும் வரவேற்பைப் பெற்றது. இதன் வழி, வடஇந்தியாவில் இன்றைக்கு ஏறக்குறைய 2300 ஆண்டளவில் பிராமி எழுத்து தோன்றுவதற்கு 300 ஆண்டுகளுக்கு முன்னரே ( 2600 ஆண்டளவில் ) தமிழக நிலப்பரப்பில் தமிழி எழுத்து தோன்றி வழக்கிலிருந்தது என்பதோடு தமிழகத்திலும் இலங்கையிலும் புழக்கத்திலிருந்தது என்பதையும் உறுதிப்படுத்துவதாக அமைகிறது.



அந்த வகையில் தமிழி (தமிழ் பிராமி) எழுத்துக்கள் ஈழம் மற்றும் தமிழகத்தில் இருந்தே வட இந்தியாவிற்குச் சென்றிருக்கலாம் என்றும், வடஇந்திய பயன்பாட்டில் பிராமி எழுத்து அறிமுகமாகியது எனவும் தனது ஆய்வுரையில் பேராசிரியர் புஷ்பரட்ணம் வலியுறுத்தினார். தமிழ் எழுத்துருக்களின் தொன்மை பற்றிய ஆய்வுகளில் ஒரு மைல்கல்லாக இந்த அகழ்வாய்வு அமைந்திருப்பதைப் பேராசிரியர் புஷ்பரட்ணம் அவர்களது ஆய்வும் மாநாட்டுக் கட்டுரையும் நிரூபித்தன.



பேராசிரியர் புஷ்பரட்ணம் அவர்களது இக்கருத்தை ஏற்றுக் கொண்ட ஆய்வரங்கின் தலைவராகச் செயல்பட்ட இந்தியாவின் முதன்மைத் தொல்லியலாளர்களில் ஒருவரான பேராசிரியர் க. இராஜன் அவர்கள், சமகாலத்தில்

தமிழகத்திலும் இலங்கையிலும் தமிழ் மொழி, தமிழ் எழுத்தின் தொன்மையை அறிய மேற்கொள்ளப்பட்டு வரும் தொல்லியல் கண்டுபிடிப்புக்களாவன, ஈழத்தைத் தவிர்த்து விட்டு ஆராய முடியாது என்பதற்குக் கட்டுக்கரை அகழ்வாய்வுகள் சிறந்த உதாரணம் எனக் குறிப்பிட்டார். மேலும், பண்டைய தமிழக -இலங்கைப் பண்பாடு ஒரு ஒட்டுமொத்த பிராந்தியத்திற்குரிய பண்பாடாகவே பார்க்கப்பட வேண்டும் எனவும், அதற்குக் கட்டுக்கரை அகழ்வாய்வு சிறந்த சான்று எனவும் குறிப்பிட்டார்.

ஓராண்டுக் காலம் நடைபெற்ற இந்த மன்னார் மாவட்ட கட்டுக்கரை அகழ்வாய்வின் மூலம் ஈழத்தமிழர் வரலாற்றின் பல முடிச்சுக்களைக் கட்டுக்கரை அகழ்வாய்வுகள் கட்டவிழ்த்து விட்டிருப்பதாகவும் பாராட்டிப் பேசினார். பேராசிரியர் இராஜன் அவர்களது முனைவர் பட்ட ஆய்வு மாணவர் பேராசிரியர் புஷ்பரட்ணம் என்பது குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

இந்த ஆய்வரங்கில் கலந்து கொண்ட பல அறிஞர்கள் எழுப்பிய கேள்விகளுக்குப் பேராசிரியர் இராஜன் மற்றும் பேராசிரியர் புஷ்பரட்ணம் ஆகிய இருவரும் பகிர்ந்து கொண்ட கருத்துக்கள் விளக்கமான பதில்களாகத் தெளிவைத்தரும் வகையில் அமைந்தன. கடந்த 10ம் உலகத் தமிழ் ஆராய்ச்சி மாநாட்டில் சமர்ப்பிக்கப்பட்ட ஆய்வுக் கட்டுரைகளில் தமிழ் வரலாறு மற்றும் பண்பாடு தொடர்பான ஆய்வுத் தளங்களில் முக்கியத்துவம் பெறுகின்ற கட்டுரைகளில் இதுவும் ஒன்று.

தொடர்பு: முனைவர் க.சுபாஷிணி (ksubashini@gmail.com)

## 2. அசோகனுக்கு முன் இலங்கையில் பௌத்தம்

*– ப. முகுந்தன்*

இந்தக்கட்டுரையின் நோக்கம் இலங்கையில் பௌத்தத்தின் தோற்றம் பற்றிய பல்வேறு கருதுகோள்களைப் பற்றிய ஒரு அறிமுக உரையாடலாகும்.



உரையாடப்படும் விடயங்கள்:

1. அசோக மன்னன் காலத்தில் மகிந்த தேரரால் அனுராதபுர மன்னன் தேவநம்பிய தீசன் பௌத்தத்திற்கு மாற்றப்பட்டமை.
2. புத்தரின் மும்முறை இலங்கை வருகை.
3. புத்தர் ஞானம் பெற்ற காலத்தில் அவரது கேசதாதுவை வைத்து நாக அரசுக்குட்பட்ட கிழக்கிலங்கையில் உருவாக்கப்பட்ட உலகின் முதலாவது பௌத்த தூபி.

மகாவம்சம் கூறும் பௌத்த வரலாறு பொ.மு 3ம் நூற்றாண்டில் இந்தியாவில் பேரரசினை நிறுவிய மௌரியச் சக்கரவர்த்தி அசோகனின் மகன் மகிந்த தேரருடன் ஆரம்பமாகிறது. அசோகச் சக்கரவர்த்தி பௌத்த மதத்தைத் தழுவி, பின்னர் மூன்றாவது பௌத்த மகா நாட்டினை நடாத்தி பௌத்த மதத்தை உலகெங்கும் பரப்புவதற்காகத் தூதுக்குழுக்களை அனுப்பினான். அதன்படி

அசோகரின் மகன் மகிந்தரும் குழுவினரும் இலங்கை மிகிந்தலை மலையை வந்தடைந்தனர்.

அனுராதபுரத்தை ஆண்ட தீச மன்னன் வேட்டையாடுவதற்காக மிகிந்தலை மலையை வந்தடைந்தான். அங்கே தீச மன்னனைச் சந்தித்த மகிந்ததேரர், மன்னனுக்கும் அவனது பரிவாரங்களுக்கும் சூளகதிபதூபம சூத்திரத்தை உபதேசித்து பௌத்தத்திற்கு மாற்றிக்கொண்டார். இது நிகழ்ந்தது புனித பொசன் முழுமதி தினத்திலாகும்.

மகாவம்சத்தின் முதலாம் அத்தியாயம் புத்தரின் மும்முறை இலங்கை வருகையைப் பற்றி விவரிக்கின்றது. தனது மார்க்கம் பிற்காலத்தில் புகழுடன் திகழப்போகும் இடம் இலங்கை எனத் தெரிந்திருந்த புத்தர் இலங்கையில் நிரம்பியிருந்த இயக்கர்களை விரட்டுவதற்கு முதன்முறை இலங்கைக்கு வந்தார். அவர் 'ஞானம் பெற்று 9ம் மாதத்தில்' தைப்பூச முழுமதி தினத்தில் இலங்கை வந்தார். தற்போதைய மகியங்கனை ரஜ மகா விகாரை அமைந்துள்ள மகாநாகவனம் என்னும் இடத்தில் எல்லா இயக்கர்களும் கலந்துகொள்ளும் இயக்கர்களின் பேரவைக் கூட்டம் நடைபெறும்போது புத்தர் அங்கே சென்றார். மழையையும் புயலையும் இருளையும் உண்டாக்கச் செய்து இயக்கர்களை அச்சமடைய வைத்த புத்தர் கேட்டதற்கிணங்க இயக்கர்கள் மகாமேகவனத்தை விட்டு கிரித்துவீபத்திற்குச் சென்றனர். அதன்பின் புத்தர் தேவர்களை அங்கே வரவழைத்தார்.

தேவ வம்ச அரசன் மகா சுமணன் சமந்தகூட மலையை (சிவனொளிபாதமலை) ஆண்டுவந்தான். புத்தரின் போதனைக்குப் பின் அனைத்துத் தேவர்களும் பௌத்தத்தைத் தழுவினர். வணங்கத்தக்க எதையாவது தரும்படி மகா சுமணன் கேட்டுக்கொண்டதற்கிணங்க புத்தர் கொடுத்த தலைமுடியை, புத்தர் அமர்ந்திருந்த இடத்தில் நவரத்தினங்களைக் குவித்து அதன்மீது வைத்து மகியங்கனை தூபி தாபிக்கப்பட்டது. அதன்பின் அவர் இந்தியாவின் மகத நாட்டு உருவெலவுக்குத் திரும்பிச் சென்றார்.

புத்தரின் இரண்டாவது வருகை அவர் 'ஞானம் பெற்ற 5ம் ஆண்டில்' சித்திரை முழுமதி தினத்தில் நிகழ்ந்தது. அக்காலத்தில் நாகதீபத்தை (யாழ்ப்பாணக் குடாநாடு) ஆண்டவன் மகோதர நாகன். அவன் சகோதரி கண்ணவர்த்தமானம் எனும் நாட்டை ஆண்ட நாக மன்னனை மணமுடித்திருந்தாள். அவர்களது மகன் சூலோதரன். மகோதரனின் தந்தையால் மகோதரனின் சகோதரிக்குக் கொடுக்கப்பட்டிருந்த இரத்தின சிம்மாசனத்தை யார்

வைத்திருப்பது என்ற போட்டியில் மகோதரனுக்கும் அவனது மருமகன் சூலோதரனுக்கும் போர் நிகழும் சூழல் ஏற்பட்டது.

அங்கு வந்த புத்தர் நாகர்கள் மீது இருள் கவியச் செய்தார். அச்சமுற்ற நாகர்களின் அச்சத்தைப் போக்கி ஒளி ஏற்பட வழிசெய்து சமாதானத்தைப் போதித்தார். போருக்குத் தயாரான இரு நாகப் பிரிவுகளும் ஒன்றுபட்டு தங்கள் சண்டைக்குக் காரணமாயிருந்த இரத்தின சிம்மாசனத்தைப் புத்தருக்கு அளித்து அவரைச் சரணடைந்தனர். அவர்கள் அளித்த அமுதை உண்டுவிட்டு புத்தர் அவர்களைப் பௌத்தத்திற்கு மாற்றினார். அப்போரில் கலந்துகொள்ள கல்யாணி (களனி) நாக மன்னன் மணியக்கிகனும் வந்திருந்தான். அவன் மகோதரனின் தாய்மாமனாவான். அவன் மீண்டும் ஒருமுறை தமது நாட்டுக்கு வரும்படி புத்தரை வேண்டிக்கொண்டான். அதற்குச் சம்மதித்த புத்தர் மகத நாட்டு ஜேதவனத்திற்குத் திரும்பினார்.

இச் சம்பவத்தை ஐம்பெரும் தமிழ் காப்பியங்களுள் ஒன்றான மணிமேகலை "வேக வெந் திறல் நாக நாட்டு அரசர் சின மாசு ஒழித்து மன மாசு தீர்த்து ஆங்கு அறச் செவி திறந்து மறச் செவி அடைத்து பிறவிப் பிணி மருத்துவன் இருந்து அறம் உரைக்கும் திருந்து ஒளி ஆசனம் சென்று கைதொழுதி" என்று குறிப்பிடுகின்றது. (மணிமேகலை - பீடிகை கண்டு பிறப்புணர்ந்த காதை)

புத்தரின் மூன்றாவது வருகை அவர் 'ஞானம்பெற்ற 8ஆம் ஆண்டில்' நடந்தது. மணியக்கிகன் அவரைச் சந்தித்து தமது நாட்டிற்கு வரும்படி அழைத்தான். வைகாசி முழுமதி தினத்தன்று ஐந்நூறு பிக்குகள் புடைசூழக் கல்யாணி நாட்டிற்கு அவர் சென்றார். அங்கு ரத்தினங்கள் பதிக்கப்பட்ட மண்டபத்தில் பிக்குகளுடன் அமர்ந்தார். அவர் அமர்ந்த இடத்தில் பிற்காலத்தில் களனி ரஜமகா விகாரை கட்டப்பட்டது. நாகமன்னனின் உபசரிப்பிற்குப் பின்னர் அவர்களுக்கு உபதேசம் செய்தபின் சுமணகூட மலைக்குப் புறப்பட்டார். அங்கே தனது பாதச்சுவடுகளைப் பதித்தபின்னர் ஜேதவனத்திற்குத் திரும்பினார்.

மேற்குறிப்பிட்ட சம்பவங்களைக் கூறும் மகாவம்சம் பொ.பி 5ம் நூற்றாண்டில் தாதுசேன மன்னன் காலத்தில் மகாநாம தேரரால் எழுதப்பட்டது. தேவநம்பிய தீசனால் ஸ்தாபிக்கப்பட்ட மகாவிகாரையைச் சேர்ந்த பிக்குகளால் காலத்துக்குக்காலம் நடைபெற்று வந்த நிகழ்வுகள் தொகுக்கப்பட்டுப் பேணப்பட்டுவந்தன. அவை அட்டகதா என அழைக்கப்பட்டன. இதனை மூலமாகக் கொண்டு மகாவம்சம் எழுதப்பட்டது.

மகாவம்சத்தில் புத்தரின் மும்முறை இலங்கை வருகையைப் பற்றி விரிவாகக் கூறப்பட்டிருந்தாலும் புத்தரின் போதனைகளின் தொகுப்பான திரிபிடகத்தில் அது பற்றி எந்தக் குறிப்பும் இல்லை.

மகாவம்சத்தைப் பாளி மொழியிலிருந்து ஜெர்மன் மொழிக்கு 1908ஆம் ஆண்டு மொழிபெயர்ப்புச் செய்தவர் வில்லியம் கெய்கர் என்னும் ஜெர்மன் அறிஞராவார். அவர் மகாவம்சம் மொழிபெயர்ப்புக்கு வழங்கிய அறிமுகவுரையில் மகிந்தருக்கு முன்பும் பலர் இலங்கைக்குப் புத்தமதத்தைப் பரப்புவதற்கு முயன்றுள்ளனர் எனக் கூறியுள்ளார். மகிந்தர் அனுராதபுர மன்னனை வெற்றிகரமாக மதம்மாற்றியதாலேயே அவரது பெயர் நிலைத்திருப்பதாகக் கூறுகின்றார்.

> (But at what result do we arrive if we put together these established facts and the mention of Ceylon in the earlier Asoka Inscriptions? Simply and solely that which is self- evident, namely, that before Mahinda relations existed between continental India and Ceylon and efforts were made to trans- plant the Buddhist doctrine to Ceylon. But with Mahinda this process comes to a successful end. We can understand therefore that all the interest became con- centrated in his person, and that tradition wrought together in dramatic fashion that which was a thing of slow con- tinuous development. But it shows us that, even from the point of view of the Chronicles of Ceylon, Buddhism was not quite unknown in that country already before Mahinda's time. - Mahavamsa : the great chronicle of Ceylon , Wilhelm Geiger, 1912)

மகாவம்சம் குறிப்பிடும் புத்தரின் வருகை மற்றும் மகிந்தரின் வருகை காலத்திற்கு முன்பு பௌத்தத்தின் இலங்கை வருகை நிகழ்ந்திருக்கின்றது. புத்தரின் புனித கேசதாதுவை வைத்துக் கிழக்கிலங்கையில் ஒரு தூபியும் உருவாக்கப்பட்டிருக்கின்றது.

கௌதம புத்தர் நேபாளத்தில் சாக்கிய குல மன்னர் சுத்தோதனுக்கும் மாயாவுக்கும் சித்தார்த்தர் என்ற பெயரில் பிறந்தார். தனது 16ஆவது வயதில் யசோதரையை மணந்து ராகுலன் என்ற மகனைப் பெற்றார். தனது 29ம் வயதில் வாழ்க்கையின் துன்பங்களைப் பற்றி யோசிக்கவைக்கும் சம்பவங்களைக் கண்டார். குடும்பத்தையும் அரச சுகபோகங்களையும் விட்டு வாழ்வின் இரகசியத்தைத் தேடிக் கானகம் சென்ற சித்தார்த்தர் கடும்பட்டினியுடன் உடலை வருத்தித் தியானம் செய்தார். உடலை இறுக்கிக் கடுமையாக இருப்பதால் தான் தேடுவது கிடைக்காது என்று உணர்ந்துகொண்ட அவர், சுஜாதா எனும் சிறுமி கொடுத்த பாற்சோறு வாங்கி உண்டுவிட்டு தியானத்தில் ஆழ்ந்தார். 49 நாட்கள் தொடர்ந்த தியானத்தின் பின் வாழ்வின் உண்மையை உணர்ந்து ததாகரானார். அந்நிகழ்வே புத்தர் ஞானம் பெற்ற நிகழ்வாகக் கூறப்படுகின்றது. அவர் ஞானம் பெற்றபின் உண்ட முதலாவது உணவை வழங்கியவர்கள் தபுஸ்ஸ மற்றும் பல்லுக என்னும் இரு சகோதரர்கள்.

தபுஸ்ஸ மற்றும் பல்லுக இருவரும் வர்த்தகத்திற்காக இந்தியா வந்த சகோதரர்கள். பல்வேறு நாடுகளுக்கும் பயணித்துவிட்டு மகத நாட்டின் தலைநகரம் ராஜகிருகத்திற்குச் செல்லும் வழியில் புத்தரைக் கண்டார்கள். போதிமரத்தடியில் ஞானம் பெற்ற நிலையிலிருந்த புத்தர் அவர்கள் வழங்கிய தேன் கலந்த அரிசி உணவை உண்டார். சகோதரர்கள் இருவரும் அவரின் சீடரானார்கள்.

சிறிது காலத்தின் பின் அவர்கள் தங்கள் நாட்டுக்குத் திரும்பிச் செல்ல விரும்பினார்கள். தங்களுக்கு வணங்குவதற்காக ஏதாவது தரும்படி அவர்கள் கேட்க புத்தர் தனது தலையிலிருந்து எட்டுத் தலைமுடிகளை எடுத்து அவர்களிடம் கொடுத்தார்.

தங்கள் நாட்டிற்குத் திரும்பும் வழியில் அவர்கள் கிழக்கிலங்கையிலுள்ள திரியாய் என்ற இடத்தை அடைந்தனர். திரியாய் பிரசித்திபெற்ற நாகர் குடியிருப்பாகும். பண்டைய வர்த்தகத் துறைமுகத்துடன் குடியிருப்புக்களையும் கொண்டிருந்த திரியாயில் கந்தசாமிமலை என்று அழைக்கப்படும் ஒரு சிறிய குன்றில் அவர்கள் தங்கியிருந்து தமது வர்த்தக நடவடிக்கைகளைச் செய்தனர். வர்த்தகம் முடிந்தபின்னர் நாடு திரும்ப விரும்பிய சகோதரர்கள் புத்தரின் கேசதாது வைக்கப்பட்டிருந்த பாத்திரத்தை எடுக்க முயன்றபோது அதனை வைக்கப்பட்ட இடத்திலிருந்து தூக்க முடியவில்லை. அதன்பின்னர் அங்கே ஒரு சிறிய ஒரு தூபி கட்டப்பட்டு கேசதாதுவில் ஒருபகுதி அங்கே வைக்கப்பட்ட பின் அவர்கள் மீதியைக் கொண்டு தம்நாடு திரும்பினார்கள்.




திரியாய் கிரிகண்டி சைத்தியம் (பட உதவி : Vathsala Karunanayake)

கிரிகண்டிக சைத்தியம் எனும் அவ்விகாரை பொ.பி 8ம் நூற்றாண்டளவில் பெரிதாக்கிக் கட்டப்பட்டது. பல்லவர் பாணியில் அமைக்கப்பட்ட துவாரபாலகர் மற்றும் மகாயான பௌத்தத்தின் சுவடுகளை இன்றும் அங்கே காணலாம். ( அவலோகிதேஸ்வரர் - Icongraphy of Avalok Itesvara in Mainland South East Asia, Nandana Cūṭivoṅgs, 1984)

பொ.பி 8ம் நூற்றாண்டில் ஆறாம் அக்கபோதி மன்னன் காலத்தில் பல்லவ கிரந்தத்தில் சமஸ்கிருத மொழியில் எழுதப்பட்ட கல்வெட்டொன்று கிரிகண்டி சைத்தியத்தில் காணப்படுகின்றது. மேற்குறிப்பிடப்பட்ட தபுஸ்ஸ மற்றும் பல்லுக சகோதரர்களால் இத் தூபி ஸ்தாபிக்கப்பட்டதை அக்கல்வெட்டுக் குறிப்பிடுகின்றது.





Tiriyay rock inscription - Epigraphia Zeylanica 4 - H. W. Codrington & Paranavitana, S.

**TRANSLATION.**[3]

...... by [those] who were having hearts of unceasing devotion, of pure virtue, who desired the merit of being the very first to give[4] ....... in the Blessed One, the incomparable teacher, the ornament of Śakya kings, the Sugata ...... who had excellently obtained relics[5] ...... in the presence of ..... by the companies of merchants who were skilful in navigating the sea, engaged in buying and selling and who [possessed] a display of goods laden in sailing vessels of divers sorts, owing to the influence of merit, by a friendly *devatā* who was of their own [kin][6] .... to come ...... having crossed the ocean, ..... as performed by all the companies of merchants who were very tranquil, who possessed [various] virtues united together [in them], including the inhabitants of the city who had come [there][7], with unabated pleasure ...... that which is known in the world as the excellent **Girikaṇḍika-caitya** ....... where offerings have been made, which contains charming grounds of courtyards, which is frequently worshipped with devotion by multitudes of pious men, having worshipped that excellent **Girikaṇḍika-caitya** ....... the Great Sage, who is manifested ...... where dwells always the Bodhisattva[1], the teacher, known as **Avalokiteśvara,** who is worthy to be honoured by gods and *kinnaras*, ...... the Blessed One .... that **Girikaṇḍika-caitya,** I, too, ..... the Sage, too, of sweet speech, the burning poison of mental transgression[2] ....... where the Blessed One, of very delicate body, attains indeed a corporeal splendour beautified by the brightness of golden ornaments[3], that excellent **Girikaṇḍa-caitya,** I, too, do worship ....... **Girikaṇḍi[ka-caitya]**, to which divine nymphs, [bearing] scented water in receptacles made of lotus leaves from the celestial river, and carrying, held in their hands, flowers, incense, jewel-lamps, and oblations, descend gracefully from the heavenly city, and perform, with delight, the worship, of the Blessed One. .......... the king of gods, too, followed by numerous attendant gods, does obeisance at the excellent **Girikaṇḍika,** [sounding] very lovely celestial chanks, drums ..... and scattering heaps of fresh flowers produced in the celestial trees ....... worshipped daily, on the great rock ..... [at which are] hundreds of ...., worthy to be honoured, prepared by the **lord of the Siṁhalas** and [his] people ...... which causes freedom from affliction .... I, too, worship the [relic] of the Buddha deposited in **Girikaṇḍi** which is adored by multitudes of noble ones ....... of the Blessed One, which dispels all darkness, ...... with mind bent on the shrine of the **Girikaṇḍi-caitya** ...... whatever merit has been caused, by that let the miseries of existence of the world be reduced ...... the **Girikaṇḍi-caitya** founded by the companies of merchants [named] **Trapussaka** and **Vallika**[4]. All phenomena are transitory.

இக்கதையின் ஒரு வடிவம் பர்மா ஷ்வேடகோன் தூபிக் கல்வெட்டில் காணப்படுகின்றது. (Ephigraphia Birmanica Vol I Part I) அதன்படி தபுஸ்ஸ மற்றும் பல்லுக பர்மிய வர்த்தகர்கள். புத்தரிடமிருந்து பெற்ற 8 முடிகளில் இரண்டை மகத மன்னன் அஜாத சத்ருவின் வேண்டுகோளிற்கிணங்க அவரிடம் கொடுத்தனர். அஜாத சத்ரு புத்தரின் நண்பரான பிம்பிசார மன்னனின் மகன். அதன்பின் கப்பலில் பயணம் செய்த அவர்கள் நாகநாட்டு மன்னன் ஜெயசேனனிடம் இன்னும் இரண்டை இழந்துவிட்டு பர்மா திரும்பினார்கள்.

அங்கு ஆட்சிபுரிந்த ஓகலப்ப மன்னரின்(யாங்கன்) உதவியுடன் சிங்குட்தரா மலையில் எஞ்சிய முடிகளை வைத்துத் தங்கத் தூபி எனப்படும் ஷ்வேடகோன் தூபி கட்டப்பட்டது.



ஷ்வேடகோன் தூபி

பர்மிய அரசர்களின் வரலாறான The Glass Palace Chronicle கிரிகண்டி பற்றி இன்னொரு வரலாற்றைக் கூறுகின்றது. ( Glass Palace Chronicle Of The Kings Of Burma ,1924, Page 94) தபுஸ்ஸ மற்றும் பல்லுக வுக்குத் தெரியாமல் நாக அரசன் ஜெயசேனன் புனித கேசதாதுவைத் திருடியதாகவும் , அது பின்னர் காவந்தீச மன்னன் காலத்தில் (பொ.பி 2ம் நூற்றாண்டு) அது தோண்டியெடுக்கப்பட்டு சேருவில் மங்கள மகா விகாரை கட்டப்பட்டதாகவும் கூறுகின்றது. உருகுணையை ஆண்ட காவந்தீச மன்னன் புகழ்பெற்ற துட்டகைமுனு மன்னனின் தந்தையாவான். இதன்படி கிரிகண்டிக சைத்தியம் கட்டப்பட்ட காலத்தில் திரியாய் நாக மன்னன் ஜெயசேனனால் ஆளப்பட்டிருக்கின்றது.

திரிபிடகத்தின் விநயபிடகம் - மகாவிபங்க பகுதியிலும் தபுஸ்ஸ மற்றும் பல்லுக சகோதரர்கள் குறிப்பிடப்படுகின்றனர். (The Book of the discipline (Vinaya-pitaka) Vol iv ( Mahavagga) - Horner, I. B , 1962 - Page 5)

பொ.பி ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்த புகழ்பெற்ற சீனப் பயணி யுவான் சுவாங் தபுஸ்ஸ மற்றும் பல்லுக சகோதரர்கள் பற்றிக் குறிப்பிடும் போது

கேசதாதுவைக் கொடுத்த புத்தர் தனது ஆடையைச் சதுரமாக மடித்து அதன் மேல் பிச்சைப்பாத்திரத்தைத் தலைகீழாக வைத்து ஸ்தூபி உருவாக்கும் மாதிரி உருவையும் அவர்களுக்குப் போதித்தாகக் குறிப்பிடுகின்றார். (Relics of the Buddha - By John S. Strong, Stephen Teiser , 2004)

இலங்கையில் மட்டுமல்ல உலகத்திலேயே முதன்முதலில் கட்டப்பட்ட புத்த ஸ்தூபி மற்றும் புத்தரால் அதன் வடிவமைப்புக் கூறப்பட்டு அதன்படி கட்டப்பட்டது என்ற பெருமையும் திரியாய் கிரிகண்டி சைத்தியத்தையே சாருகின்றது என்று John S. Strong தனது Relics of the Buddha புத்தகத்தில் குறிப்பிடுகின்றார்

திரியாய் கந்தசாமி மலையில் வேறு இரண்டு பிராமிக் கல்வெட்டுக்களும் கண்டெடுக்கப்பட்டுள்ளன என்று பேராசிரியர் செ.பரணவிதான Epigraphia Zeylanica 4இல் கூறுகின்றார். அதில் ஒன்று கிறிஸ்துவுக்கு முற்பட்ட காலத்தையது. சமஸ்கிருத மொழியில் எழுதப்பட்டிருக்கும் கல்வெட்டு மற்றும் அவலோகிதேஸ்வரர் வழிபாடு நிலவியிருந்ததை வைத்து மகாயான பௌத்தத் தலமாக கிரிகண்டிக விகாரையைக் குறிப்பிடுகின்றார். 13ம் நூற்றாண்டில் எழுதப்பட்ட பூஜாவளியவும் இச்சம்பவத்தைக் குறிப்பிடுவதாக அவர் மேலும் கூறுகின்றார்.

(பொது யுகத்திற்கு முன்(கிறிஸ்துவுக்கு முன்) எழுதப்பட்ட பிராமிக் கல்வெட்டில் ”உதியனின் மகளின் குகையும் பிகல அனுதியின் குகையும் சங்கத்தாருக்குத் தானமாகக் கொடுக்கப்பட்டதைக்” கூறுகின்றது எனப் பேராசிரியர் செ.பரணவிதான குறிப்பிடுகின்றார். - Ceylon Journal of Science Section G Vol 2 Page 117)

மகாவம்சத்தின் படி இலங்கையின் அரச வம்சம் விஜயன் வருகையுடனே ஆரம்பிக்கின்றது. புத்தர் தனது 80 ஆவது வயதில் இரட்டைச் சாலமரத்தடியில் பரிநிர்வாணம் அடைந்த நாளில் இலங்கைக்கு விஜயன் வந்ததாக மகாவம்சம் 7ம் அத்தியாயத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. (விஜயன் வரும்போது இலங்கையை காளிசேன நாகன் ஆண்டதாக மட்டக்களப்பு மான்மியம் குறிப்பிடுகின்றது. ) புத்தர் ஞானம் பெற்றுச் சில ஆண்டுகளுக்குள் நடைபெற்ற மேற்குறிப்பிட்ட சம்பவங்களைத் தொகுத்துப்பார்க்கும் போது விஜயன் வருகைக்கு முன்னரே இலங்கையில் இயக்க, நாக, தேவ வம்சங்களால் பௌத்தம் பின்பற்றப்பட்டமை தெளிவாகின்றது.

முடிவுரை:

இலங்கையில் பிரபலமாகக் காணப்பட்ட பௌத்த பிரிவுகள் தேரவாத மற்றும் மகாயானமாகும். தென்னிந்தியாவிலிருந்து பரவிய மகாயான பௌத்தம் மகாசேனன்(பொ.பி 325-352) காலத்தில் வலுவாகக் காணப்பட்டது. (

மட்டக்களப்பு மான்மியம் மகாயான பௌத்தத்தை வைதூலிக சைவம் எனக் கூறுகின்றது ) . மகாசேனனின் தேரவாத எதிர் நடவடிக்கைகளால் தேரவாத – மகாயான பூசல் உச்சத்தை எட்டியது. பின்னர் பொ.பி 12 ம் நூற்றாண்டளவில் மகா பராக்கிரமபாகுவினால் இலங்கையில் தேரவாதம் மீண்டும் முக்கியத்துவம் பெற்று மகாயானம் வலுவிழந்துவிடுகின்றது .

வடக்கு மற்றும் கிழக்கிலங்கைக் கந்தரோடை, வல்லிபுரம், திரியாய் , குச்சவெளி போன்ற பிரதேசங்களில் கிடைத்த சாசன ஆதாரங்களின்படி இலங்கையின் வடகிழக்குப் பிரதேசங்களில் பொ.பி 10 ம் நூற்றாண்டு வரை மகாயான பௌத்தம் பரவலாகக் காணப்பட்டுள்ளது.

மகாவம்சம் எழுதப்பட்டது தேரவாத பௌத்தத்தைப் பின்பற்றும் பிக்குகளின் பிரதான தலமான மகாவிகாரையைச் சேர்ந்த பிக்குவான மகாநாமதேரரால் ஆகும். மகாயான- தேரவாதப் பூசலின் விளைவாக மகாயானப் பௌத்த முக்கிய தலங்களை முன்னிலைப்படுத்தாமல் தேரவாதத் தலங்களை முன்னிலைப்படுத்தும் போக்கு மகாவம்சத்தில் காணப்படுகின்றது. கிரிகண்டி சைத்தியம் ஸ்தாபிக்கபட்ட நிகழ்வும் மகாவம்சத்தில் காணப்படவில்லை.

இலங்கையில் அசோகனுக்கு வெகுகாலம் முன்பே பௌத்தத்தின் அறிமுகம் நிகழ்ந்த முக்கிய நிகழ்வான கிரிகண்டிக சைத்தியம் ஸ்தாபிக்கப்பட்ட நிகழ்வு இலங்கை வரலாற்றில் மகாவம்சத்தின் ஒளியின் முன் மங்கியே காணப்படுகின்றது.

உசாத்துணை நூல்கள்:

1. Mahavamsa : the great chronicle of Ceylon , Wilhelm Geiger, 1912
2. மகாவம்சம் எஸ். சங்கரன், 1962
3. Epigraphia Zeylanica 4 1904-1934, H. W. Codrington & Paranavitana, S.
4. Glass Palace Chronicle Of The Kings Of Burma ,1924
5. Ephigraphia Birmanica Vol I Part I
6. The Book of the discipline (Vinaya-pitaka) Vol iv ( Mahavagga) - Horner, I. B , 1962
7. மட்டக்களப்பு மான்மியம் , எவ். எக்ஸ். சி. நடராசா - 1998

தொடர்பு: ப. முகுந்தன் (mukunthan@gmail.com)

# 3. சூளவம்சம் நூல் சொல்லும் செய்தி

***– முனைவர் க.சுபாஷிணி***




நூலாசிரியர் - முனைவர்.க.குணராசா

பதிப்பு - கமலம் பதிப்பகம், யாழ்ப்பாணம்

(பகுதி 1)

இலங்கை வரலாற்றைக் கூறும் முக்கிய நூல்களுள் 'மகாவம்சம்' சிறப்பிடம் பெறுகின்றது. மகாவம்சம் என்ற நூலுடன் 'சூளவம்சம்' என்ற நூலும் வரலாற்றுச் செய்திகளை வழங்கும் முக்கிய நூலாகக் கருதப்படுகின்றது. அடிப்படையில் 'தீபவம்சம்' என்ற நூலின் திருத்தப்பட்ட வடிவமே மகாவம்சம் என்ற நூலாகும். இதனை எழுதிய ஆசிரியராக மகாநாமதேரர் என்பவர்.

தீபவம்சம் என்னும் இந்த நூல் சொல்லும் செய்திகள் 100 பகுதிகளாக அமைந்தவை. தீபவம்சம் என்ற மூல நூலில் குறிப்பிடப்படும் 37 அத்தியாயங்கள் மகாவம்சத்தில் அடங்கியுள்ளன. தீபவம்சம் முழுமையாகப் பாளி மொழியில் எழுதப்பட்டதாகும். தீபவம்சம் என்ற இந்தப் பாளி மொழியில் அமைந்த நூலை மொழி பெயர்த்தவர் வில்லியம் கெய்கர். முதல் 37 பகுதிகளைக் கொண்டு அமைக்கப்பட்ட நூலாக மகாவம்சம் என்ற பெயருடன் முதற்பகுதி விளங்குகின்றது. எஞ்சிய பகுதிகள் அதாவது, 38 ஆம் பகுதி தொடங்கி 100 ஆவது அத்தியாயம் வரையான தொகுப்பு சூளவம்சம் என்று பெயருடன் விளங்குகின்றது. இது தவிர ஜோர்ஜ் ரேனர் என்பவர் தீபவம்சம் நூலில் உள்ள நூறு

அதிகாரங்களையும் மகாவம்சம் என்ற பெயருடன் மொழிபெயர்த்தார் என்பதும் நூல் வழங்கும் செய்தி.

வில்லியம் கெய்கர் பாளி மொழியில் அமைந்த தீபவம்சம் நூலை ஜெர்மானிய மொழிக்கு மொழி பெயர்ப்பு செய்தார். பின்னர் அது ஆங்கில மொழிக்கு மொழிமாற்றம் செய்யப்பட்டது. ஆனால் ஜோர்ஜ் ரேனர் பாளியிலிருந்து நேரடியாக ஆங்கில மொழிக்கு மொழி பெயர்த்துள்ளார்.

வில்லியம் கெய்கர் மொழிபெயர்த்து வழங்கிய முதல் 37 பகுதிகளைக் கொண்ட மகாவம்சம், கௌதம புத்தரின் இலங்கைக்கான பயணத்தை முதலாவது அத்தியாயமாகக் கொண்டு தொடங்குகின்றது. அதாவது கி.மு. 483லிருந்து கி.பி. 362 ஆம் ஆண்டு வரை அமைந்த வரலாற்றுச் செய்திகளை விவரிப்பதாக இந்த முதல் 37 பகுதிகளில் அமைகின்றது. மகாவம்சத்தின் அடிப்படையில் விஜயன் முதலாவது மன்னனாக அறியப்படுகின்றான். மகாவம்சம் நூலின் 58ஆவது மன்னனாக மகாசேனன் என்பவன் குறிப்பிடப்படுகின்றான். இதன் தொடர்ச்சியாக, அதாவது 37ஆவது அத்தியாயம் தொடங்கி 100வது அத்தியாயம் வரை அமைகின்ற சூளவம்சம் நூல், மகாசேனனின் மகன் மேகவண்ணன் ஆட்சி காலம் முதல் தொடங்குகின்றது. அவனது ஆட்சி ஆண்டு கி.மு 362 முதல் இறுதி மன்னனான ஸ்ரீ விக்கிரமசிங்கனின் ஆட்சிக் காலமான கி.பி.1815 வரையிலான மன்னர்களைப் பற்றி சூளவம்சம் சொல்கின்றது.

மகாவம்சம் நூலில் முக்கியத்துவம் வழங்கப்படும் மாமன்னனாக மாமன்னன் துட்டகாமினி குறிப்பிடப்படுகின்றான். சூளவம்சம் நூலில் முக்கியத்துவம் பெறுகின்ற மன்னனாக பராக்கிரமபாகு குறிப்பிடப்படுகின்றான்.

மகாவம்சம் நூலைத் தமிழ் மொழிக்கு மொழி பெயர்த்த முனைவர் கா. குணராசா அவர்களே சூளவம்சம் கூறுகின்ற வரலாற்றுச் செய்தியையும் தமிழில் மொழிபெயர்த்து வழங்கியிருக்கின்றார். அவற்றுள் பராக்கிரமபாகு தொடர்பான செய்திகள் நான்கு அத்தியாயங்களில் அமைகின்றன.

சூளவம்சம் நூலை முழுதும் வாசிக்கும்போது இலங்கை மன்னர்கள் ஆட்சியில் தொடர்ச்சியான மன்னர் பாரம்பரியம் என்ற நிலைக்கே வாய்ப்பில்லை என்பதைத் தெளிவுபடுத்துகின்றது. தொடர்ச்சியான போர், நிலையற்ற அரசு, சகோதரர்களுக்குள் பிரிவு, சகோதரர்களுக்குள் துரோகம், தந்தையைக் கொல்லும் மகன், மன்னரை வீழ்த்திவிட்டு பதவியைக் கைப்பற்றும் சேனாதிபதி, சில நூற்றாண்டுகளுக்கு பின்னர் மீண்டும் வந்து ஆட்சியைக் கைப்பற்றும் வாரிசுகள், கொடூரமான தண்டனைகள், பெண்கள் அரசியல் ரீதியாக நட்புறவை நாடுவதற்காகத் திருமணத்தில் பயன்படுத்தப்பட்ட வரலாற்றுச் செய்திகள்,

பௌத்தத்தின் எழுச்சி, 3 வகை பௌத்த நெறிகள், தமிழகத்தை ஆண்ட மன்னர்கள் ஏற்படுத்திய தாக்கம், பாண்டிய மன்னர்களுக்கும் இலங்கை அரசுக்கும் இருந்த நெருக்கமான தொடர்பு, சோழமன்னர்கள் ஏற்படுத்திய போர், அதனால் விளைந்த விளைவு, போர்த்துகீசிய மற்றும் டச்சுக்காரர்கள் வணிகத்திற்காக வந்து பின்னர் படிப்படியாக இலங்கைத் தீவு முழுமையும் அந்நியர்களின் கைக்கு மாறிய வரலாறு என்று சூளவம்சம் வரலாற்றுச்செய்திகளைப் பதிந்து தருகின்றது, பெரும்பாலான செய்திகள் வரலாற்றுக் குறிப்புகள் என்று எடுத்துக் கொண்டாலும் கூட, ஆங்காங்கே கற்பனைக் கதைகள் புகுத்தப்பட்டிருக்கின்றன என்பதையும் காணமுடிகின்றது.

சூளவம்சம் பற்றிய இந்த அறிமுகத்தோடு தொடர்ச்சியாக சூளவம்சம் நூல் சொல்லும் வரலாற்றைச் சிறு பகுதிகளாகத் தொடர்ந்து வழங்குகிறேன்.

---

(பகுதி 2)

சூளவம்சம் கூறும் மன்னர்கள் பரம்பரை பற்றிய செய்தியில் மீண்டும் மீண்டும் சில பெயர்கள் வருவதைக் காணலாம். உதாரணமாக, காசியப்பன் அக்கபோதி, சேனன் போன்ற பெயர்கள் மீண்டும் மீண்டும் இடம்பெறுகின்றன. அதேபோல பராக்கிரமபாகு, விக்கிரமபாகு என்ற பெயர்களும் ஒரு முறைக்கு மேல் இடம்பெறுகின்றன. இப்பெயர்களைக் கவனிக்கும் போது இவை சிங்கள பெயர்களா அல்லது தமிழ்ப் பெயர்களா என்ற மயக்கம் ஏற்படுவதைத் தவிர்க்க இயலவில்லை. ஆயினும் சூளவம்சம் பொதுவாகவே சிங்கள மன்னர்களை மட்டுமே இலங்கை மன்னர்களாக எடுத்துக்கொண்டு இந்த நூலில் கையாள்கிறது. எப்போதெல்லாம் தமிழர்கள் இலங்கையில் ஆட்சியைக் கைப்பற்றினாலும் அல்லது சிங்கள படையில் பதவி வகித்தாலும், அல்லது தமிழகம் போன்ற நாடுகளிலிருந்து இலங்கைக்கு வந்தாலும் அதனைத் தெளிவாகக் குறிப்பிட்டுச் சொல்கிறது. ஆக சூளவம்சம் முதன்மைப்படுத்துவது இலங்கை சிங்கள மன்னர் பரம்பரையையே என்பது உறுதிப்படுகிறது.

மகாவம்சத்தில் இறுதியாக இடம் பெறும் மகாசேனனின் 27 ஆண்டு ஆட்சி, அதாவது கி.பி 361ல் அவன் ஆட்சி முடிய, அவனது மகன் ஸ்ரீ மேகவண்ணன் ஆட்சியைக் கையில் எடுக்கின்றான். அவன் முடிசூடிக்கொண்ட செய்தியிலிருந்து சூளவம்சத்தின் முதல் அத்தியாயம் தொடங்குகிறது. அந்த காலகட்டத்தில் அனுராதபுரம் இலங்கை அரசின் தலைநகராக விளங்கியது. அப்போது தேரவாத பௌத்த சிந்தனைகளைக் கடைப்பிடிக்கும் மகாவிகாரை பிக்குகளும், மகாயான பௌத்த சிந்தனைகளைத் தொடரும் அபயகிரி விகாரை

பிக்குகளும் இக்காலகட்டத்தில் சமநிலையில் இருந்திருக்கின்றன. பௌத்தத்தின் இந்த இரண்டு உட்பிரிவுகளும் பெருத்த வேறுபாடுகளுடனே அப்போது கடைப்பிடிக்கப்பட்ட நிலையும் தெரியவருகின்றது. இதில் மகாசேனன் மகாயான தத்துவத்தைக் கடைபிடித்தவன்.

மகாசேனுக்குப் பிறகு அவரது மகன் ஸ்ரீ மேகவண்ணன் மன்னனாக முடிசூட்டிக் கொண்டான். அவன் தனது தந்தை புறக்கணித்த தேரவாத பௌத்தத்தை முன்னெடுத்தான். அவனுக்கு அடுத்து ஜெட்டதீசன் கிபி 331லிருந்து 339 வரை ஆட்சியிலிருந்தான். அவன் ஸ்ரீ மேகவண்ணனின் சகோதரனின் கடைசி மகன். ஒன்பது ஆண்டுகள் ஆட்சிக்குப் பிறகு தனது மகன் புத்ததாசனிடம் ஆட்சியை ஒப்படைத்து அவன் மரணமடைந்தான். அவனுக்குப் பின்னர் அவனது மகன் உபதேசன் ஆட்சியை எடுத்துக் கொண்டான். நல்ல குணங்கள் கொண்ட மன்னனாக இவன் விவரிக்கப்படுகின்றான்.

புத்ததாசனுக்குப் பின்னர் அவன் மகன் உபதேசன் அரியனை ஏறினான். உபதேசனின் மனைவியுடன் தகாத உறவு வைத்திருந்த அவனது தம்பி மகாநாமன் மன்னனைக் கொன்றுவிட்டு ஆட்சியைக் கைப்பற்றிக் கொண்டான். இவனுக்கு இரண்டு மனைவியர்- ஒருவர் சிங்களப் பெண். மற்றொருவர் தமிழ் பெண். தமிழ் பெண்ணுக்குப் பிறந்த சொத்திசேனன் என்பவன் மகாநாமனின் இறப்புக்குப் பின்னர் ஆட்சியைக் கையில் எடுத்துக் கொண்டான். ஆனால் அன்று இரவே தனது தந்தையின் முதல் மனைவிக்குப் பிறந்த சிங்கள வம்சாவளிப் பெண் சம்ஹாவின் காதலனால் கொல்லப்பட்டான். அவளது காதலன் அரசனானான். பின் அவனும் இறந்து போனான். பின் தாதுசேனன் என்பவன் ஆட்சிபீடத்தை ஏற்றான்.

அந்த சமயத்தில் தமிழகத்திலிருந்து படையுடன் வந்த பாண்டு என்ற தமிழ் மன்னன் இலங்கையில் போர் தொடுத்து அனுராதபுரத்தைக் கைப்பற்றிக்கொண்டான். ஐந்து ஆண்டுகள் இந்த தமிழ் மன்னன் பாண்டுவின் கீழ் இலங்கை ஆட்சி இருந்தது. பாண்டு என்பது ஒரு பாண்டிய சிற்றரசனாக இருக்க வேண்டும். அவன் ஐந்தாண்டுகளில் மரணமடைய அவனது மகன் பாரிந்தன் முடிசூடிக் கொண்டான். மூன்றாண்டுகளில் அவனும் மரணமடைந்தான். இந்தக் காலகட்டத்தில் தாதுசேனன் பாண்டிய ஆட்சிக்கு எதிராகப் படை திரட்டிக் கொண்டு வந்து தாக்கினான். அதில் வெற்றியும் பெற்றான். இலங்கை முழுவதையும் கைப்பற்றிக் கொண்டு கிபி 459லிருந்து 477 வரை மன்னனாக ஆட்சி செய்தான். இக்காலகட்டத்தில் நீர்ப்பாசன வசதிகளைச் செய்து இலங்கையில் விவசாயத்தைச் செழிக்க வைத்தான்.

அவனுக்கு இரண்டு மகன்கள் இருந்தனர். முதலில் மகன் மொகல்லானன் பட்டத்துக்கு வந்தான். குடும்ப சண்டையினால் அவன் தப்பி ஓடவே இரண்டாவது மகன் காசியப்பன் மன்னனாக அரியணை ஏறினான். காசியப்பன் கி.பி 477 இலிருந்து கி.பி 495 வரை ஆட்சி செய்தான்.

முன்னர் தப்பி ஓடிய மொகல்லானன் பதினெட்டு வருடம் கழித்து இந்தியாவிலிருந்து ஒரு படையையும் சேர்த்துக் கொண்டு இலங்கை திரும்பினான். போர் நடைபெற்றது. அதில் காசியப்பன் கொல்லப்பட்டு மொகல்லானன் அரியணை ஏறினான். அவனுக்குப் பின்னர் அவனது மகன் குமாரதத்துசேனன் என்பவன் மன்னனானான். அதன் பிறகு அவனது மகன் கீர்த்திசேனன் அரியணை அமர்ந்தான். அவன் ஒன்பது மாதத்தில் அவனது மாமன் சிவா என்பவனால் கொலை செய்யப்பட்டான். சிவாவின் ஆட்சியும் குறுகிய காலமே இருந்தது. இப்படியே செல்கிறது இலங்கை மன்னர்களின் அடுத்த இருநூறு ஆண்டு கால வரலாறு.

ஹத்ததாடன் என்பவன் கி.பி 659 இலிருந்து 667 வரை அரசனாக இருந்தான். அதன் பின்னர் மீண்டும் சில ஆண்டுகளில் கலவரம் ஏற்படவே, அதன் பின்னர் ஸ்ரீ சங்கபோதி கி.பி.667லிருந்து 683 வரை ஆட்சி செய்தான். அப்போது இலங்கை முழுவதும் பௌத்த சமயம் பரவியிருந்தது. தமிழ் சேனாதிபதி ஒருவன் பௌத்த விகாரைக்கு மண்டபங்களை அமைத்து கொடுத்தமையையும் சூளவம்சம் குறிப்பிடுகிறது. ஸ்ரீ சங்கபோதி ஆட்சிக்காலத்தில் புலத்தி (பொலநறுவை) தலைநகரமாக விளங்கியது. ஸ்ரீ சங்கபோதியின் மறைவுக்குப் பிறகு பிரதம அமைச்சராக இருந்த பொத்தகுட்டன் என்ற தமிழ் அதிகாரி ஆட்சியைக் கைப்பற்றிக் கொண்டான். பின் அவனும் கொல்லப்பட்டான். அதன் பின்னர் மானவர்மன் அரியணை ஏறினான். மானவர்மன் சமகாலத்தில் தமிழகத்தை ஆட்சி செய்த நரசிம்ம பல்லவ மன்னனுடன் நெருக்கமான உறவு கொண்டவன்.

---

(பகுதி 3)

மானவர்மனுக்கும் தமிழகத்தை ஆண்ட பல்லவ மன்னன் நரசிம்மனுக்கும் நல்ல நட்புறவு இருந்தது என்று முந்தைய பதிவில் குறிப்பிட்டிருந்தேன். முதலாம் நரசிம்மவர்மன் முதலாம் மகேந்திரவர்மனின் மகன். இவனது ஆட்சிக்காலம் கிபி.630லிருந்து 668 வரையாகும். தனது தந்தை மகேந்திரவர்மப் பல்லவன் போலவே சிறப்புமிக்க கோயில்களைத் தமிழகத்தில் அமைத்தவன் என்பதோடு வாதாபியை ஆட்சி செய்துகொண்டிருந்த

சாளுக்கியரோடு போரிட்டு வென்றவன் என்ற சிறப்பும் பெற்றவன் பல்லவ மன்னன் முதலாம் நரசிம்மன்.



இந்த மானவர்மன் என்பவன் முன்னர் நான் குறிப்பிட்ட இலங்கை மன்னன் காசியப்பனின் மகன். அடைக்கலம் வேண்டி இந்தியாவிற்குத் தப்பி ஓடிவந்த மானவர்மன், பல்லவமன்னன் நரசிம்மனிடம் தஞ்சம் புகுந்தான். பல்லவ மன்னன் நரசிம்மன் மானவர்மனைத் தனது படைப் பிரிவுகளில் ஒன்றின் தளபதியாக நியமித்திருந்தான். மானவர்மன் திருமணம் முடித்து அவனுக்கு நான்கு புதல்வர்களும் இருந்தார்கள். பல்லவ மன்னன் நரசிம்மன் மானவர்மனுடன் மிகுந்த நட்புறவில் இருந்தான். நரசிம்மனின் படையில் தலைமையேற்று ஒரு போரில் மிகப்பெரிய வெற்றியைத் தேடித் தந்தான் மானவர்மன். வெற்றியை மானவர்மன் ஈட்டித் தந்தமைக்கு பரிசாக ஏதாவது செய்ய வேண்டும் என நினைத்த நரசிம்மன், ஒரு படையினை இலங்கைக்கு அனுப்பி வைத்தான். மானவர்மனும் உடன் சென்றான். கடுமையான போர் நடந்தது. ஆனால் வெற்றி பெற முடியாது தப்பியோடி மீண்டும் தமிழகம் வந்து சேர்ந்தான் மானவர்மன். நீண்ட காலம் கழித்து மீண்டும் பல்லவன் நரசிம்மன் மற்றொரு படையை ஏற்பாடு செய்து மானவர்மனை உடன் அனுப்பி இலங்கையைக் கைப்பற்ற முயற்சி செய்தான். பல்லவ மன்னனின் கப்பற்படை இலங்கை நோக்கிச் சென்றது. மானவர்மனும் அப்படையில் இணைந்து சென்றான். பயங்கரமான போர் நடைபெற்றது. அதன் இறுதியில் மானவர்மனின் படை வெற்றி கண்டது. மானவர்மன் அனுராதபுரத்தின் மணிமுடியை அணிந்து கொண்டான். அதன் பின்னர் ஏறக்குறைய 35 ஆண்டுகள் மானவர்மன் தொடர்ந்து இலங்கை மன்னனாக

ஆட்சி செய்தான். அவன் ஆட்சி காலத்தில் இலங்கையின் பல பௌத்த விகாரைகளைத் திருத்தி அமைத்ததோடு விவசாயத்திற்கு நீர்ப்பாசன குளங்களையும் ஏரிகளையும் வெட்டி விவசாயத்தை வளர்ச்சியுறச் செய்தான்.

மானவர்மனின் மறைவிற்குப் பிறகு அவனுடைய மகன் காசியப்பன், அவனுக்குப் பிறகு மகிந்தன் ஆகியோர் ஆட்சி செய்ததை சூளவம்சம் குறிப்பிடுகிறது.

மகிந்தன் மரணமடைந்தபோது அவனது மகன் ஆட்சிப் பொறுப்பை எடுத்துக் கொண்டான். அடுத்த சில ஆண்டுகளில் மீண்டும் மாறி மாறி பல மன்னர்கள் தொடர்ச்சியாக இலங்கையின் ஆட்சி பீடத்தில் இருந்தார்கள். சேனன், உதயன், மகிந்தன், அக்கபோதி எனத் தொடர்ச்சியாக வெவ்வேறு அரசர்களின் ஆட்சிக்கு உட்பட்டது இலங்கை.

அடுத்து சேனன் என்ற மன்னன் ஆட்சி செய்து கொண்டிருந்த போது தமிழகத்தை ஆண்ட பாண்டிய மன்னன் ஸ்ரீமாற ஸ்ரீவல்லபன் (கி.பி. 815-862) பெரும்படையுடன் இலங்கையைக் கைப்பற்றும் நோக்கத்துடன் வந்தான். இலங்கையின் வடபகுதி அனைத்தையும் வெற்றி கண்டு தன் ஆட்சிக்குக் கீழ் கொண்டு வந்தான் பாண்டிய மன்னன் ஸ்ரீமாற ஸ்ரீவல்லபன். இலங்கையின் வடபகுதியில் மகாதாலிதகமத்தில் பாசறை அமைத்தான். தமிழ் மக்கள் பலர் அவனது ஆட்சியின் கீழ் அரசியலில் இடம் பெற்றனர். அதனால் பாண்டிய மன்னனின் படை பலம் பொருந்தியதாக ஆகியது. அதே வேளை இலங்கையின் மத்திய மற்றும் தெற்குப் பகுதிகளில் இலங்கை மன்னர்களின் ஆட்சி தொடர்ந்தது. சேனன் அப்போது நடந்த போரில் தோல்வி கண்டு மலையகத்திற்குத் தப்பி ஓடினான்.

பாண்டிய மன்னனின் படை படிப்படியாக அனுராதபுரத்தைக் கைப்பற்றிக் கொண்டது. பாண்டிய மன்னனின் படை அரண்மனையிலிருந்த எல்லா செல்வங்களையும் சூறையாடியதோடு, விகாரைகளில் இருந்த தங்கத்தினாலான புத்தரின் சிலைகளையும், செல்வங்களையும் சூறையாடி எடுத்துக்கொண்டது. தங்க நகைகள், வைரங்கள் தூபராமசேத்தியத்தின் பொன் கூரை, பௌத்த சமய சின்னங்கள் என அனைத்தையும் எடுத்துக் கொண்டு தமிழகம் திரும்பியது பாண்டியனின் படைகள். இதனால் மனம் வருந்திய சேனன், தான் பாண்டிய மன்னனுக்குக் கீழ் திறைதரும் மன்னனாக இருக்கச் சம்மதித்து, இரண்டு யானை அம்பாரிகளில் பல பரிசுப் பொருட்களை அனுப்பி வைத்தான். பாண்டிய மன்னனும் இதனை ஏற்றுக்கொண்டு சேனனை இலங்கையின் திறை செலுத்தும் மன்னனாக

இருக்கச் சம்மதித்து, ஆட்சியையும் கொடுக்கச்  சம்மதித்தான். சேனனின் ஆட்சி இலங்கையில் தொடர்ந்தது.

சேனன் மரணமடைந்ததும் அடுத்ததாக, சேனன் என்ற மற்றொருவன் கிபி 853லிருந்து 887 வரை இலங்கை மன்னனாக ஆட்சி செய்தான். அவன் காலத்தில் பாண்டிய மன்னர்களைப் பழி வாங்குவதற்காகத் திட்டமிட்டான். அப்போது தமிழகத்தில்  ஆட்சியிலிருந்த ஸ்ரீமாற ஸ்ரீவல்லபன் பாண்டியனுக்கு எதிராகச் செயல்பட்ட அவனது மகனான வரகுணபாண்டியன் தந்தைக்கு எதிராகக் கலகம் செய்து புகலிடம் தேடி இலங்கைக்கு சேனனிடம் வந்து அடைக்கலம் புகுந்தான். அதுவே நல்ல சமயம் எனத் திட்டமிட்ட சேனன், தனது சேனாதிபதியை அழைத்து பாண்டிய நாட்டின் மீது படையெடுத்துச் சென்று பாண்டிய மன்னனைக் கொன்று வரகுணனைச் சிம்மாசனத்தில் அமர்த்துமாறு தனது படையினருக்குக் கட்டளையிட்டான்.

கடும் யுத்தம் நடந்தது. பாண்டியமன்னன் ஸ்ரீமாற ஸ்ரீவல்லபன் போரில் கொல்லப்பட்டான். வரகுணனைப் பாண்டிய மன்னனாக முடிசூட்டி விட்டு இலங்கைக்குப் படை திரும்பியது. ஆனாலும் படையைச் சார்ந்த தளபதிகள்  சிலர் தமிழகத்தின் ராமநாதபுரம் பகுதிகளில் தொடர்ந்து தங்கியிருந்தார்கள் என்றும் தெரிகிறது.  பாண்டியர்கள் இலங்கையிலிருந்து சூறையாடிச் சென்ற தங்க புத்தர் சிலைகளை மீண்டும் தமிழகத்திலிருந்து கொண்டு வந்து ஆலயங்களில் நிறுவினான் மன்னன் சேனன். இவன் தொடர்ந்து  மன்னனாக இலங்கையில் ஆட்சியிலிருந்தான். அதன் பின்னர் உதயன் என்பவன், காசியப்பன் என்பவன் என இலங்கை ஆட்சி தொடர்ந்தது.

அடுத்து தப்புலன் அரசனாக முடிசூட்டிக் கொண்டான். இவனது காலம் கிபி 924லிருந்து 935 வரை. அதே சமயத்தில் தமிழகத்தில் பாண்டிய மன்னன் இரண்டாம் இராஜசிங்கன் சோழர்களால் விரட்டப்பட்டு இலங்கைக்கு வந்து சரண் அடைந்தான். தப்புலன் பாண்டியனுக்கு   உதவி செய்ய நினைத்தாலும் அவனது அரசின் அதிகாரிகள் இதற்கு இணங்கவில்லை. ஆகையால் பாண்டிய மன்னன் தனது  சிம்மாசனம் மற்றும் சில அரச முத்திரை சின்னங்களையும் மன்னனிடம் பாதுகாப்பாக ஒப்படைத்துவிட்டுச் சேர நாட்டிற்குச் சென்று தஞ்சமடைந்தான். சேனனுக்குப் பிறகு உதயன் என்பவன் மன்னனானான். அவனுக்குப் பின் மேலும் சேனன் என்னும் மற்றொருவன் மன்னனானான். இவனது காலம் கிபி 956லிருந்து 972 வரை. இவன் கலிங்கத்து  இளவரசி ஒருத்தியைத் திருமணம் செய்து கொண்டான்.

சூளவம்சம் குறிப்பிடும் செய்திகளைக் காணும், போது பாண்டிய மன்னர்களின் அரச சின்னங்கள் குறிப்பிட்ட சில ஆண்டுகள் இலங்கையிலிருந்ததை உறுதி செய்வதாகவே அமைகின்றது. அதுமட்டுமின்றி, சோழ மன்னர்கள் தமிழகத்தில் பலம் பெற்ற போது அதன் தாக்கம் இலங்கையிலும் எதிரொலிக்கத் தொடங்கியது.

---

(பகுதி 4)



சேனன் இலங்கை மன்னனாக ஆட்சி செய்து கொண்டிருந்த போது, சோழ மன்னன் வல்லபன் இலங்கையின் நாக தீபத்திற்கு, அதாவது வட பகுதியில் உத்தர தேசம் என்ற பெயர் கொண்ட ஒரு பகுதி, அதனை அவன் போரிட்டுக் கைப்பற்றிக்கொண்டதாக சூளவம்சம் குறிப்பிடுகிறது. சேனன் மீண்டும் தாக்கியதாகவும், அதனை எதிர்த்து சோழன் வல்லபன் மீண்டும் போர் செய்து வாகை சூடியதாகவும், பின் மீண்டும் நடந்த போரில் தோல்வி கண்டு வல்லபன் நட்புறவுக்கு வந்ததாகவும், இதனால் இலங்கை மன்னனின் புகழ் இந்தியாவிலும் பரவியது என்றும் மேலும் குறிப்பிடுகிறது. சூளவம்சம் குறிப்பிடும் சோழன் வல்லபன் யார் என்பது ஆய்விற்குரியது.

இதற்கு அடுத்த 16 வருடங்கள் சேனன் மன்னனாக ஆட்சியைத் தொடர்ந்தான். அதற்குப்பின் மகிந்தன். அவனுக்குப் பின்னர் அவனது கலிங்க ராணியின் மகன் சேனன் கி.பி 972 லிருந்து 982 வரை ஆட்சி செய்து கொண்டிருந்தான். இந்தக் காலகட்டத்தில் இலங்கையில் சிற்றரசர்களிடையே குழப்பம் அதிகரித்து விட்டது. இந்தச் சூழலில் இளம் வயது மன்னனான சேனன் தனது சேனாதிபதியாக சேனன் என்ற இன்னொருவனை அழைத்து பதவியை ஒப்படைத்துவிட்டு பொலநருவ நகருக்குச் சென்று தங்கிவிட்டதாக சூளவம்சம் குறிப்பிடுகிறது. சேனாதிபதி முறையாக ஆட்சியைப் பாதுகாக்காமையினால் தமிழர்கள் பெரும் பலம் கொண்டு செயல்பட்டதாகவும், ராட்சதர்கள் போல நாட்டை நாசமாக்கினர் என்றும் சூளவம்சம் குறிப்பிடுகிறது. இந்தக் காலகட்டத்தில் சேனனின் மரணம் நிகழ்கின்றது. அவனது இளைய சகோதரன் மஹிந்தன் கிபி 982லிருந்து அரசனாக முடி சூடிக்கொண்டான். அந்தக் காலகட்டத்தில் அரசாட்சி சரியாக அமையாமல் உள்ளூரில் பல குழப்பங்கள் நிகழ்ந்து வந்தன.

அந்தக் காலகட்டத்தில் இந்தியாவிலிருந்து இலங்கைக்குக் குதிரைகள் விற்க வந்த ஒரு வியாபாரி, இலங்கையில் உள்ள நிலையற்ற ஆட்சித்தன்மை பற்றி அப்போதைய சோழ மன்னன் ராஜராஜனுக்குக் குறிப்பிடவே, மாமன்னன் ராஜராஜ சோழன் (கி.பி 985 முதல் கி.பி 1014) இலங்கையைக் கைப்பற்றும் நோக்கத்துடன் தனது படைகளை இலங்கைக்கு அனுப்பியதாகவும், சோழர் படைகள் இலங்கை வந்து அங்குப் பல கிராமங்களைத் தாக்கி இலங்கையின் பெரும் பகுதியைத் தனது கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வந்ததாகவும்,. இலங்கை மகாராணி மற்றும் அவளது அனைத்து தங்க ஆபரணங்கள், மகுடம், விலை மதிப்பில்லா வைரங்கள், முறியாத வாள், பதக்கங்கள் ஆகிய அனைத்தையும் சோழப் படைகள் கவர்ந்து இந்தியாவிற்குக் கொண்டு வந்தன என்றும், இலங்கையின் பௌத்த சின்னமாகிய தந்ததாது இருந்த கோயிலையும் சோழர் படைகள் அழித்ததாகவும் சூளவம்சம் குறிப்பிடுகிறது. விகாரைகளில் இருந்த தங்க வைர ஆபரணங்களையும் சூறையாடி அனுராதபுரத்துச் செல்வங்களையும் கொள்ளையிட்டு அங்கிருந்த விலைமதிப்பில்லா பொருட்களைத் தமிழகம் கொண்டு வந்ததாக சூளவம்சம் மேலும் குறிப்பிடுகிறது. இலங்கையின் பெரும்பகுதியைக் கைப்பற்றிக்கொண்ட ராஜராஜனின் படைகள் அனுராதபுரத்தை விட்டு பொலநருவ நகரைத் தனது தலைநகராக்கிக் கொண்டன. அந்த வேளை இளவரசனாக இருந்த இலங்கை மன்னனின் மகன் காசியப்பன், சோழ மன்னன் ராஜராஜனின் படைகளின் கண்களில் படாமல் மறைந்திருந்தான். அவன் விக்கிரமபாகு என்ற சிம்மாசனப் பெயரோடு ஒரு பகுதியில் முடி சூடிக் கொண்டு தனியாக ஆட்சி செய்து கொண்டிருந்தான். இடைக்கிடையே விக்கிரமபாகுவின் படைகளை வெல்வதற்குத் தமிழர்கள் படை முயற்சி செய்து கொண்டே இருந்தது.

அதற்குப் பின்னர் மற்றொரு விக்கிரமபாகு என்பவன் ஆட்சியைத் தொடர்ந்ததாகவும், அதற்குப் பின்னர் லோகேஸ்வரன் என்ற சிங்கள ராணுவத் தலைவன் சோழர்களை எதிர்க்கும் பொருட்டு ஒரு படையை ஏற்பாடு செய்ததாகவும், கதிர்காமத்தில் தனது தலைமையகத்தை நிறுவியதாகவும் அறிகிறோம். ஆனாலும் சோழர் படைகளை அவர்களால் வெற்றி பெற முடியவில்லை. இலங்கையின் பெரும்பகுதியைச் சோழர் படை ஆட்சி செய்ய, ஒரு சில பகுதிகளை இலங்கை மன்னர்கள் தொடர்ந்து ஆட்சி செய்து கொண்டு வந்தனர். அந்த வரிசையில் மகிந்தன் அவனுக்குப் பின்னர் புத்த ராஜா பின்னர் காசியப்பன் என்ற இலங்கை மன்னர்களின் பெயர்களைக் காண்கின்றோம்.

சோழ மன்னன் ராஜேந்திர சோழனைப் பற்றி இந்த சூளவம்சம் ஏதும் குறிப்பிடவில்லை. ராஜராஜனின் பெயருக்குப் பின்னர் அடுத்து வருவது வீரராஜேந்திரனின் பெயர். இந்தியாவில் சோழநாட்டில் வீரராஜேந்திரன் பதவியேற்ற பின்னர் அக்காலகட்டத்தில் மீண்டும் இலங்கையில் இலங்கை மன்னர்களின் ஆட்சி மீண்டது என்பதை சூளவம்சம் வழி அறியமுடிகின்றது. ஆக, ராஜராஜனுக்குப் பிறகு ராஜேந்திர சோழனின் கலாத்தில் இலங்கை முழுமையும் சோழர்கள் ஆட்சியின் கீழ் இருந்தமையும் அதன் பின்னர் இலங்கை சிற்றரசர்கள் படிப்படியாக பலம் பெற்றார்கள் என்பதையும் அறிய முடிகிறது. சோழர்கள் ஆட்சிக் காலத்தில் இலங்கையில் எழுப்பப்பட்ட கோயில்களின் சிதைந்த பகுதிகளை இன்றும் பொலநருவ நகரத்தில் காணலாம். சோழநாட்டில் வீரராஜேந்திரனின் ஆட்சிக் காலத்தில் விஜயபாகு என்ற மன்னன் இலங்கையின் ஆட்சிப் பொறுப்பை எடுக்கிறான்.

இலங்கையிலிருந்த சோழர் படையைத் தோற்கடித்து இலங்கை மன்னனாக முடி சூட்டிக் கொள்கின்றான் இந்த விஜயபாகு. இவன் ஸ்ரீ சங்கபோதி என்ற அரச பெயரை ஏற்றுக்கொண்டான். முன்னர் போரில் சோழ மன்னனால் சிறைப்படுத்தப்பட்டு இந்தியாவிற்குக் கொண்டு செல்லப்பட்ட மன்னன் ஜெகதீசனின் மனைவியான பட்டமகிஷியின் மகள் லீலாவதி சோழ நாட்டிலிருந்து தப்பி இலங்கை வந்து வீரபாகுவுக்குத் தன்னை அறிமுகப் படுத்திக் கொண்டாள். வீரபாகு லீலாவதியை தன் பட்டத்து ராணியாக ஏற்றுக் கொண்டான்.

விஜயபாகுவிற்கு மித்ரா என்ற ஒரு இளைய சகோதரி இருந்ததாகவும், அப்போதைய சோழ மன்னன் அதாவது வீரராஜேந்திரன் அவளை மணந்து கொள்ள விழைந்த போது விஜயபாகு அதனை மறுத்து விட்டு பாண்டிய வம்சத்தில் வந்த இளவரசன் ஒருவருக்கு அவளைத் திருமணம் செய்து வைத்ததாகவும் சூளவம்சம் குறிப்பிடுகிறது.

இலங்கை மன்னன் விஜயபாகு பல சமூகப் பணிகளைச் செய்ததாகவும், பல பௌத்த விகாரைகளைச் சீரமைத்ததாகவும், தடைகளை மிக நேர்த்தியாக விரிவாக்கி நாட்டினைத் திறம்பட ஆட்சி செய்ததாகவும் சூளவம்சம் குறிப்பிடுகிறது. வீரபாகு 55 ஆண்டுகள் இலங்கை மன்னனாக ஆட்சி புரிந்தான். அவனுக்குப் பின்னர் அரச வம்சத்தைச் சேர்ந்த சிலர் தொடர்ச்சியாக ஆட்சி செய்து வந்தனர்.

அந்தக் காலகட்டத்தில் மானவர்மன் என்ற மன்னன் ஆட்சியிலிருந்ததாகவும் அவருக்கு ஒரு குழந்தை பிறந்ததாகவும், அந்த இளவரசனே இலங்கையின் புகழ்மிக்க மன்னன் பராக்கிரமபாகு என்பதையும் சூளவம்சம் குறிப்பிடுகிறது.

---

(பகுதி 5)

சிற்றரசனான மானவர்மனுக்கு மகனாக பராக்கிரமபாகு பிறந்தான். தனக்கு மகன் பிறந்த செய்தியை இலங்கை மன்னன் விக்கிரமபாகுவிற்குத் தூதுவர் மூலம் அறிவித்தான் மானவர்மன். விக்கிரமபாகுவின் தங்கைதான் மானவர்மனின் மனைவி. தன் தங்கையைப் போல நல்ல குணங்களுடன் பராக்கிரமபாகு வளரவேண்டும் என்று எண்ணி விக்ரமபாகு, தன் மருமகனைத் தன்னிடம் கொடுத்து வளர்க்க அனுமதிக்கும்படி கேட்டுக் கொண்டான். ஆனால் மானவர்மன் அதற்குச் சம்மதம் தெரிவிக்கவில்லை. பராக்கிரமபாகு ஒரு அரசனுக்குத் தேவையான எல்லா கலைகளையும் கற்று வளர்ந்து வந்தான்.

சூளவம்சத்தின் இந்தப் பகுதியில் ஒரு உரையாடலின் போது "கலிங்க மரபில் வந்த விஜய மன்னன் இத்தீவில் வசித்த இயக்கர்களை அழைத்து இத்தீவை மக்கள் வாழ உகந்ததாக ஆக்கினான். அன்றிலிருந்து கலிங்க மரபு மன்னர் வழி வருகின்றது" என்று ஒரு அரசி கூறும் ஒரு செய்தியும் இடம் பெறுகின்றது. இதனை நோக்கும்போது சூளவம்சம் கூறும் செய்திகளின் அடிப்படையில், இலங்கை மன்னர்கள் பரம்பரை என்பது கலிங்க நாட்டு மன்னர் பரம்பரையினரின் தொடர்ச்சி என்பதாகவே அறியக்கூடியதாக இருக்கின்றது.

பராக்கிரமபாகு ஏனைய அரசர்களை விட மாறுபட்ட வகையில் சிந்திக்கும் திறன் உடையவனாக இருந்தான். தானே பல ஊர்களுக்குப் பயணம் செய்து கிராமங்களை நேரில் கண்டு சில இடங்களில் போரிட்டு, அங்கு தனது வீரத்தைவெளிப்படுத்தி, தனது புகழை வளர்த்துக் கொண்டு வந்தான். அவனுக்கு இலங்கையில் வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு மனிதர்கள் தனித்தனியாக

ஆட்சி செய்வது மனதிற்கு ஒவ்வாததாக இருந்தது. இலங்கையின் முழு பகுதியையும் ஒரு ஆட்சியின் கீழ் கொண்டு வர வேண்டும். அந்த ஆட்சிக்கு தானே தலைமை தாங்க வேண்டும், என்று அவன் யோசித்துக் கொண்டிருந்தான். அது மட்டுமல்ல. இலங்கைத்தீவு சிறியதான ஒரு தீவாக இருந்தாலும் கூட, பௌத்த நெறிக்கு மிக முக்கியமான ஒரு நாடாக இருப்பதை அவன் மிக முக்கிய காரணமாகக் கருதினான். "புத்தரின் கேசம், தோள் எலும்பு, கழுத்து எலும்பு, பல், பிச்சைப்பாத்திரம், பாத அடையாளம், போதி மரத்தின் கிளை ஆகியவை இலங்கையில் தான் இருக்கின்றது" என்று அவன் கூறுவதாக ஒரு வாக்கியம் சூளவம்சத்தில் இடம்பெறுகின்றது.



இளவரசனாக சுகங்களை மட்டும் அனுபவித்துக் கொண்டிராமல் இலங்கையின் எல்லாப் பகுதிகளுக்கும் பயணம் செய்து, சீர்குலைந்து கிடந்த கிராமங்களைத் தனது ஆட்சிக்குக் கீழ் கொண்டு வந்து எல்லா பகுதிகளையும் ஒருங்கிணைக்கும் முயற்சியில் ஈடுபட்டான். சில ஆண்டுகளில் தக்ஷிணதேசத்தில்

அரசனாக அரியணை ஏறினான் பராக்கிரமபாகு.  அது மட்டும் போதாது. இலங்கை முழுவதையும் தனது ஆளுமைக்குள் கொண்டு வர வேண்டும் என்று திட்டமிட்டான். "பொழியும் மழை நீரில் ஒரு துளி கூட சமுத்திரத்தில் கலக்கக்கூடாது. அவை அனைத்தும் விவசாயத்திற்குப் பயன்படவேண்டும்" என்று நீர்ப்பாசனத் திட்டங்களை இலங்கை முழுவதும் திட்டமிட்டான், செயல்படுத்தினான். நெல் வயல்களின் பரப்பினை அதிகரித்தான். நாட்டை நெற்களஞ்சியமாக்கினான். முந்தைய அரசர்கள் தங்கள் பெரும்பகுதி நேரத்தை யுத்தங்களில் செலவிட்டு நாட்டை பாழ்படுத்தினர். யுத்தத்தை விட்டு நாட்டினையும் சமயத்தையும் அவர்கள் வளர்ச்சிக்குப் பயன்படுத்தவில்லை. ஆகவே பௌத்த தர்மத்தை முன்னெடுக்கவும், இளைஞர்கள் ஆரோக்கியத்துடன் வாழ்வதற்குப் போர்ப் பயிற்சி பெறவும், எல்லா மாவட்டங்களிலும் சிறந்த நிர்வாகம் செயல்படவும், நாடு முழுவதும் திட்டங்களை வகுத்து செயல்படத் தொடங்கினான் பராக்கிரமபாகு.

இவனது ஆட்சியின் கீழ் தமிழ்ப்படை ஒன்று இருந்தமையும், அதற்குத் தளபதியாக மலைராஜா என்ற ஒருவனை நியமித்தமையும் சூளவம்சம் குறிப்பிடுகிறது. பலம் பொருந்திய படையினை  உருவாக்கி இலங்கை முழுவதும் இருந்த அனைத்து சிற்றரசர்களையும் தனது ஆட்சியின் கீழ் கொண்டு வந்தான் பராக்கிரமபாகு.

இலங்கை முழுமைக்கும்  மன்னனாக முடிசூட்டிக் கொண்டான். மகா பராக்கிரமபாகு என்று அழைக்கப்பட்டான். முந்தைய ஆட்சியாளர்கள் விதித்திருந்த வரிச் சுமைகளைக் குறைத்தான்.  பௌத்தத்திலிருந்த மூன்று மதப் பிரிவுகளையும் சேர்ந்த பிக்குகளை அழைத்து அவர்களிடம் சமரசத்தை உருவாக்க முயற்சித்தான். பௌத்த பிக்குகளுக்கு நிறையச் சலுகைகளை வழங்கினான். வழிப்போக்கர்களுக்கும் பிச்சைக்காரர்களுக்கும் அன்னசத்திரங்கள் அமைத்தான். தானியங்கள் சேகரித்து வைக்கக் களஞ்சியங்களை அமைப்பித்தான். நோயாளிகளுக்கு வைத்தியசாலைகளை நிறுவினான். திறன் வாய்ந்த வைத்தியர்களை ஒருங்கிணைத்து சிறந்த வைத்தியசாலைகளை உருவாக்கினான். மாதத்தில் நான்கு நாட்களைப்  பௌத்த உபதேச நாட்களாக அறிவித்தான். பிராமணர்கள் தமது சடங்கு, கிரியைகள் ஆகியவற்றைச் செய்வதற்கு ஒரு தங்கமாளிகை உருவாக்கித் தந்தான். பிராமணர்கள் மந்திரச் சடங்குகள் ஆற்றுவதற்கு விஷ்ணுவுக்கு ஒரு கோயில் அமைத்தான்.  புனித நூல்கள் வழங்குவதற்குரிய மாளிகைகளையும் அமைத்தான்.

பராக்கிரமபாகுவின் பட்டத்து ராணியாக ரூபவதி என்பவள் இருந்தாள். அவளைத் தவிர நூற்றுக்கணக்கான மகளிர் அரண்மனையிலிருந்தார்கள். ரூபவதி

பௌத்த மத நம்பிக்கை கொண்டவள். அவள் பௌத்த சமயத் தொண்டினைத் தொடர்ந்து ஆற்றி வந்தாள். பராக்கிரமபாகு மூன்று தேவாலயங்களைக் கட்டுவித்தான் என்ற செய்தியையும் சூளவம்சம் குறிப்பிடுகிறது.

மகா பராக்கிரமபாகு சோழர்களால் சேதமாக்கப்பட்ட புராதன அரச நகரான அனுராதபுரத்தைப் புனரமைக்கவும், போதி மரத்தையும், புனித சின்னங்களையும் பாதுகாக்கவும் நடவடிக்கைகள் எடுத்தான். இவன் காலத்திலேயே பௌத்தப் புனித சின்னங்கள் மீட்கப்பட்டன. அவை பொலநருவ நகருக்குக் கொண்டுவரப்பட்டன. மகா பராக்கிரமபாகு அந்தப் புனித சின்னங்களைத் தனது தலையில் தாங்கி ஊர்வலம் வந்து விழா எடுத்துக் கொண்டாடி ஆலயத்தில் வைத்தான்.

சூளவம்சத்தில் மற்றொரு செய்தியும் இடம் பெறுகிறது. அதாவது, பராக்கிரமபாகு காம்போஜ மன்னனுக்கு நட்புறவு நிமித்தமாக இலங்கை இளவரசி ஒருத்தியைத் திருமணம் செய்விக்க அனுப்பியதாகவும், அவள் சென்ற அந்தக் கப்பலை பர்மிய மன்னன் இடையில் தாக்கி கைப்பற்றி அவளைக் கொண்டு சென்றதாகவும், இதனால் கோபமடைந்த மகா பராக்கிரமபாகு தமிழ்த் தளபதி ஒருவரை அழைத்து பர்மா மீது போர் தொடுக்கக் கட்டளையிட்டான் என்றும், பர்மா வந்து இறங்கிய தமிழ் தளபதி ஆதித்தன் அவர்களுடன் சண்டையிட்டு பர்மிய மன்னனைச் சிறைபிடித்து இளவரசியை மீட்டான் என்றும் இச்செய்தி குறிப்பிடுகிறது. அதோடு மட்டுமன்றி, பர்மாவின் மன்னன் இலங்கைக்குத் திறை செலுத்தும் மன்னனாக இருப்பதற்கு ஒப்புக்கொண்டு திறை செலுத்தினான் என்ற செய்தியும் கிடைக்கின்றது.

அந்தக் காலகட்டத்தில் தமிழகத்தில் ஆட்சி செய்து கொண்டிருந்த பாண்டிய மன்னன் பராக்கிரமனைத் தாக்கி மற்றொரு இளவரசனான குலசேகரன் ஆட்சியைக் கைப்பற்றிக் கொண்டான். குலசேகர பாண்டியனைத் தாக்கி தனது ஆட்சியை மீட்டுக் கொடுக்கும்படி பராக்கிரம பாண்டியன், மகா பராக்கிரமபாகுவின் உதவி கேட்டு தூது அனுப்பினான். தனது படைத் தளபதியை அழைத்து குலசேகரனைத் தாக்கி கைப்பற்றி மீண்டும் பராக்கிரம பாண்டியனுக்கே அரசை ஒப்படைக்கும்படி கட்டளையிட்டான் மகா பராக்கிரமபாகு. தளபதி தண்டநாயக்கன் முதலில் ராமேஸ்வரத்தைக் கைப்பற்றிக் கொண்டான். அப்பகுதியில் ஆட்சி செய்த சிற்றரசர்களைத் தாக்கிச் சிறைப்பிடித்து இலங்கைக்கு அனுப்பினான். அவர்களைக் கொண்டு முன்னர் இலங்கையில் தமிழ் படைகள் ஏற்படுத்திய சேதங்களைத் திருத்தவும், பழுதடைந்த கோவில்களைப் புதுப்பிக்கும் பணிக்கும் அவர்களை அனுப்பினான். இந்த தண்டநாயக்கன் தென்னிந்தியாவில் குண்டுக்கல் என்ற இடத்தில் தனக்கு ஒரு கோட்டை நிறுவி அதற்கு பராக்கிரமபுரம் என்றும்

பெயரிட்டான் என்று சூளவம்சம் குறிப்பிடுகிறது. குலசேகரனுக்கும் பாண்டியன் பராக்கிரமனுக்கும் நடைபெற்ற சண்டையின்போது பராக்கிரம பாண்டியன் கொல்லப்பட்டான். ஆயினும் தண்டநாயக்கனின் படைகள் பராக்கிரம பாண்டியனின் குடும்பத்தாருக்கு உதவும் பொருட்டு தொடர்ச்சியாகப் போர் செய்து வந்தது. தமிழகத்தின் பொன்னமராவதியில் நடந்த புரட்சியை முற்றுமாக அடக்கி, அங்கிருந்த பாண்டியனின் மூன்று அடுக்கு மாளிகையைத் தீக்கிரையாக்கியது இலங்கை படை. பாண்டியன் பராக்கிரமன் மகனான வீரபாண்டியனுக்கு முடிசூடி விட்டு பின்னர் நாடு திரும்பியது இலங்கை படை. இலங்கை படையோடு போர் தொடுக்கும் வகையில் குலசேகரன் சோழமன்னர்களின் உதவியை நாடினான். தமிழகத்தில் பெரும் போர் நடைபெற்றது. அதில் ஆயிரக்கணக்கான தமிழர்கள் கொல்லப்பட்டனர். குலசேகரன் அனைத்தையும் இழந்து ஓடினான். இலங்கை மன்னனின் தளபதி நாட்டை வீரபாண்டியனிடம் ஒப்படைத்துவிட்டு, "இந்த ராஜ்ஜியத்தில் பராக்கிரமபாகுவின் தலைச் சின்னம் பொறித்த காசு பணம் பயன்படுத்தப்பட வேண்டும்" என்று கட்டளை பிறப்பித்து, பாண்டிய சோழ கைதிகளோடு இலங்கைக்குக் திரும்பினான். இந்த வெற்றியைக் கொண்டாடி பராக்கிரமபாகு இலங்கையில் "பாண்டி விஜயம்" என்ற பெயரில் ஒரு கிராமத்தை உருவாக்கினான். அக்கிராமத்தில் பிராமணர்கள் வளமாக வாழ நிலங்களை நன்கொடையாக வழங்கினான் மகா பராக்கிரமபாகு என்று சொல்கிறது சூளவம்சம்.

மகா பராக்கிரமபாகுவின் ஆட்சி 33 ஆண்டுகள் நீடித்தன. இவனது ஆட்சி இலங்கை வரலாற்றில் இலங்கைக்குப் பெரும் வளத்தையும் புகழையும் தேடித் தந்த ஆட்சி என்று ஐயமின்றி குறிப்பிடலாம். பராக்கிரமபாகுவின் மறைவிற்குப் பிறகு அவனது சகோதரியின் மகனான விஜயபாகு என்பவன் அரியணை ஏறினான். அவன் கவிஞன் - அதோடு மனுநீதியை உயர்வாகக் கருதி அவன் மக்களை மனு நீதியின் கட்டளைப்படி நான்கு ஒழுக்கங்களைப் பின்பற்றி நடக்குமாறு பணித்தான் என்றும், அவன் ஆட்சி ஒரு ஆண்டுக் காலம் மட்டுமே நீடித்தது என்றும், அவனுக்குப் பின் மகிந்தன் என்பவன் ஆட்சியை எடுத்துக்கொண்டான் என்றும் சூளவம்சம் குறிப்பிடுகிறது.

மீண்டும் பல குழப்பங்கள் இலங்கை அரச குடும்பத்தில் ஏற்பட்டன. மகா பராக்கிரமபாகுவின் மனைவியருள் ஒருத்தியான லீலாவதியை இடைக்காலத்தில் அரியணையில் ஏற்றினார்கள். அந்த காலகட்டத்தில் இந்தியாவிலிருந்து பராக்கிரம பாண்டியன் என்பவன் பெரும்படையுடன் வந்து லீலாவதியையும் அவள் தளபதியையும் கொன்று இலங்கையைக் கைப்பற்றிக் கொண்டான். இதனைக் குறிப்பிடும் போது சூளவம்சம் இக்காலகட்டத்தில் மனு நீதி தவறிய ஆட்சி மூன்று ஆண்டுகள் புலத்தி நகரில் நிலவியது, அதாவது பொலநருவ நகரில் நிலவியது என்று குறிப்பிடுகிறது.

சூளவம்சத்தின் அடிப்படையில் மனுநீதியே உயர்ந்த தர்மமாகக் கொள்ளப்பட்டது என்பதை அறிகின்றோம். ஆக, பௌத்த சமயத்தை அரச சமயமாக ஏற்ற இலங்கை சிங்கள மன்னர்கள், பௌத்த தத்துவங்களின் அடிப்படைகளுக்கு நேர்மாறான மனு நீதியை எவ்வாறு ஏற்றுக் கொண்டனர் என்பதுவும், மனு நீதி சிங்கள ஆட்சியில் எப்போது உட்புகுந்தது என்பதும், அது எவ்வாறு ஆட்சியில் உள்ளோருக்குத் துணை புரிந்தது என்பதும், அதனால் ஏற்பட்ட பின்விளைவுகள் யாவை என்பதுவும் ஆய்வுக்குட்படுத்தப்பட வேண்டியவையே!

---

(பகுதி 6)

இலங்கையின் மன்னர்கள் வரலாற்றில் மகா பராக்கிரமபாகுவின் காலம் பொற்காலமாகும். நாட்டின் இயற்கை வளம் மேம்பட்டதுடன் விவசாயம் அபரிதமான வளர்ச்சியை இம்மன்னனின் காலத்தில் கண்டது. இலங்கையின் செல்வச்செழிப்பும் கலை வளர்ச்சியும் இம்மன்னனின் காலத்தில்தான் விரிவாக்கம் கண்டது. அத்துடன் இலங்கையிலிருந்து கிழக்காசிய நாடுகள் பலவற்றிற்கும் பௌத்த பிக்குகள் பலர் சென்று பௌத்தம் வளர்த்தனர். கிழக்காசிய நாடுகளில் இலங்கையைச் சார்ந்த பௌத்த பிக்குகளின் தாக்கம் என்பது இன்றளவும் மிகத் தெளிவாக நாம் உணரக் கூடியதாக இருக்கின்றது என்பதை மறுப்பதற்கில்லை.

மகா பராக்கிரமபாகுவின் மறைவுக்குப் பின்னர் பல அரசர்கள் இலங்கையின் ஆட்சியைத் தொடர்ந்தனர். நிலையான ஆட்சி என்பது தொடரவில்லை. அந்தக் காலகட்டத்தில், கலிங்க தேசத்தை, அதாவது இன்றைய ஒடிசா மாநிலத்திலிருந்து கொடூர மனம் கொண்ட இளவரசன் மாகன் என்பவன் 20,000 போர் வீரர்களுடன் இலங்கைக்கு வந்து போரிட்டு இலங்கையைக் கைப்பற்றிக் கொண்டான். இவன் புத்தவிகாரைகளை சேதப்படுத்தினான் என்றும் , இந்த கலிங்க மன்னன் தமிழன் என்றும் சூளவம்சம் குறிப்பிடுகிறது.

இந்தக் கலிங்க தமிழ் அரசனான மாகன், அந்த சமயம் இலங்கையை ஆட்சி செய்து கொண்டிருந்த பராக்கிரம பாண்டியன் என்ற மன்னனைக் கைது செய்து, அவனது கண்களைப் பிடுங்கி, சொத்துக்களை அபகரித்து கொள்ளையிட்டான் என்றும் ,அதன் பின்னர் அவன் புலத்தி நகரில் முடி சூடிக் கொண்டு 21 வருடங்கள் கொடுங்கோலாட்சி நடத்தினான் என்று சூளவம்சம் குறிப்பிடுகிறது.

அவனது ஆட்சியின்போது சிங்கள அரசர்கள் சிலர் ஆங்காங்கே சிறிய சிற்றரசுகளை உருவாக்கிக் கொண்டிருந்தார்கள். அந்த வகையில் ஸ்ரீ சங்கபோதி, அதற்குப் பின்னர் பராக்கிரமபாகு, என ஆட்சி தொடர்ந்தது.



அதற்குப் பின்னர் எல்லாளன் என்ற தமிழ் மன்னன் இலங்கையை ஆண்டான் என்றும் சூளவம்சம் குறிப்பிடுகின்றது. எல்லாளன் பற்றி சூளவம்சம் விரிவாக வேறு எந்தத் தகவலையும் கொடுக்கவில்லை. துட்டகாமினி என்ற பெயர் கொண்ட மன்னன் எல்லாளனுடன் போரிட்டு இலங்கையைக் கைப்பற்றினான். அதற்குப் பிறகு வட்டகாமினி என்பவன் நாட்டை கைப்பற்றி ஆண்டான். ஆனால் பின்னர் ஐந்து தமிழ் ஆக்கிரமிப்பாளர்களிடம் அவன் நாட்டை பறிகொடுத்தான் என்றும் சூளவம்சம் குறிப்பிடுகிறது. அதன் பின்னர் தாதுசேனன் என்பவன் நாட்டைக் கைப்பற்றி சில காலம் ஆண்டுவந்தான். அந்தச் சமயம் ஆறு தமிழ் மன்னர்கள் போரிட்டு நாட்டை மீண்டும் பிடித்துக் கொண்டார்கள். அதன் பின்னர் அவர்களை விரட்டிவிட்டு விஜயபாகு என்பவன் நாட்டை ஆட்சி செய்தான்.

அதன்பின்னர் மாகன், ஜயவாகு என்ற இரண்டு தமிழ் மன்னர்களின் தலைமையில் 40 ஆயிரம் தமிழ் வீரர்களும் கேரள வீரர்களும் இருந்து மன்னர் ஆட்சி இலங்கையில் தொடர்ந்தது. இந்த மன்னர்கள் ஆட்சியில் நாட்டின் பல இடங்களில் மேம்பாடுகளை உருவாக்கினர் என்றும் சூளவம்சம் செல்கிறது

ஆச்சரியமாக இன்னொரு செய்தியையும் சூளவம்சம் பதிவு செய்கிறது.

இக்காலகட்டத்தில் இரண்டாம் பராக்கிரமபாகு என்பவன் போரிட்டு ஆட்சியைக் கைப்பற்றிக் கொண்டான். இந்த பராக்கிரமபாகுவின் 11வது ஆண்டுக் காலத்தில் மலாயா நாட்டைச் சார்ந்த சந்திரபானு என்ற ஒரு இளவரசன் இலங்கை மீது படையெடுத்தான் என்றும், ”நாங்களும் பௌத்தர்கள்” என அறிவித்துப் பேரிட்டான் என்றும், ஆனால் அவன் பராக்கிரமபாகுவின் வீரர்களால் துரத்தி அடிக்கப்பட்டான் என்றும் சூளவம்சம் குறிப்பிடுகிறது. இது ஏறக்குறைய கிபி 12ஆம் நூற்றாண்டு கால கட்டமாக இருக்கலாம். தோற்று ஓடிப்போன சந்திரபானு சும்மா இருக்கவில்லை. சந்திரபானு மலாய் வீரர்களையும் பாண்டிய சோழ தமிழ் போர் வீரர்களையும் சேர்த்துக் கொண்டு மீண்டும் இலங்கை மீது போர் தொடுத்தான். ஆனால் வெற்றி பெற முடியாமல் அவன் துரத்தி அடிக்கப்பட்டான். பராக்கிரமபாகுவின் ஆட்சி தொடர்ந்தது. இவன் 35 வருடங்கள் ஆட்சி நடத்தினான். அதன்பிறகு அவனது மூத்த மகன் விஜயபாகு அரியணை ஏறினான்.

விஜயபாகுவின் காலத்தில் இந்தியாவிலிருந்து பாண்டிய மன்னன் ஜடாவர்மன் குலசேகர பாண்டியன் தனது மந்திரியையும் தளபதிகளையும் அனுப்பி இலங்கையின் மீது போர் தொடுத்தான். பாண்டியனின் படைகள் இலங்கையின் பல பகுதிகளைப் பாழாக்கி புனித தந்ததாதுவையும் ஏராளமான சொத்துக்களையும் அபகரித்துக் கொண்டு தமிழ் நாடு திரும்பியது.

சில ஆண்டுகளுக்குப் பிறகு விஜயபாகுவின் மகன் பராக்கிரமபாகு பாண்டிய நாடு சென்று மன்னனிடம் பேசி புனித சின்னங்களை இலங்கைக்கு மீட்டு வந்தான். அவற்றைப் பொலநருவ நகரில் புனித தந்ததாது கோயிலில் பிரதிஷ்டை செய்தான். சில ஆண்டுகள் ஆட்சி செய்து பின் இறந்தான். அதன் பின்னர் மீண்டும் அடுத்தடுத்து சில மன்னர்கள் ஆட்சியிலிருந்தனர்.

இலங்கையை ஆண்ட மன்னர்களில் பெரும்பாலோர் பௌத்த மதத்தைச் சார்ந்தவர்களே. ஒரு சில சிங்கள மன்னர்கள் மட்டுமே சைவ நெறியையும் ஆதரித்திருக்கின்றார்கள். அதற்கு உதாரணமாக ராஜசிங்கன் என்பவனைப் பற்றிக் குறிப்பிடலாம். இவன் மாயாதுன்னை என்பவனின் மகன். ஆட்சியைக் கைப்பற்ற வேண்டும் என்ற எண்ணத்துடன் தனது தந்தையைக் கொன்று ராஜ்யத்தைக் கைப்பற்றிக் கொண்டான். ஆனால் தன் தந்தையைக் கொலை செய்து விட்டோமே என்று பயந்து, அந்த பாவத்தை எப்படி போக்குவது என்று பௌத்த முனிவர்களிடம் கேட்க, அவர்கள் கூறிய எந்த பரிகாரமும் அவனுக்குத் திருப்தி அளிக்காத நிலையில், சிவனை வழிபடுகின்ற சைவர்களிடம் பரிகாரம் கேட்க, அவர்கள்

சொன்ன பரிகாரம் அவனுக்கு மனதிற்குப் பிடிக்கவே, அவன் சைவ சமயத்தை ஏற்றுக் கொண்டான். உடல் முழுவதும் திருநீறு பூசி சைவனாகி சிவ வழிபாடு செய்யத் தொடங்கினான். அதன் பின்னர் பிக்குகள் சிலரைக் கொன்றான். புனிதமான பௌத்த நூல்கள் பலவற்றை எரியூட்டினான்; பௌத்த விகாரைகளை இடித்துத் தள்ளினான்; பௌத்த பிக்குகள் பலர் பயத்தினால் தங்கள் சின்னங்களைக் கலைத்து விட்டுப் பாதுகாப்பான இடங்களுக்கு ஓடிச் சென்றனர். பழி பாவத்துக்கு அஞ்சாத ராஜசிங்கன் பௌத்த மதத்தை இவ்வாறு சீரழித்தான் என்று சூளவம்சம் குறிப்பிடுகின்றது.

---

(பகுதி 7)

இராஜசிங்கனின் ஆட்சிக்காலத்தில் சூரிய வம்சத்தைச் சார்ந்த ஒரு இளவரசன் கொழும்புக்கு வந்தான் என சூளவம்சம் குறிப்பிடுகிறது. அவன் எந்த நாட்டைச் சேர்ந்தவன் என்ற குறிப்பு ஏதுமில்லை. அவன் சூரியவம்சத்தைச் சார்ந்தவன் என்பது மாத்திரம் இங்கு முக்கியத்துவம் கொடுக்கப்படுகின்றது. அவன் கொழும்பில் தங்காமல் இந்தியாவின் கோவாவுக்குச் சென்று அங்கு தங்கியிருந்து விட்டு பின் மீண்டும் இலங்கைக்கு வந்தான் என்று சூளவம்சம் குறிப்பிடுகின்றது. இராஜசிங்கன் இறந்ததும் இந்த இளவரசன் ஸ்ரீ வர்த்தனா நகரத்தில் விமலதர்மசூரியன் என்ற அரச பெயருடன் அரியணை ஏறினான். கண்டி நகரைச் சுற்றி பெரிய உயரமான மதில்களை அமைத்து 18 கோபுரங்களையும் அமைத்து பெரிய அரண்மனை அமைத்து அதில் அவன் வசித்து வந்தான். அதுமட்டுமன்றி லபுஜகம (டெலிகம) என்ற கிராமத்திலிருந்த புனித தந்ததாதுவைத் தனது இருப்பிடத்திற்கு வரவழைத்து தனது அரண்மனைக்குப்பக்கத்தில் ஒரு கோயிலை அமைத்து அங்கே புனித தந்ததாதுவை வைத்துப் பாதுகாத்தான் என சூளவம்சம் சொல்கிறது..

அவனுக்குப் பின்னர் செனரத்ன என்பவன் அரசனாக முடி சூடிக்கொண்டான். அந்த சமயத்தில்தான் போர்த்துக்கீசியர்கள் இலங்கைக்கு வந்திருக்கின்றனர். சூளவம்சம் சரியாக எந்த ஆண்டு என்பதைக் குறிப்பிடவில்லை. போர்த்துக்கீசியர்கள் பற்றி சொல்லும்போது சக்தி வாய்ந்த சில வர்த்தகர்கள் என்று குறிப்பிடுகின்றது. இந்த பரங்கியர்கள் குரூரமான மனம் கொண்டவர்கள் என்றும், சிங்கள மக்களுக்குத் தொல்லை தருபவர்கள் என்றும், பெண்களின் கற்பை சூறையாடுபவர்கள் என்றும், சிங்கள மக்களின் வீடுகளைக் கொள்ளையிடுபவர்களாகவும், கிராமங்களை அழிப்பவர்களாகவும் விளங்கியதாக சூளவம்சம் கூறுகின்றது. இவர்கள் சில பாதுகாப்பான கோட்டைகளை ஆங்காங்கு அமைத்துக் கொண்டனர் என்ற செய்தியும் இடம் பெறுகின்றது.

சௌரத்ன பரங்கியர் நாசமாக்கிவிடாதவாறு புனித தந்ததாதுவைக் காடுகளில் மிகப் பத்திரமாக பாதுகாத்து வந்தான். அவன் தனக்கும் தனது தமையனின் மகன்களுக்கும் இலங்கை ராஜ்யத்தை எவ்வாறு பங்கிட வேண்டும் என்று மூன்று பனை ஓலைகளில் எழுதி தந்த பேழைக்குள் வைத்தான். மலைநாட்டின் பொறுப்பை தன் மகனுக்கு அளித்து இலங்கையின் அரசனாக முடி சூட்டி விட்டு இறந்தான்.

அவனுக்குப் பின்னர் மூன்று இளவரசர்களும் பரங்கியர்களுக்கு எதிராகப் போரிட்டனர். மூன்றாவது இளவரசனான ராஜசிங்கன் இலங்கை முழுவதற்கும் மன்னனாக முடிசூட்டிக் கொண்டான். இராஜசிங்கனை கொல்வதற்குப் பல முயற்சிகள் நடைபெற்றன. போர்த்துக்கீசியர்களை எதிர்த்து தொடர்ச்சியாக ராஜசிங்கன் போர் நிகழ்த்திக் கொண்டே இருக்க வேண்டிய சூழல் இருந்தது. அந்தச் சமயத்தில் கரையோரத்தில் டச்சுக்காரர்கள் வந்து தங்கி இருப்பதை அவன் கேள்விப்பட்டான். தனது மந்திரிகள் இருவரை டச்சுக்காரர்களிடம் தூது அனுப்பி ஏராளமான கப்பலுடன் தன் நாட்டிற்கு வந்து தன்னைப் பாதுகாக்கும் படி கேட்டுக் கொண்டான். போர்த்துக்கீசியர்களை டச்சுக்காரர்கள் எதிர்க்க வேண்டும் எனவும் கேட்டுக் கொண்டான். இலங்கையை எதிரிகளிடம் இருந்து காப்பாற்றும் பொறுப்பை ஒல்லாந்தரிடம், அதாவது டச்சுக்காரர்களிடம் ஒப்படைத்தான். பின்னர் மதுரையிலிருந்து இளவரசி ஒருத்தியை வரவழைத்து அவளைப் பட்டத்து ராணியாக ஆக்கிக் கொண்டான். அதன் பின்னர் 52 ஆண்டுகள் சிறப்பாக ஆட்சி செய்தான் என்று சூளவம்சம் குறிப்பிடுகிறது.

அவனுக்குப் பின்னர் ராஜசிங்கனின் மகனான விமலதர்மசூரியன் ஆட்சியைக் கையில் எடுத்தான். அவனும் மதுரையிலிருந்து ஒரு அரசகுமாரியை வரவழைத்து திருமணம் செய்து கொண்டு பட்டத்துராணி ஆக்கிக் கொண்டான். இவன் மூன்று அடுக்கில் ஒரு கோயிலைக் கட்டி (தலதா மாளிகை) அதில் தந்த தாதுவைப் பிரதிஷ்டை செய்தான். ஆண்டுதோறும் புனித தந்த தாதுவிற்கு விழா எடுத்தான். பிக்குகளைப் பராமரித்தான். இவன் 22 ஆண்டுகள் சிறப்பாக ஆட்சி புரிந்தான் என்று சூளவம்சம் குறிப்பிடுகிறது. இதில் குறிப்பிடப்படும் தலதா மாளிகையே இன்று கண்டியில் நாம் காணும் புனித மாளிகை. இங்குதான் கௌதம புத்தரின் பல் இருப்பதாகக் குறிப்பிடப்படுகின்றது. ஆக, இது கட்டப்பட்ட காலத்தை நோக்கும் போது அனேகமாக இந்த மன்னனின் ஆட்சி கி.பி 16ம் நூற்றாண்டு என உறுதியாகக் கூறலாம்.

அதற்குப் பின்னர் அவனது மகனான வீர பராக்கிரம நரேந்திர சிங்கன் ஆட்சிபீடம் ஏறினான். அவனும் மதுரையிலிருந்து இளவரசிகளை வரவேற்று

மணந்து கொண்டான். இவனும் பௌத்த நெறிகளைப் போற்றி பாதுகாத்தான். தங்க தாது இருந்த மாளிகையின் சுவர்களில் 32 ஜாதக கதைகளையும் ஓவியமாக வரைய வைத்தான்.

விமலதர்ம சூரியனுக்குப் பின்னர் அவனது இளைய சகோதரன் ஸ்ரீ விஜய ராஜசிங்கன் அரசனானான். அவனும் மதுரையிலிருந்து அரச குலப் பெண் ஒருத்தியை அழைத்து வந்து தனது பட்டத்து ராணியாக ஆக்கிக்கொண்டான். இவனும் பௌத்த சமயத்தைச் சிறப்புடன் பேணிவந்தான். இவன் மனைவியைப் பற்றிச் சொல்லும்போது "பிறப்பிலிருந்து பொய்யான சமயத்தைப் பின்பற்றி வந்த மகாராணியும் நேர்மையான சமயத்திற்கு மாறினார்" என்று குறிப்பிடுகிறது. அதாவது, அனேகமாக சைவ சமயத்தில் மகாராணி இருந்திருக்க வேண்டும். அதிலிருந்து பௌத்த சமயத்திற்கு மாறினார் என்பதை சூளவம்சம் இவ்வாறு குறிப்பிடுவதாக எடுத்துக் கொள்ளலாம்.

அந்தச் சமயத்தில் பரங்கியர்கள், அதாவது போர்த்துக்கீசியர்கள், இலங்கையின் பல பகுதிகளில் தொடர்ந்து வாழ்ந்து வந்திருக்கின்றனர். அதுமட்டுமன்றி அவர்கள் பணத்தாசைக் காட்டி பொதுமக்களைத் தங்களது சமயத்திற்கு மாற்றினர் என்றும் சூளவம்சம் குறிப்பிடுகிறது. அதாவது, போர்த்துக்கீசியர்கள் கத்தோலிக்க கிறித்தவ சமயத்திற்கு இலங்கை மக்களை மாற்றினார்கள் என்பதை சூளவம்சம் இவ்வாறு குறிப்பிடுவதாக எடுத்துக்கொள்ளலாம்.

ஸ்ரீ விஜய ராஜசிங்கன் இறந்த பிறகு அவனது மனைவியின் சகோதரன் கீர்த்தி ஸ்ரீ ராஜசிங்கன் அரசனானான். அந்தக் காலகட்டத்தில் டச்சுக்காரர்களும் தங்களது கிருத்துவ மதத்தை இலங்கை மக்களிடையே பரப்பும் முயற்சிகளை மேற்கொண்டதாகவும் தெரிகின்றது. அதனால் டச்சுக்காரர்களை அடக்கி வைக்க வேண்டுமென்று அவன் முயற்சி மேற்கொண்டான். அவனது படையினர் டச்சுக்காரர்களின் கோட்டைகளையும் வீடுகளையும் கைப்பற்றி அழித்தனர். ஆனால் டச்சுக்காரர்கள் இதற்குச் சளைக்காமல் தமது போர் வீரர்களுடன் மலாய்க்காரர்களைச் சேர்த்துக்கொண்டு மன்னனின் படைகளைத் தாக்கினர். மன்னன் தன் மனைவி, இளவரசர்கள், ஏராளமான சொத்துக்கள் ஆகியவற்றுடன் காட்டுப்பகுதியில் ஒளிந்திருந்தான். பிறகு டச்சுக்காரர்களுடன் சமாதானம் செய்துகொண்டு மீண்டும் ஆட்சியை நடத்தினான். தந்த தாதுவைக் கோயிலில் வைத்து பௌத்த சமயத்தைப் பாதுகாத்தான். ஒல்லாந்தர் மன்னனுடன் அவன் சமாதானம் செய்து கொண்டான்.

கீர்த்தி ஸ்ரீ ராஜசிங்கனின் மரணத்திற்குப் பிறகு அவனது இளைய சகோதரனான ராஜாதி ராஜ சிங்கன் அரசனானான். அவன் காலத்தில் தாய்லாந்திலிருந்து உபாலி என்ற தேரரின் தலைமையில் இலங்கைக்குப் பிக்குகள் சிறிவர்த்தன நகருக்கு அருகில் வந்து தங்கி இருந்ததாக சூளவம்சம் கூறுகின்றது. இந்த மன்னனுக்குப் பிறகு அவனது சகோதரியின் மகனான ஸ்ரீ விக்ரம ராஜ சிங்கன் என்பவன் அரசன் ஆனான்..அவனே சூளவம்சத்தின் வரலாறு கூறும் மன்னர்கள் பட்டியலில் இறுதியானவன். அவன் கெட்ட சிந்தனைகள் கொண்டவர்களோடு நட்புறவு பாராட்டினான் என்றும், அமைச்சர்கள் பலரையும் சிரச்சேதம் செய்தான் என்றும், இரக்கமில்லாத கொள்ளையனாக இவன் இயங்கினான் என்றும், மக்கள் இதனால் பாடுபட்டனர் என்றும் சூளவம்சம் குறிப்பிடுகிறது. இதன் காரணமாகக் கொழும்பு மக்களால் சிறைபிடிக்கப்பட்டு இந்தியாவிற்கு நாடு கடத்தப்பட்டான் என்றும், அதன் பின்னர் இலங்கை ராஜ்யம் ஆங்கிலேயர்களால் அபகரித்துக் கொள்ளப்பட்டது என்றும் சூளவம்சம் கூறி நிறைவு செய்கிறது.




சூளவம்சம் கூறும் செய்திகள் வரலாற்று ரீதியாகப் பல தகவல்களை விவரிப்பதாக இருந்தாலும், ஆங்காங்கே செய்திகள் திரிக்கப்பட்டும், தகவல்களை மிகைப்படுத்தி சார்புத்தன்மையுடன் எழுதப்பட்டும் இருப்பதாகவே சிந்திக்கத்

தோன்றுகிறது. உதாரணமாக, இறுதியில் ஸ்ரீ விக்கிரம ராஜசிங்கன் டச்சுக்காரர்களால் இந்தியாவிற்கு நாடு கடத்தப்பட்டான் என்ற செய்தி சூளவம்சத்தில் இல்லை. மாறாக மக்கள் நாடு கடத்தினர் என்று செய்தி குறிப்பிடப்படுகிறது. ஆக சூளவம்சம் கூறும் வரலாற்றுச் செய்திகள் பலவற்றை ஆராயும்போது, சமகாலத்து ஆவணங்கள் பலவற்றையும் அதனோடு ஒப்பிட்டுப் பார்த்து காலங்களை நிர்ணயிப்பதோடு மட்டுமல்லாது, செய்திகளில் உள்ள நம்பகத்தன்மையையும் சோதிக்க வேண்டியது அவசியமாகின்றது. எதுவாகினும், இன்று நமக்குக் கிடைக்கின்ற முக்கிய இலங்கை பற்றிய ஆவணங்களில் சூளவம்சம் மிகமுக்கியமானதொரு வரலாற்றுக் களஞ்சியம் என்பதில் மறுப்பு ஏதும் இல்லை..

உலகெங்கிலும் நிகழ்ந்த பண்டைய அரசுகளின் வரலாற்றை வாசிக்கும் போது இரத்தக் கறை படிந்த அரச வாழ்க்கையின் பிரதிபலிப்பாகவே மன்னர்களின் வரலாறு அமைந்திருப்பதைக் காண்கின்றோம். துரோகம், கடும் தண்டனைகள், மனிதாபிமானமற்ற செயற்பாடுகள், மக்கள் அரசுகளால் பகடைக்காய்களாகப் பயன்படுத்தப்பட்ட சூழல் என்றே வரலாறு அமைந்திருப்பதைக் காண்கின்றோம். இவை அனைத்தும் பெரும்பாலும் மதங்களின் பெயர்களாலேயே மன்னர்களால் முன்னெடுக்கப்பட்டிருப்பதையும் நாம் ஒதுக்கி விடமுடியாது. இலங்கையின் வரலாறும் இதற்கு விதிவிலக்கல்ல.

இலங்கையின் பௌத்தம் வைதீக சாத்திரத்தின் ஒன்றாகிய மனு நீதியை உள்வாங்கிக் கொண்ட பௌத்தமாகவே அரசர்களால் முன்னெடுக்கப்பட்டிருப்பதை சூளவம்சம் தெளிவுடன் வெளிப்படுத்துகின்றது.

இலங்கை இனக்குழுக்களிடையே தொடர்ச்சியான சண்டைகளையும், போர்களையும், கொடூரமான வாழ்க்கை நிலையையும் சந்தித்து வந்த நாடு. துரதிருஷ்டவசமாக அது இந்த நூற்றாண்டிலும் தொடர்கின்றது!

(புகைப்படக் குறிப்பு - ஸ்ரீ விக்கிரம ராஜசிங்கனின் மனைவி. (கி.பி. 1798 - 1815) - வேங்கட ரங்கஜம்மாள் தேவி பாண்டிய மன்னர் பரம்பரை சார்ந்த தெலுங்கு இளவரசி, கடந்த அக்டோபர் 2018 நான் யாழ்ப்பாணத்தில் யாழ் அருங்காட்சியகத்தில் பதிந்த புகைப்படம்)

---

தொடர்பு: முனைவர் க.சுபாஷிணி (ksubashini@gmail.com)

## 4. நான் அகதியானது

***– ரவி அருணாச்சலம்***

நான்கு நாடுகளைத் தீ மிதித்து நடந்ததுபோல நடந்து கடந்து ஜெர்மனி வந்தேன். நான் அப்போது நின்ற நாடு, உக்ரைன். 1996 - யூன் ஏழாம் நாள், உக்ரைனி லிருந்து என் புறப்பாடு இருந்தது. இலங்கைத் தமிழர் நாங்கள் எட்டு பேர். ஒரு வாகனத்திலும் பின்னர் நடையிலுமாக பிலருஸ் நாட்டை அடைகிறோம். இரண்டு நாள்கள் அதற்குப் பிடித்தன. வழி தெளிவாக வேண்டுமென்று நான்கு நாள்கள் அங்கு காத்திருந்தோம். பிறகும், அதே காடு வழி நடை! சென்றுசேர்ந்த நாடு ருமேனியா.

ருமேனியாவின் எல்லை கடந்தபோது, அது போலந்து என்று சொன்னார்கள். அதன் தலைநகர் வார்சாவில் நான்கு நாள் தங்கல். அங்கிருந்து தொடருந்து ஏறி போலந்தின் எல்லைக்கிராமம் ஒன்றில் நாங்கள் தங்கிய நாள்கள் ஒரு கிழமைக்கும் மேலே. அந்த எல்லைக்கிராமத்தைத் தாண்டினால் ஜெர்மனி. அதை நாங்கள் காடுகளினால் தாண்டவில்லை; நதி! ஆற்றினைக் கடந்து ஜெர்மனியில் கால்வைத்தோம். அந்த நாளை யோசித்தேன்; மணிக்கூட்டில் நேரம் பார்த்தேன். 1996, யூலை ஆறாம் திகதி, சாமம் ஒன்றரை மணி. ஒருமாத உலைவு மற்றும் மனஉளைவு!

இது உல்லாசப் பயணமில்லை; ஊர் சுற்றி பார்க்கப் புறப்பட்டதுமல்ல. 'மரணதேவதை இயற்கையாய் வந்து 'வருக' என்னும் வரைக்கும் இவ்வுலகில் மூக்கும் முழியுமாய் வாழவே பிறந்தோம்' என்பதற்கிணங்கவே இந்தத் தீமிதிப்பு நடை!

ஜெர்மனியில் பதின்மூன்று மாத வாழ்க்கை. அது என் உயிரைத் தின்னத் தொடங்கியது. சீரழிவின் உச்சங்களைத் தொட்டேன். இன்னும் இருந்தால் அழிவுதான். மீண்டும் அதே தீமிதிப்பு நடை! ஜெர்மனியிலிருந்து ஒல்லாந்து தாண்டி, பிரான்ஸ் வந்து சில நாள்கள் தரித்து, கடல் கடந்து இங்கிலாந்தை அடைந்தேன். வந்த நாள் மிக முக்கியமான நாள். 1997 ஓகஸ்ட் 31-ம் நாள். இளவரசி டயானா இறந்த இரவின் விடியல்!

இந்த விவரிப்பெல்லாம் எதற்கு? இலங்கையின் இரண்டு பல்கலைக் கழகங்களில் (யாழ்ப்பாணம், கொழும்பு) கல்வி பயின்றேன். என் உத்தியோகம்

உயர் நிலையுடைத்து. ஏன் எனக்கு இந்த ஓட்டம்? ஒரேயொரு காரணம்; இலங்கைத்தீவில் தமிழைப் பேசுவதன்றித் தவறொன்றும் நான் செய்யவில்லை.



நான் இங்கிலாந்தில் செய்யாத வேலைகள் இல்லை. வானொலி, தொலைக்காட்சியில் தயாரிப்பாளராக இருந்தது மகிழ்வு, மதிப்பு. ‘லோன்றி’யில், பெட்ரோல் நிரப்பு நிலையத்தில், ‘சூப்பர் மார்க்கற்றில்’, உணவு விடுதியில் செய்த வேலைகளைக் குறைவாக நான் மதிப்பிடவில்லை. மதிப்பிட்டோர் உண்டு!

ஒரு நம்பிக்கை இருந்தது, நான் என் தேசத்துக்குத் திரும்பப் போவேன். பழைய வேலை கிடைக்குமோ இல்லையோ, என் மண்ணை மிதித்து என் வாழ்வு உயிர்க்கும். என் மண்தான் எனக்கு உரப்பு. நான் மாத்திரம் அவ்வாறு உணர்ந்தேனல்லன். அவ்வாறு உணர்ந்தவர் பலர்.

2009! இல்லை, அந்த ஆண்டைச் சொல்லக் கூடாது. 2006! போர் தொடங்கியது. நான்கோ ஐந்தோ கட்ட ஈழப்போர். நாங்கள் நம்பியபடி, பார்த்தபடி இருக்கிறோம். இந்தப் போர் வெல்லப்படும். இறுதியில் ஏதோ ஒரு தீர்வு கிடைக்கும். தமிழீழம் அல்லது சுயாட்சி! என்போன்று லட்சக்கணக்கானோர் அதை நம்பியுமிருக்கலாம். காலம் அப்படியே கரைந்துகொண்டேபோகிறது.

2008-ல் ஒன்று புரிகிறது, இங்கு நடப்பது போர் அல்ல. அழிப்பு ஒன்று நிகழப்போகிறது! வெற்று வார்த்தைகளை மனம் நம்பியும் நம்பாமலும் விடுகிறது. அடி மனசு சொல்கிறது, ‘வெல்லுவம்!’ இன்னொரு மனசு அதை மறுப்பதையும்

உணர்கிறேன். போர் உச்சத்துக்குப் போய்விட்டது. மானுடரின் மரணத்துக்கு அளவே இல்லை!

நான் லண்டன் மாநகரில் இருக்கிறேன். இங்கிருந்து என்ன செய்ய முடியும்? இங்கு நிகழ்ந்த போராட்டங்களுக்கு அளவே இல்லை. மூன்று முறை பென்னாம்பெரிய ஊர்வலம்! அந்த ஊர்வலங்களை வழிநடத்துவோரில் நானும் ஒருவன். லண்டன் மாநகர் அப்படி ஓர் ஊர்வலத்தைக் கண்டதில்லை. இரண்டு லட்சத்திற்கும் மேற்பட்ட தமிழ் மக்கள்.

இரண்டு லட்சத்திற்கும் மேற்பட்ட மனிதர்களின் ஊர்வலத்தை ஒருபோதும் லண்டன் கண்டதில்லை. 2009 ஜனவரி 31-ம் நாள், சனிக்கிழமை ஊர்வலம்! லண்டனின் வரலாற்றில் நிகழாதவாறு பிப்ரவரி இரண்டாம் நாள் பெரும் பனிப்பொழிவு. ஏதோ ஓர் ஊடாட்டம் இரண்டினிடையேயும் உண்டு.

இங்குள்ள பத்திரிகைகள் அவ்வூர்வலங்களுக்கு ஆச்சர்யக்குறி போட்டன. நாள்தோறும் பாராளு மன்றத்தின் முன்னுள்ள மைதானத்தில் உண்ணாவிரதம் இருந்தோர் பலர். நாள்தோறும் நான் போனேன். இது என் கடமைகளில் ஒன்று என எனக்குத் தெரிந்தது. பணி முடித்து வந்த அன்றைய நாள்களின் பின்னேரங்கள் எனக்குச் சாம்பல் கலந்த வர்ணம். என் பயணம் தரும் தொடருந்துகள்கூடச் சோம்பலுற்றுப் போயிற்று. துக்கத்தின் குறியீடாக அதை நான் பார்த்தேன். 'வெள்ளை'கள் வெகு இயல்பாகத் திரிகிறார்கள். எங்கள் முதுகில் அல்ல; மனதில் மிகுந்த சுமை!

2009 மே, 18-ம் நாள். அஃது ஒரு திங்கட்கிழமை. அமெரிக்கத் தூதரகத்தின் முன்னே போராட்டம். நான் பணிபுரியும் நிறுவனத்திற்கு 'வைத்திய விடுமுறை' அறிவித்துவிட்டு அப்போராட்டத்தில் கலந்து கொள்கிறேன். அப்போது வந்த செய்திகள் உவப்பானவையல்ல. வெள்ளைக்கொடி ஏந்தியோர் கொல்லப்பட்டார்கள் என்ற செய்தி அது. தோற்றுக்கொண்டே போகிறோமா? மதியம் மாத்திரம் அல்ல; இரவும்கூடச் சாப்பிட முடியாமல் போயிற்று.

ஆனால், அடுத்த அடுத்த நாள் வந்த செய்திகள், "அய்யோ என்ரை தெய்வமே" என்று என்னைக் கதறப் பண்ணியது. எங்களுக்கான தெய்வம் எங்களிடம் இல்லாமல் போனார். அது எனக்கு முற்றுமுழுதாகத் தெரிந்தது. அது முதலும் கடைசியுமான என் கதறல்!

நன்றி: விகடன் (01/05/2019)

## 5. விஜயநகர-நாயக்கர் காலச் சுவரோவியங்கள்

***– துரை.சுந்தரம்***

முன்னுரை:

அண்மையில், கோவை வாணவராயர் அறக்கட்டளை சார்பாக நடந்த சொற்பொழிவு நிகழ்ச்சியில் சென்னை-கிறித்தவக் கல்லூரியில் பேராசிரியராகப் பணி நிறைவு செய்துள்ள முனைவர். சா.பாலுசாமி அவர்களின் சிறப்புரை மேற்கண்ட தலைப்பில் மிகச்சிறப்பாக அமைந்தது. வரலாறு, தொல்லியல் தொடர்பான பல துறைகளுள் மிகுதியும் கருதப்படாத, தெரிந்துகொள்ளப்படாத ஒரு புலமாகவே சுவரோவியங்கள் பற்றிய செய்திகளும் தரவுகளும் அடங்கிய துறை அமைந்துவிட்டது. அவ்வகையில், இந்தத் துறையைத் தம் ஆய்வுக்களமாக எடுத்துப் பல அரிய தரவுகளையும் புரிதலையும் ஏற்படுத்தியுள்ள பேராசிரியரின் உரை, வரலாறு-தொல்லியல் ஆர்வலர்களுக்கும், இவற்றில் ஈடுபட்டுள்ள ஆய்வாளர்களுக்கும் மிகுந்த பயன் அளிக்கும் எனில் மிகையல்ல. அச் சொற்பொழிவின் வழி சுவரோவியங்கள் பற்றிக் கிடைத்துள்ள ஒரு பார்வையே இங்கு பகிர்ந்துகொள்ளப்படுகிறது.

ஓவியம்-ஒரு செவ்வியல் கலை:

ஓவியங்கள் பற்றி நம்மிடையே ஒரு தெளிவான புரிதல் இருக்கவில்லையென்றே சொல்லலாம். ஓவியம் எவ்வாறு வளர்க்கப்பட்டது? ஓவியம் பற்றி நாம் தெரிந்துகொள்ளவேண்டியவை யாவை? தமிழகத்தில், பாறை ஓவியங்களைக் கடந்து சங்ககாலத்துக்கு வந்தால், அக்காலத்தே ஓவியங்கள் எவ்வாறிருந்தன? இதை அறிந்துகொள்ள சங்ககால ஓவியங்கள் இல்லை. இருந்த தடயம் கூடக் கிடைக்கப்பெறவில்லை. கட்டிடங்களின் எச்சங்களை நாம் காண்கிறோம். ஆனால், ஓவியங்கள் காலத்தால் அழிந்துபோயின.

சங்ககால மக்களின் உள்ளத்தில்தாம் எத்துணை நுண்மையான கலையுணர்வு இருந்துள்ளது! இசை, நாட்டியம் (நடனம்), ஓவியம் என எத்துணை நுட்பங்கள்! கலைகள்! இவையெல்லாம் முருகியல் (அழகியல்) சார்ந்தவை. ஓவியத்தோடு தொடர்புடைய சித்திரமாடம், சித்திரக்கூடம் ஆகியவை இருந்துள்ளன. ஓவியத்தில் புனைந்த ஓவியம், புனையா ஓவியம், கோட்டோவியம் எனப்பல. தமிழரின் புழங்கு பொருளாய் ஓவியம் இருந்துள்ளது. ஓவியச் சாலைகள் இருந்துள்ளன; ஓவியச் செந்நூல் இருந்துள்ளது. கி.பி. 5-9 நூற்றாண்டுகளின் காலகட்டத்தில் தமிழகத்தை ஆண்ட பல்லவர் மகத்தான

கலைகளை வளர்த்தார்கள். அவற்றில் ஓவியம் உண்டு. பல்லவ அரசன் மகேந்திர வர்மன், சித்திரகாரப்புலி என்ற சிறப்புப் பெயரைக்கொண்டிருந்தான். ”தக்ஷிண சித்திர” என்னும் ஓவிய நூலுக்கு அவன் உரை எழுதியதாகக் கூறுவர். பல்லவர் கால ஓவியங்கள் மிகுதியும் கிடைக்கவில்லை. பல்லவர் படைப்புகளின் எச்சங்களாக ஒரு சில ஓவியத் துணுக்குகளே கிடைத்துள்ளன.

காஞ்சி கைலாசநாதர் கோயில், பனைமலைக் கோயில் ஆகிய கோயில்களில் உள்ள இந்த ஓவியத்துணுக்குகள், பல்லவ அரசன் இராஜசிம்மனின் காலத்தவை. சித்தன்ன வாசல் குடைவரைக் கோயிலில் உள்ள தாமரைத்தடாகம் ஓவியம் மிகுந்த சிறப்புடையது. இதை அஜந்தா ஓவியங்களுக்கு இணையாகக் குறிப்பிடுவர். பல்லவரை அடுத்துச் சோழர் காலத்தில் தஞ்சை, தாராசுரம், புள்ளமங்கை ஆகிய கோயில்களில் சில ஓவியங்கள். தஞ்சையில் இருப்பது ஓர் ஓவியம் மட்டுமே. இந்த ஓவியங்களெல்லாம் செவ்வியல் மரபு சார்ந்தவை. ஓவியம், சிற்பம் ஆகியனவற்றை வறிதே உயிர்த்தோற்றத்தின் மெய்நிகர்ப் படிவமாக அமைக்காது, முருகியலும் கற்பனை வளனும் சேர்ந்த ஒன்றாகச் சில வரையறைகளும், நுட்பக்கூறுகளும் இருக்கும் வண்ணம் உருவாக்கி வளர்த்ததே செவ்வியல் மரபு. அவற்றின் அடிப்படையில், ஓவியம், சிற்பம் ஆகியவற்றுக்குச் செந்நூல்கள் எழுந்தன. சோழர் காலத்தை அடுத்துத் தமிழகத்தில் மையப்பேரரசு இல்லாமையால் செவ்வியல் மரபு வளரவில்லை. சிற்றரசுகள் நிலவிய பகுதிகளில் ஓவியமும் பொதுத்தன்மையின்றிப் பகுதி பகுதியாக வளர்ந்தது.

செவ்வியல் மரபில் ஓவியங்கள் எவ்வாறிருந்தன?

செவ்வியல் மரபில் ஓவியங்களில் கீழ்க்கண்ட கூறுகள் முதன்மையானவை.

1 சரியான உடல்

2 பாவனை - கோலம்

3 தகவுப் பொருத்தம்

4 ஒயில் (அழகு) (GRACE)

5 உறுப்புகளின் இணைப்பு

6 ஒப்புமை

7 ஏற்றம் இறக்கம்

8 தாராளமாய் இடம் விடல்

போன்றவை. ”விஷ்ணுதர்மோத்திரம்” என்னும் நூலில் ”மகாபுருஷ லட்சணம்” என்ற தலைப்பில் குறிப்புகள் உள்ளன.

ஓவியங்களுக்கான கருப்பொருளாக ஓவியர்கள் எடுத்துக்கொண்டவை :

1 புராணங்களும், தலபுராணங்களும்

2 திருவிழாக்கள்

3 மன்னர்கள்
4 வாழ்வியல் நிகழ்வுகள்
5 திருத்தலங்கள்
6 தெய்வ உருவங்கள்
7 வரலாற்று நிகழ்ச்சிகள்

சிறப்புப் பெற்ற சில ஓவியங்கள்:

பல்லவ அரசன் இராஜசிம்மன் காலக் காஞ்சி ஓவியங்கள் மிகச் சிறப்பானவை. உலகவெளியில் எந்தவிடத்திலும் இல்லாத படைப்பு என்று அவற்றைக் குறிப்பிடலாம். இராஜசிம்மன் பல்கலைகளை அறிந்தவன் என்பதை அவனுடைய சிறப்புப் பெயரான "அத்யந்த காமன்" என்பதே சுட்டும். "எல்லையில்லாத விருப்புடையவன்" என்பது அச்சொல்லின் பொருள். காஞ்சி ஓவியமான "சோமாஸ்கந்தர்" ஓவியம் மிக அருமையானது. அடுத்து, சித்தன்னவாசலின் 'மலர்க்குளம்" ஓவியம். இவற்றில், சிவப்பு, பச்சை, மஞ்சள் ஆகிய வெளிர்வண்ணங்கள் பயன்படுத்தப்பெற்றுள்ளன. சோழர் கால ஓவியங்களில், தஞ்சைக் கோயிலின் சாந்தாரப்பகுதியில் இடம்பெற்ற ஓவியம்; சுந்தரர் வாழ்வின் நிகழ்வு பற்றியது. இறைவன், முதியவர் கோலத்தில் சுந்தரரை ஆட்கொள்ள வந்து மூல ஓலை ஆவணத்தைக்காட்டிச் சுந்தரர் தனக்கடிமை என நிறுவும் காட்சி. இவ்வோவியத்தில், முதியவர் கோலம் அத்துணை அழகோடு காட்டப்பெற்றுள்ளது.



காஞ்சி கைலாசநாதர் கோயில் ஓவியம்



சிவன் சுந்தரரை அடிமை கொள்ளல்-தஞ்சைக்கோயில் ஓவியம்

ஓவியக்கலை- விஜயநகரர் கலை –தோற்றம்:

விஜயநகரர் ஆட்சி குல்பர்கா (Gulbarga)விலிருந்து குமரி வரை பரவியிருந்த ஆட்சி. தமிழகத்தில், நேரடியாக 200 ஆண்டுகளும் அதன் பின்னர் நாயக்கர் காலத்தில் விஜயநகரர் சார்பாக மகாமண்டலேசுவரர் ஆட்சி. இக்காலகட்டத்தில், பண்டைய கோயில்களின் புதுக்குதல் மற்றும் விரிவாக்கப் பணிகள் நடந்தன. புதிய கோயில்களின் கட்டுமானப் பணியும் நடைபெற்றது. சிறப்பாகக் கோபுரங்கள், மண்டபங்கள், சுற்றாலைகள், அரண்மனை ஆகிய கட்டுமானங்கள் ஏற்பட்டன. இவற்றில், ஓவியங்கள், செவ்வியல் மரபும் நாட்டார் மரபும் இணைந்து தீட்டப்பட்டன. 14-16-ஆம் நூற்றாண்டுகளில், விஜயநகரர் ஓவியங்களில் வடமேற்கு இந்தியச் சமண மரபும் இராட்டிரகூடர் மரபும் பின்பற்றப்பட்டுள்ளன.

சில ஓவியங்கள்:

தஞ்சைக் கோயில்:

சோழர் காலத் திரிபுராந்தகர் - திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள் செவ்வியல் மரபு எனில், விஜயநகரர் காலத் திரிபுராந்தகர் நாட்டுப்புற மரபு; கதை சொல்லும் மரபு.


திரிபுராந்தகர்-தஞ்சைக் கோயில் ஓவியம்

காஞ்சி திருப்பருத்திக்குன்றம்:

காஞ்சி திருப்பருத்திக்குன்றத்தில், இரண்டாம் புக்கராயர் (Bukka Raya II) இருசப்பர் கட்டுவித்த ”சங்கீதமண்டப”த்தில் ஓர் ஓவியம். சமணத் தீர்த்தங்கரர் வர்த்தமானருக்கு இந்திரன் நீராட்டும் காட்சியும், பிரியகாமி கருவுற்றிருக்கும் காட்சியும் சிறப்பானவை.


திருப்பருத்திக்குன்றம்-ஓர் ஓவியம்

ஹம்பி – விரூபாட்சர் கோயில்:



ஹம்பி-விருபாட்சர் கோயில் - ஓர் ஓவியம்

வித்யாரண்யர் ஓவியம், அர்ச்சுனன் வில் வளைக்கும் காட்சி, இராமன் – சீதை திருமணக்காட்சி ஆகியன குறிப்பிடத்தக்கவை.

லேபாக்ஷி கோயில்:



லேபாக்ஷி கோயில் - ஓர் ஓவியம்

வீரண்ணன் - விருப்பண்ணன், வீரபத்திரரை வணங்கும் காட்சி, பார்வதி திருமணக்காட்சி, பன்றி உருவம், அர்ச்சுனன் – சிவன் சண்டைக் காட்சி ஆகியன குறிப்பிடத்தக்கவை.

நாயக்கர் காலம் - 16-18 நூற்றாண்டு:

நாயக்கர் கால ஓவியங்கள் ஏறத்தாழ முப்பது இடங்களில் இன்றும் காணும் வகையில் உள்ளன; பெரும்பாலானவை அழிந்துவரும் நிலை. மதுரை நாயக்கர்கள் நாகம நாயக்கர், விசுவநாத நாயக்கர், தஞ்சை இரகுநாத நாயக்கர், செஞ்சி துபாக்கி கிருஷ்ணப்ப நாயக்கர் ஆகியோர் கால ஓவியங்கள் குறிப்பிடத்தக்கவை. வேலூர் நாயக்கர் கால மார்க்கசகாயர் கோயில் கல்யாணமண்டபம் குறிப்பிடத்தக்கது.

ஆந்திர ஓவியத்தொடர்பு:

சில ஓவியங்கள் ஆந்திர ஓவியத் தொடர்புகொண்டவை. ஆந்திராவின் கலம்காரி, சிரியால் ஆகிய ஓவிய மரபுகள் தமிழக ஓவியங்களில் காணப்படுகின்றன.

திருப்புடை மருதூர்:

திருப்புடை மருதூரில் ஒரு முழுச்சுவரையே திரைச்சீலை வடிவத்தில் காட்டி ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன. மிகச் சிறப்பாக வரையப்பட்ட இந்த ஓவியத்தைப்பற்றிய விரிவான குறிப்புகளைக் கொண்ட நூல் - இப்பேராசிரியர் சா.பாலுசாமி எழுதியது - விரைவில் வெளியாகவுள்ளது.

ஓவியம் வரைதலில் தொழில் நுட்பம்:

ஓவியம் வரைதலில் STUCCO என்னும் தொழில் நுட்பம் பயன்படுத்தப்பெற்றுள்ளது. இம்முறையில், ஓவியம் வரையும் பரப்பின்மீது சுதைச்சாந்து பூசப்பட்டு இப்பரப்பு ஈரமாயிருக்கும்போதே வரைதலைக் குறிக்கும். முதலில், கோடுகளால் உருவம் வரையப்பெறும். பின்னர், வண்ணம் தீட்டப்பெறும். அழகர் கோயில் வசந்த மண்டபத்தில் இவ்வகை ஓவியங்களைக் காணலாம். இங்குள்ள ஓவியங்கள் இராமாயணக்கதையைச் சொல்லும் ஓவியங்களாகும்.

ஓவியம் வரையும் முறை:

விரிவாகக் கதைகளைக் கூறும் நோக்கம் கொண்ட ஓவியங்கள், மேற்கூறியவாறு, சுதைப்பரப்பு ஈரமாய் இருக்கும்போது கோட்டோவியம் வரையப்பெற்று. ஒன்றின்மீது ஒன்றை அடுக்கியதுபோன்ற திரளாக அமைப்பார்கள். எல்லைக் கோடுகளால் வேறு வேறு காட்சிகள் காட்டப்பெறும். காட்சிகளின் விளக்கங்களைத் தமிழ், தெலுங்கு மொழியில் எழுதுவதுண்டு. அழகர் கோயில் ஓவியங்களில் காட்சி விளக்க எழுத்துகளைக் காணலாம்.

மேலும் சில ஓவியங்கள்:

திருவரங்கம்:

திருவரங்கம் கோயிலில் திருமால் எடுத்த பன்றி உருவத்தோற்றம் (வராக அவதாரம்) ஓவியமாகத் தீட்டப்பட்டுள்ளது. இந்த ஓவியத்தில், அடிப்படை வண்ணங்களான நீலம், பச்சை, மஞ்சள் ஆகியவை பயன்படுத்தப்பட்டுள்ளன.

திருப்புடை மருதூர் - நாறும்பூ நாதர் கோயில்:

திருப்புடை மருதூர் கோயில் கோபுரத்து மாடங்களில் உட்புறம் ஓவியங்களை வரைந்துள்ளனர். இங்கு, மகாபாரதக் காட்சிகள் இடம் பெற்றுள்ளன. திருவிளையாடற்புராணத்தில் வருகின்ற சம்பந்தர் கதை, மாணிக்கவாசகர் கதை ஓவியங்கள் சிறப்பானவை. சம்பந்தர், சமணரோடு வாதிடும் கதைக்காட்சியில், அவரது ஏடு (ஓலை), ஆற்றை எதிர்த்துச் செல்லும் கருத்து முதன்மையானது. ஆற்றை எதிர்த்துச் செல்லும் கருத்தை ஓவியர் இந்த ஓவியத்தில் நுட்பமாகக் காட்டியிருப்பார். மீன்கள் எப்போதும் ஆற்றை எதிர்த்தே நீந்தும் இயல்புடையன. இந்த நுட்பத்தை ஓவியர் ஓவியத்தில் கொணர்ந்துள்ளார். ஆற்று நீரோட்டத்துக்கு எதிர்த் திசையில் மீன்கள் நீந்துவதுபோல வரைந்த ஓவியரின் அறிவுத்திறன் பாராட்டுக்குரியதல்லவா? மற்றொரு ஓவியத்தில், கந்தபுராணம் சொல்லும் வள்ளி கதை மையம். அவ்வோவியத்தில் ஒரு காட்சி. தினைப்புனக் காவல் பற்றியது. தினை, பனிக்காலத்தில் விளையும் பயிர். நெருப்பில் குளிர் காயும் காட்சியின் மூலம் ஓவியர் பனிக்காலத்தைக் குறிப்பால் சுட்டியிருப்பார்.

திருப்புடை மருதூர்-போர்க்காட்சி ஓவியம்:

திருப்புடை மருதூர் கோயிலின் இரண்டாம் தளத்தில் வரலாற்று நிகழ்ச்சி – போர்க்காட்சி - ஒன்று அருமையாக வரையப்பட்டிருக்கும். (திருப்புடை மருதூர் கோயில் ஓவியங்களின் சிறப்பைப்பற்றித் தனியொரு நூல் சொற்பொழிவாளரால் எழுதப்பட்டுள்ளது.) கோயிலின் ஐந்து தளங்களிலும் உள்ள ஓவியங்கள் அனைவர்க்கும் தெரிந்த கதைக் காட்சிகளான இராமாயணக்காட்சிகள், தசாவதாரக் காட்சிகள், சைவக்குரவர் ஞானசம்பந்தரின் வாழ்க்கை நிகழ்ச்சிகள், சிவனின் ஆடல்வல்லான் உருவங்கள், சிவனின் உமையொரு பாகன் உருவங்கள் போன்ற பலவேறு காட்சிகளைக் கொண்டிருக்கின்றன. ஆனால், இரண்டாம் தளத்தில் வரையப்பெற்றுள்ள போர்க்காட்சி ஓவியம், திருமணக்காட்சி ஓவியம், குதிரைகள் ஏற்றப்பட்ட நிலையில் பெரிய கப்பல் ஆகிய ஓவியங்கள் எவற்றைக் குறிக்கின்றன என்பது விளக்கமாகத் தெரியாமலே இருந்துவந்தன. பேராசிரியர் பாலுசாமி அவர்கள் தம் ஆறு ஆண்டுகளின் ஆய்வுழைப்பின் மூலம் இந்தப் புதிரை அவிழ்த்துள்ளார் என்பது சிறப்புக்குரியது.

தாமிரபரணிப்போர்:

மேற்குறித்த போர்க்காட்சி ஓவியம், தாமிரபரணிப் போரைக் குறிக்கும். திருவாங்கூர் வேணாட்டரசர் பூதலவீர உதயமார்த்தாண்டனுக்கும், விஜய நகரப்பேரரசர் அச்சுதராயருக்கும் இடையில் ஏற்பட்ட போரே தாமிரபரணிப்போர். இப்போர், குமரி மாவட்டம் தோவாளைக்கருகில் உள்ள ஆரல்வாய்மொழிக் கணவாய்ப்பகுதியில் நிகழ்ந்தது. இப்போரைப் பற்றி விஜயநகர அரசின் அவைப்புலவரான இராஜநாத திந்திமக் கவி என்பவர் தம் "அச்சுதராயப்யுதயம்" என்னும் சமற்கிருத நூலில் விளக்கமாக எழுதியுள்ளார். விஜயநகரப்பேரரசின் மேலாண்மையை ஏற்காத ஒரு சில அரசருள் வேணாட்டரசனும் ஒருவன். விஜயநகரப்பேரரசின் மேலாண்மையை ஏற்காததோடு, தென்காசிப்பாண்டியன் சடையவர்மன் ஸ்ரீவல்லபனின் ஆட்சிப்பரப்பில் பல பகுதிகளை இணைத்துக்கொண்டான். ஸ்ரீவல்லபன், விஜயநகரப் பேரரசின் மேலாண்மையை ஏற்றுக்கொண்டிருப்பவன்; தன் ஆட்சிப்பரப்பை இழந்தது பற்றி விஜயநகர அரசரிடம் கூறி உதவி கோரினான். பரமக்குடி பாளையக்காரர் தும்பிச்சி நாயக்கரும் விஜய நகர அரசை எதிர்த்தவர். அச்சுதராயரின் மைத்துனர்களாகிய சலக்க ராஜு பெரிய திருமலை, சலக்க ராஜு சின்ன திருமலை ஆகிய இருவரும் அச்சுதராயருக்கும், சாளுவ நரசிங்க நாயக்கனுக்கும் இடையில் பகைமை உண்டாக்கினர்.

சாளுவ நரசிங்க நாயக்கன், கிருஷ்ணதேவராயரின் தஞ்சைப்பகுதி மகாமண்டலேசுவரன் ஆவான். அச்சுத தேவராயர் தம் தூதரை வேணாட்டரசனிடம் அனுப்பித் திறை செலுத்தச் சொல்லியும், பாண்டியனின் ஆட்சிப்பகுதியைத் திரும்பப் பாண்டியனிடம் ஒப்படைக்கவும் ஆணை இட்டான். வேணாட்டரசன் மறுத்துவிடுகிறான். ஆக, மூன்று பகைவரையும் ஒருசேர அடக்க எண்ணி, அச்சுததேவராயர் தம் மைத்துனர்கள் இருவரோடும் பெரும்படையுடன் சென்று திருவரங்கம் சேர்கிறார். சின்ன திருமலை, தான் ஒருவனே எதிரிகளைப் பணியவைக்கிறேன் எனக்கூறிப் படையுடன் சென்று மூவரையும் ஆரல்வாய்மொழிக் கணவாயில் போர் தொடுக்கிறான். மூவரும் தோல்வி காணுகின்றனர். அச்சுததேவராயர் எதிரிகளை மன்னித்துவிடுகிறார். வேணாட்டரசன், பாண்டியனுக்கு அவனுடைய நாட்டுப்பகுதியைத் திரும்ப அளிக்கிறான். அச்சுதராயருக்குக் குதிரைகள், யானைகள் ஆகியவற்றை அளித்து நல்லுறவு பேணுகிறான். பாண்டியன் நன்றி மேலீட்டால் தன் மகளை அச்சுதராயருக்கு மணம் செய்விக்கிறான். சின்ன திருமலையின் படை "திக்கு விஜயம்" மேற்கொள்கிறது. படைத்தளபதிகள், திருவிடைமருதூர் நாறும்ப்பூ நாதர் கோயிலுக்கும், திருவனந்தபுரம் கோயிலுக்கும் சென்று வழிபடுகின்றனர். இந்த நிகழ்ச்சிகளே போர் ஓவியத்தில் இடம் பெறுகின்றன.



போர்க்காட்சி



திருவாங்கூர்ப் படை பின்வாங்கும் காட்சி

கி.பி. 16-ஆம் நூற்றாண்டில் குதிரைகளின் தேவை மிகுகின்றது. குதிரை வணிகமும் பெருகுகிறது. போர்த்துக்கீசியர் குதிரைகளை அரபுநாட்டிலிருந்து வரவழைத்து விஜயநகரர், பாமினி சுல்தான்கள், பாளையக்காரர் ஆகியோருக்கு விற்றுச் செழிப்புறுகின்றனர். தும்பிச்சி நாயக்கரிடம்

போர்த்துக்கீசியர் குதிரைகள் விற்கும் காட்சி ஓவியமாகியுள்ளது. அடுத்து இன்னொரு ஓவியம் – ஆறு அடி உயரமும், பத்தரை அடி அகலமும் கொண்ட பெரியதொரு ஓவியம்–போர்த்துக்கீசியர், குதிரைகளைக் கப்பலில் கொண்டுவரும் காட்சியைக் கொண்டுள்ளது. இந்த ஓவியம் புன்னைக்காயலைப் பின்னணியாகக் கொண்டது. கடலும், கடலலைகளும் அழகாகக் காட்சிப்படுத்தப்பட்டுள்ளன.

சிதம்பரம்:

சிதம்பரம் கோயிலில் பிச்சாடனர் ஓவியம் குறிப்பிடத்தக்கது.



சிதம்பரம் கோயில் - பிச்சாடனர்

இராமநாதபுரம் – இராமலிங்க விலாசம் அரண்மனை:

நாயக்கர் கால ஓவியங்களில் மிகுந்த அலங்காரப் பண்பு காணப்படும். ஆனால், மெய்ப்பாடுகள் குறைந்திருக்கும். ஒயில் (GRACE) குறைவு. இராமநாதபுரம் அரண்மனையில் உள்ள ஓர் ஓவியத்தில் இப்பண்புகளைக் காணலாம். அது ஒரு பெண்ணின் ஓவியம். பெண்ணின் உடல் முழுதும் பலவகை அணிகலன்கள் நுட்பமாக வரையப்பெற்றிருக்கும். ஓவியத்தின் பின்புலம் சிவப்பு மற்றும் மஞ்சள் வண்ணத்தில் அமைந்திருக்கும். இது, OCHRE எனப்படும் காவிக்கல் வண்ணமாகும். இராமநாதபுரம் ஓவியங்கள் 17-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவை.

மலையடிப்பட்டி:

மலையடிப்பட்டி ஓவியம் "லேபாக்ஷி" பாணியில் அமைந்தது.

கோனேரிராஜபுரம் கோயில்:

கோனேரிராஜபுரம் கோயிலில் ஒரு திருவிழாக் காட்சி ஓவியமாக வரையப்பட்டுள்ளது. 1924-ஆம் ஆண்டு வரையப்பெற்றது. அரசர், கடவுள் கொடுத்த செங்கோலை வாங்குவது போன்ற காட்சி அழகாக வரையப்பட்டிருக்கும்.





கோனேரிராஜபுரம் கோயில் - சில ஓவியங்கள்





கோனேரிராஜபுரம் கோயில் - சில ஓவியங்கள்





கோனேரிராஜபுரம் கோயில் - சில ஓவியங்கள்




பொதுச்செய்திகள்:

மதுரை நாயக்கர் ஆட்சிக்காலத்தில் தமிழ் இலக்கியம் இல்லை. அரசவையில் தமிழ் இல்லை. நாயக்கர் அரசு மொழி தெலுங்கு. திருமலை நாயக்கருக்கு அவருடைய 74 வயதிலும் தமிழ் தெரியாது. நாயக்கர் சமய ஒருமைப்பாட்டை வளர்த்தார்கள்.

தொடர்பு: துரை.சுந்தரம், கல்வெட்டு ஆராய்ச்சியாளர், கோவை.
doraisundaram18@gmail.com, அலைபேசி : 9444939156.

# 6. தமிழகத்தின் பெருந்தச்சர்கள்

***– முனைவர். ப. தேவி அறிவு செல்வம்***

தகுதிகள் வாய்ந்தவர்களால் மட்டுமே பல ஆயிரம் ஆண்டுகள் கடந்தும் இன்றும் நிலைத்து இருக்கும் கோயில்களையும், கோயில் படிமங்களையும், சிற்பங்களையும் உருவாக்க முடியும் என்பதை உணர்ந்த அக்கால அரசர்கள் சிற்பிகளுக்கும், பெருந் தச்சர்களுக்கும் பட்டப் பெயர்களையும், அவர்களின் உருவச் சிலைகளையும் அக்கோயிலிலேயே ஏற்படுத்தி பெருமை சேர்த்துள்ளனர்.

அவர்களில்;

1. தஞ்சை பெருவுடையார் கோயிலில் குஞ்சர மல்லன் இராசராச பெருந்தச்சன் உருவச் சிலை உள்ளது.
2. உத்திரமேரூர் விமானத்தை நிர்மாணித்தவர் பரமேஸ்வரா பெருந்தச்சன்.
3. மாமல்ல சிற்பத்தை உருவாக்கியவர் கேவாத பெருந்தச்சன் என்று கல்வெட்டு செய்தி குறிப்பிடுகிறது.
4. கோனேரி ராசபுரம் கோயிலின் கற்றளி செய்தவரின் உருவமும், அவர் பெயரும் கருவறை சுவரில் ஸ்வஸ்திஸ்ரீ மதுராந்தக தேவரான உத்தம சோழரை திருவயிறு வாய்ந்த உடைய பிராட்டியார் திருக்கற்றளி எடுப்பித்த ஆலந்தூர் உடையான சாத்தன் குண்டப்பன் ஆன அரசரான சேகரன். இவன் பட்டம் கட்டிய பெயர் இராசகேசரி மூவேந்தர் வேளான் எனக் கல்வெட்டு செய்தியும் உள்ளது.
5. தில்லையின் வடக்கு மற்றும் கீழைக் கோபுர வாயிலில் கோபுரங்களை எடுப்பித்த 4 பேர்களின் உருவச்சிலைகள் அவர்களுடைய பெயர்களுடன் உள்ளது.

1. சேவக பெருமாள்
2. சேவகப் பெருமாளின் மகன் விசுவ முத்து
3. இவனது தம்பி காரண காரி
4. திரை கொடை ஆசாரி திருமருகன்

என்ற கல்வெட்டுச் செய்தியுடன் இவர்களுக்கு அளிக்கப்பட்ட நிலம் சிற்ப விருத்தி, சில்பின் காணி என்று அழைக்கப்பட்ட செய்திகளும் இங்கு கல்வெட்டு செய்தியாக உள்ளது.

மேலும் சங்க இலக்கியங்களில் சிற்பிகளை நூலறி புலவர் என்றும் கோயில் கட்டடக்கலை நிபுணர்களைத் தெய்வ தச்சர் என்றும் குறிப்பிடுகிறது.

தில்லைக் கோயிற் சிற்பிகள்



வடக்கு கோபுரம்



தில்லைக் கோயிற் சிற்பிகள் அளவுகோலுடன்

கீழை இராஜ கோபுரம்

சிற்பி ஆனவர் சிற்பத்தை வடிக்கும் முன் செய்பவை:
முதலில் தியானத்தில் அமர்வார். பிரார்த்தனை மூலம் சமாதி நிலையை அடைவார்.
சுயத்தை ஆத்மனை அறியும் நிலை ஏற்படும்போது சிற்ப வடிவம் அவருக்குப் புலனாகும். அவ்வாறு புலனான வடிவத்தை அவர் பரம்பொருளில் வடிப்பார் அல்லது தியான ஸ்லோகத்தை மனதில் நிறுத்தி ஆத்மாவில் புலப்படும் வடிவத்தை வடிப்பார்.

சான்றாதாரங்கள்:
'சோழ மண்டலத்து வரலாற்று நாயகர்களின் சிற்பங்களும் ஓவியங்களும்', குடவாயில் பாலசுப்பிரமணியன், தஞ்சாவூர் : தமிழ்ப் பல்கலைக் கழகம் , 1987, பக்கம் 422-423.
மற்றும் சிற்ப சாஸ்திர நூல்கள்

தொடர்பு:
முனைவர். ப. தேவி அறிவு செல்வம்,
மருந்தாக்கவியல் பேராசிரியை மதுரை.
https://www.facebook.com/devipharm

# 7. பச்சையப்ப முதலியார் கல்வெட்டு

*– துரை.சுந்தரம்*

முன்னுரை:

அண்மையில் திருச்சி சென்றிருந்தபோது கிடைத்த சிறிதளவு கால இடைவெளியில் திருச்சிக்கருகில் இருக்கும் திருவானைக்கா செல்ல இயன்றது. கோயிலைச் சற்றுப் பரபரப்புடன் சுற்றியபோது அதன் மேற்கு கோபுரத்தின் வாயிலில் பெண்மணி ஒருவர் கீரை விற்றுக்கொண்டிருந்ததைக் கண்டேன். அவர் அருகிலே இருந்த இரண்டு பொருள்கள் கருத்தைக் கவர்ந்தன. ஒன்று, நடுகல் சிற்பம். இன்னொன்று ஒரு கல்வெட்டு. அவற்றின் தோற்றத்தை மறைத்துக்கொண்டதாய்ச் சுற்றிலும் முருங்கைக் கீரையும் அகத்திக் கீரையும். அந்தப்பெண்மணியிடம் பேசிக் கீரைகளைச் சற்று அகற்றிய பின்னர் நடுகல்லின் தோற்றமும், கல்வெட்டின் முழு உருவமும் புலப்பட்டன. நடுகல் சிற்பம் ஒரு நவகண்டச் சிற்பம்.



திருவானைக்கா மேலக்கோபுரம் - ஒரு தோற்றம்

நவகண்டம்:

கோயிலின் இறைவர்க்கு நேர்ந்து கொண்டதற்காகவோ அன்றி அரசனின் உயிர்க் காப்புக்காகவோ ஒரு வீரன் தன் உயிரை மாய்த்துக்கொள்ளத் தன் உடலை ஒன்பது பகுதிகளில் அரிந்து வைக்கும் ஒரு செயலைத் தொல்லியல் நவகண்டம் என்னும் சொல்லால் குறிக்கிறது. உடலின் ஒன்பது இடங்களில்

அரிந்துகொள்வதைச் சிற்பமாக வடித்துக் காண்பிக்க இயலாததால், பொதுவாகத் தலையை அரிந்துகொள்ளும் செயலைக் காட்டும் வகையிலேயே நவகண்டச் சிற்பங்களை அமைத்தார்கள் எனலாம்.



திருவானைக்கா - நவகண்டச் சிற்பம்

நவகண்டம் கொடுக்கும் வீரன், உடம்பின் எட்டு இடங்களை வாளால் அரிந்துகொண்ட பின்னர் இறுதியாகத் தலையை அரிந்துகொள்கிறான் என்னும் கருத்து ஏற்புடையது. கண்டம் என்பது கழுத்தைக் குறிக்கும். கழுத்து, தலைக்கு ஆகுபெயராய் இங்கு அமைந்தது எனலாம். எனவே, நவகண்டச் சிற்பம், தலைப்பலி என்றும் அழைக்கப்பட்டது. பலி என்பது ஒன்றைப் படைப்பதைக் குறிப்பது. ஆனால், பரவலாகக் "காவு/சாவு" என்னும் பொருளில் வழங்குகிறது. கோயிலில் ஸ்ரீபலி என்னும் ஒரு சடங்கு நடைபெறுதலை இன்றும் காணலாம். கோயிலின் சுற்றாலையில் ஆங்காங்கே இறைவர்க்கு அமுது (உணவு) படைத்தலே ஸ்ரீபலி எனப்படுகிறது. (எதிர்பாராத் தீமைச்சூழலில் நிகழும் உயிரிழப்பைக் குறிக்க இன்றைய நாளிதழ்ச் செய்திகளில், "பலி" என்னும் சொல் கையாளப்பெறுகிறது.

இந்தச் சொல்லாட்சி பிழையாகவே தோன்றுகிறது. யாரும் பலி ஆவதில்லை. "பலி" என்னும் சொல்லுக்குத் தலைமாறாகச் [பதிலாக] "சாவு" என எளிமையாக அனைவர்க்கும் தெரிந்த ஒரு சொல்லைப் பயன்படுத்தலாம். (இக்கருத்தை எழுதும் நாளிலேயே, "இந்து-தமிழ் திசை" நாளிதழில், "பலி"யைத் தவிர்த்து நல்ல தமிழில் "உயிரிழப்பு" எனச் செய்தியில் குறிப்பிட்டிருந்தமை வியப்போடு மகிழ்ச்சியைத் தந்தது.) நவகண்டம் அல்லது தலைப்பலியில் வீரன் தன்னுயிரையே கொடுக்கிறான் என்பதால் "பலி".



16 சனி, ஜூன் 8, 2019

துபாய் சுற்றுலா பேருந்து விபத்தில்

12 இந்தியர் உட்பட 17 பேர் உயிரிழப்பு

நாளிதழில் 'பலி"யைத் தவிர்த்து நல்ல தமிழில் "உயிரிழப்பு"

பூட்கை:

"மனித உடம்பில் இது மோதிரம் அணிகிற இடம், இது பூ வைத்துக்கொள்கிற இடம், இது காப்புப் போட்டுக்கொள்கிற இடம் என்று அணிபவற்றுக்கும், அணிவதற்கு ஏற்பவும் பகுதிகள் இருப்பதுபோல் கொள்கைகளைப் பூணுவதற்கு இதயம் இடமாக இருக்கிறது. "கழற்றாமல் பூணுவது" என்ற பொருள் நயம் கிடைக்கும்படி கொள்கைக்குப் "பூட்கை" (பூணுவது) என்று பழைய தமிழில் பெயர் வைத்திருக்கிறார்கள்." என்று தமிழாசிரியரும் எழுத்தாளருமான நா.பார்த்தசாரதி குறிப்பிடுகிறார். அதுபோல, ஒரு கொள்கையைப் பூண்ட வீரர்கள், தாம் பூண்ட கொள்கையைக் கடைப்பிடிக்கத் தவறிவிடும் நிகழ்வு ஏற்படுகையில் உயிரை மாய்த்துக்கொள்ளும் வீரச்செயலே "பலி" ஆகிறது. இவ்வகையாகப் பூட்கை உடைய வீரர் பெருமக்கள் கல்வெட்டுகளில் குறிக்கப்படுவதைக் காணுகிறோம்.

சோழர் படைகளில் கைக்கோளர் படை:

சோழர் படைகளில், கைக்கோளர் படை என்னும் ஒரு படைப்பிரிவு இருந்துள்ளது. அரசர்க்கு அணுக்கமாக இருந்து அரசர், அரசு இரு பாலார்க்கும் நேரும் பேரிடரிலிருந்து காப்பதாகப் "பூட்கை" (உறுதி) பூண்டு காக்கும் வீரர்கள் கொண்ட படை கைக்கோளர் படை என்னும் பெயரால் அழைக்கப்பெற்றது. பூட்கை என்னும் கொள்கையை இவ்வீரர்கள் கைக்கொண்டதால் இவர்கள் "கைக்கோளர்" எனப் பெயர் பெற்றனர் என்பது பொருத்தமுடையதே. கொள்ளுவது கோள் ஆகின்றது. சங்க இலக்கியங்களிலும், தொறுப்பூசல் நடுகல் கல்வெட்டுகளிலும் "ஆகோள்" என்னும் சொல் ஆளப்பெற்று வருவதை இங்கு நினைவு கூரலாம். இக்

கைக்கோளப்படையினர் தம் காவல் பணியில் இணையும்போது பூணுகின்ற ஓர் உறுதி மொழி பற்றித் திருவரங்கத்துக் கோயில் கல்வெட்டு ஒன்று கூறுகிறது. இக்கல்வெட்டு, கோயிலின் நான்காம் சுற்றாலையில் (பிராகாரம்) உடையவர் திருமுற்றத்துக்கு (சந்நிதி) எதிரில் அமைந்துள்ளது. இந்தியத் தொல்லியல் ஆய்வுத்துறையின் 1930-ஆம் ஆண்டுக்கான ஆண்டறிக்கை, இக்கல்வெட்டு கைக்கோளர் படை முதலி ஒருவன் பூட்கைக் கடப்பாடாக ஏற்கும் உறுதிமொழியைப் பதிவு செய்கிறது என்று குறிப்பிடுகிறது. கல்வெட்டுப் பாடம் கீழே:



No. 129

(*A. R. No. 267 of 1930*)

IV PRĀKĀRA, OPPOSITE THE UDAIYAVAR-SANNIDHI.

Records an oath of fealty taken by Nāyaṉ *alias* Aḻagiya Maṇavāḷa Mārāyaṉ, a *Kaikkōḷa-Mudali* of Tiruvaraṅgam, to serve unto death, as a *vēḷaikkāṟaṉ* of **Viṟṟirundāṉ śēmaṉ** *alias* **Akaḷaṅka-Nāḍāḷvāṉ**. The record is in characters of the 12th century A. D. (Vide No. 128 above.)

Text

1 ஸ்வஸ்தி ஸ்ரீ [|*] வீற்றிருந்தாந் செமனாந அகளங்க நாடாழ்வா(ர்)-
2 ற்கு திருவரங்கத்து கைக்கோள முதலிகளில் நாயநான அழகிய ம-
3 ணவாள மாராயநேந் இவற்கு பிந்பு சாவாதே இருந்தேநாகில் எந்
4 மிணாட்டியைப் பறையற்குக் குடுத்து எங்களம்மைக்கு நாநே
5 broken.

கல்வெட்டுப் பாடம்:

1 ஸ்வஸ்திஸ்ரீ வீற்றிருந்தாந் சேமனாந அகளங்க நாடாழ்வா(ர்)
2 ற்கு திருவரங்கத்து கைக்கோள முதலிகளில் நாயநான அழகிய ம
3 ணவாள மாராயநேந் இவற்கு பிந்பு சாவாதே இருந்தேநாகில் எந்
4 மிணாட்டியைப் பறையற்குக் குடுத்து எங்களம்மைக்கு நாநே
5 ................

- A.R. 267- 1930

அகளங்க நாடாள்வான் என்னும் ஒரு தலைவனுக்கு வேளைக்காரனாகப் பணிசெய்யும் அழகிய மணவாள மாராயன் என்பான் உறுதிமொழி எடுத்துக் கொள்ளும் பான்மையைக் கல்வெட்டு கூறுகிறது. கைக்கொண்ட கடமையிலிருந்து வழுவினால் கடும் பழியை எதிர்கொள்வேனாக என்று தன்னையே கடுமையாகத் தண்டித்துக்கொள்ளும் கைக்கோளனை இங்கு காண்கிறோம். கல்வெட்டில், "இவற்கு பிந்பு சாவாதே இருந்தேநாகில்" என்னும் தொடரால், கைக்கோளன், அவனது தலைவனுக்கு ஊறு நேர்ந்து தலைவன் இறந்த பின்னர் தான் உயிர் வாழமாட்டான் என்னும் உட்பொருள் சுட்டப்படுவதை அறியலாம். ஒரு வேளை, சாவாது இருந்தால் மேற்சுட்டிய பழி தன்னைப்

பற்றட்டும் என்பதாக அவன் கூற்று அமைகிறது. (அரசர் அன்றி உயர்நிலைத் தலைவன் ஒருவனுக்கும் கைக்கோளர் படை இருந்தது என்று இக்கல்வெட்டால் அறிகிறோம்.)

சோழர் படைகளில் வேளைக்காரர் படை:

சோழர் படைகளில் வேளைக்காரர் படை என்னும் ஒரு படைப்பிரிவும் இருந்துள்ளது. இவர்களும் கைக்கோளப் படையினரைப்போன்றே உறுதி பூண்டவர் ஆவர். வேளைக்காரர் படையைப் பற்றிப் “பொன்னியின் செல்வன்” நூலில் கல்கி அவர்கள் வர்ணனை செய்திருப்பதை அந்நூலைப் படித்த யாரும் மறப்பதற்கில்லை. மேற்குறித்த கல்வெட்டை அடுத்து வரும் இன்னொரு கல்வெட்டில் வேளைக்காரப்படையைச் சேர்ந்த கைக்கோளன், தலைவன் இறந்துபடும் அதே வேளையில் உடன் சாவேனாகுக என்பதை அழுத்தமாகச் சொல்கிறான். தலைவன் இறக்கும் அதே வேளையில் உடன் சாவதால் இவ்வீரர்கள் “வேளைக்காரர்” என்னும் பெயர் பெறுகிறார்கள் என்பது பெறப்படும். இக்கல்வெட்டின் பாடம் வருமாறு:



No. 130

(*A.R. No.* 268 *of* 1930)

IV PRĀKĀRA WALL, OPPOSITE THE UḌAIYAVAR-SANNIDHI.

Records an oath of fealty as in No. 129 above, by Ariyān *alias* Kiḍārattaraiyan.

Text

கல்வெட்டின் பாடம்:

1 ஸ்வஸ்திஶ்ரீ வீற்றி[ரு]ந்தாந்] சேமநாந அகளங்க நாடாழ்வாற்கு திருவரங்

2 கத்துக் கைக்கோளரி லரியாநாந கிடாரத்தரையனேந் இவற்கு உட

3 ந் [வே]ளையாகச் சாவக்கடவேநாகவும் இவற்கு பிந்பு சாவாதே இருந்

4 தேநாகில் எந் மிணாட்டியை பறையற்கு [கு]டுத்து எங்களம்மைக்கு நா

5 நே மிணாளநாவேந்

- A.R. 268- 1930

பின்னாளில், இந்தக் கைக்கோள முதலிகள் படைத்தொழிலை இழந்து மாற்றுத்தொழில்களில் ஈடுபட்டனர் என்று சோழர் வரலாறு பற்றிப் படிக்கையில்

அறிகிறோம். காலப்போக்கில், முதலிகள் என்னும் சிறப்புச் சொல் ஒரு குடிப்பிரிவைக் குறிப்பதாய் மாற்றம் பெறுகிறது.

திருவானைக்கா நவகண்டச் சிற்பம்:

மேற்குறித்த விளக்கங்களுடன், திருவானைக்கா நவகண்டச் சிற்பத்தைப் பார்க்கையில், இச்சிற்பமும் ஒரு கைக்கோள வீரனாக இருக்கக்கூடும் என்று எண்ணத் தோன்றுகிறது. அல்லது கோயிலுக்காகத் தலையை அரிந்துகொண்ட வீரனாகவும் இருக்கக்கூடும். இந்த நவகண்டச் சிற்பத்தில், வீரன் தன் இடது கையால் தலையை அழுத்திப்பிடித்துக்கொண்டு வலது கையால் வாளொன்றைக் கழுத்தின் பின்புறமாக வைத்து அரிந்துகொள்ளும் நிலையில் தோற்றமளிக்கிறான். உடல் அளவை ஒப்பிடுகையில் சற்றே பெரிய அளவில் முகப்பகுதி அமைந்துள்ளது எனலாம். தடித்த மூக்கும் வாயும். செவிகளும் நீண்டு தடித்துள்ளன. கழுத்தில், கைகளில், கால்களில் அணிகலன்கள் உள்ளன. ஆடை அமைப்பு முழங்காலுக்குச் சற்று மேல் பகுதியோடு நின்றுவிடுகிறது. இடைப்பகுதி ஆடையில் கச்சும் நீண்ட தொங்கலும் காணப்படுகின்றன. கச்சில் நன்கு செருகப்பட்ட குறுவாள் காணப்படுகிறது. சிற்பம் தெளிவாக உள்ளது. சிற்பத்தின் மீது எண்ணெய் பூசி, நெற்றியில் சந்தனம்-குங்குமம் பொட்டு வைத்துத் தலைப்பகுதியில் மலரும் இலையும் சூடி மக்கள் வழிபட்டுவருவதும் தெரிகிறது. ஒரு வகையில் வழிபடுதல் இல்லையேல், புறக்கணிப்பாலேயே இந்தத் தொல்லியல் எச்சம் காணாமல் போகும் வாய்ப்பு மிகுதி.

நவகண்டச்சிற்பம்-மற்றோர் எடுத்துக்காட்டு



கீழப்பழுவூர் காளிகோயிலில் உள்ள நவகண்டச் சிற்பம்

பச்சையப்ப முதலியார் கல்வெட்டு:

தொடக்கத்தில் கூறப்பட்ட இரண்டாவது பொருள் கல்வெட்டு. ஒரு பெரிய பலகைக் கல்லில் பொறிக்கப்பட்டது. பலகைக் கல்லின் மேற்புறம் ஆரம்போல வளைவாக வடிக்கப்பட்டுள்ளது. கல்வெட்டின் பாடம், இக்கல்வெட்டு பச்சையப்ப முதலியார் பற்றிய கல்வெட்டு எனக்கூறுகிறது. அதன் பாடம் பின்வருமாறு :



பச்சையப்ப முதலியார் கல்வெட்டு

கல்வெட்டுப்பாடம்:

1 உ
2 ஜம்புகேசுவரம்
3 காஞ்சிபுரம் பச்சையப்ப முதலியா
4 ருடைய தர்மம் சகலருக்கும் பிரசி
5 த்தமாய்த் தெரியும் பொருட்டும் நிர
6 ந்தரமான ஞாபகத்தின் பொருட்டு
7 ம் செய்யும் விளம்பரமாவது இற
8 ந்துபோன புண்ணிய புருஷரா
9 கிய மேற்படி பச்சையப்ப முதலி
10 யாரவர்களாலே வைக்கப்பட்
11 டிருக்கும் லக்ஷம் வராகனுக்கு வ
12 ரப்பட்ட வட்டிப்பணத்தில் நி
13 ன்றும் ஜம்புகேசுவரத்தில் ஸ்ரீஅ
14 கிலாண்டேசுவரி அம்மன் சன்னி
15 தியில் அர்த்த சாமக்கட்டளைத்தர்
16 மமானது கனம் பொருந்திய சூப்ரீ
17 ம் கோர்ட்டுக் கவர்ன்மெண்டு அதி
18 காரிகளால் தர்ம விசாரணைக் கர்
19 த்தர்களாக நியமிக்கப்பட்டு சென்
20 னபட்டணத்திலிருக்கும் இந்துச
21 பையாரவர்களுடைய உத்தரவின்படி
22 சாலிவாகன சகாப்தம் 1764ம்
23 வரு(ஷ)த்துக்குச் சரியான சுபகிருது வரு(ஷம்) முத
24 ல் வரு(ஷம்) 1க்கு 120 வராகன் செலவுள்ள
25 தாக நடந்துவருகின்றது மேற்படி மூலதன
26 ம் சூப்ரிம் கோர்ட்டு அதிகாரிகளுடைய
27 உத்தரவின்படி சென்னபட்டண
28 த்திலிருக்கும் ஜென[ர]ல் திரேசரியென்
29 னும் கவர்ன்மெண்டாருடைய பொ
30 க்கிஷத்தில் வைக்கப்பட்டிருக்கி
31 ன்றது மேற்படி தர்மம் கிரமமாக நடவாவி
32 ட்டால் தர்மத்தில் சிரத்தையுள்ளவர்
33 கள் மேற்படி சபையாரவர்களு
34 க்குத் தெரிவிக்க வேண்டுவது

கல்வெட்டுச் செய்திகள்:

கல்வெட்டு பொறிக்கப்பட்ட ஆண்டு சாலிவாகன ஆண்டு 1764. இதற்குச் சமமான கிறித்தவ ஆண்டு கி.பி. 1842-ஆம் ஆண்டாகும். கல்வெட்டில் குறிக்கப்பெற்ற தமிழ் வியாழ வட்ட ஆண்டான சுபகிருது ஆண்டு 1842 ஏப்ரல் மாதத்தில் பிறக்கிறது. எனவே, கல்வெட்டில் குறிக்கப்படுகின்ற காலக்கணக்கு மிகவும் சரியாக அமைகிறது. திருவானைக்கா அகிலாண்டேசுவரி அம்மனின் அர்த்தசாமப் பூசை வழிபாட்டுக்கென பச்சையப்ப முதலியார் ஒதுக்கியுள்ள நூறாயிரம் வராகன் முதலீட்டிலிருந்து பெறுகின்ற வட்டிப்பணம் 120 வராகன் செலவழிக்கப்படும் வகையில் நடைபெற்றுவருகின்ற இந்தத் தன்மம் சரியாக நடக்கவில்லை எனில், பச்சையப்ப முதலியார் அறக்கட்டளை சார்பாக இயங்கிவரும் இந்து சபையாரிடத்தில் தெரிவிக்கவேண்டும் என்று கல்வெட்டு கூறுகிறது. பச்சையப்ப முதலியார் ஒதுக்கியுள்ள நூறாயிரம் வராகன் பணம் முதலீடாகச் சென்னையிலிருக்கும் “GENERAL TREASURY” என்னும் அரசுக் கருவூலத்தில் வைப்புக் கணக்கில் உள்ளது. “GENERAL TREASURY” என்னும் ஆங்கிலச் சொல் தமிழில் ”ஜெனரல் திரேசரி” என்று குறிப்பிடப்பட்டுள்ளமை அக்காலத்து மொழிப் பயன்பாட்டினைக் காட்டுகிறது.

வராகன்:

தமிழகம் விஜயநகரர் ஆட்சியின் கீழ் வந்த பின்னர், திருமலைதேவராயர் காலத்தில் (கி.பி. 1570-ஆம் ஆண்டளவில்) வெளியிடப்பெற்ற பொன் நாணயமே வராகன். வராகம், விஜயநகரரின் ஆட்சி முத்திரையாகும். இந்நாணயம் வராக உருவம் பொறித்த காசு ஆகும். இது முப்பத்திரண்டு குன்றிமணி எடையுள்ளதாகவும், மூன்றரை ரூபாய் மதிப்புள்ளதாகவும் குறிக்கப்படுகிறது. பச்சையப்ப முதலியார் அறக்கட்டளை சார்பில் நூறாயிரம் வராகன் பணம் அரசுக் கருவூலத்தில் மூலதனமாக வைக்கப்பட்டு அதனின்றும் பெறப்படுகின்ற வட்டிப் பணம், கோயில்களுக்கும், கல்விச்சாலைகளுக்கும் செலவழிக்கப்பட்டது.




பகோடா என்னும் வராகன் நாணயம்

பச்சையப்ப முதலியார்- 1754-1794:

பச்சையப்ப முதலியார் பற்றி ஓரளவு அனைவர்க்கும் தெரியும். ஏழைக்குடும்பத்தில் பிறந்து, சென்னை வணிகச் செல்வரான நாராயண பிள்ளையின் அரவணைப்பில் வளர்ந்து துபாஷியாக உயர்ந்தவர். ”துபாஷ்” என்னும் சொல் “த்வி பாஷ்” என்னும் வடசொல்லின் திரிபு. இரண்டு மொழிகள் என்னும் பொருளுடையது. ஆங்கிலேய வணிகருக்கும் தமிழ் நாட்டு வணிகருக்கும் பாலமாக ஆங்கிலம், தமிழ் ஆகிய இரு மொழிகளும் தெரிந்த ஒருவர் செயல்பட்டமையின் அவர் “துபாஷி” (இரு மொழிகள் அறிந்தவர்) என அழைக்கப்பட்டார். நார்ட்டன் நிகோலஸ் என்னும் வணிகருக்குப் பச்சையப்ப முதலியார்தாம் “துபாஷி”. காலப்போக்கில், வணிகம் பற்றிய கூர்ந்த அறிவுகொண்ட பச்சையப்ப முதலியார் வணிகத் தரகராகச் செயல்பட்டுப் பெரும் செல்வராகத் திகழ்ந்தார். கோயில் சார்ந்த கொடைகளுக்கு நானூற்றைம்பது ஆயிரம் ரூபாயும், இந்துக்குழந்தைகளும், இளைஞரும் ஆங்கிலக் கல்வி பெற எழுநூறு ஆயிரம் ரூபாயும் வழங்கி வள்ளல் எனப்பெயர் பெற்றார். "உயில்” எழுதிய முதல் தமிழர் அவரே என்று கருதப்படுகிறார். அவரைபற்றிய விரிவான செய்திகளை உள்ளடக்கி அவரது அறக்கட்டளையான “PACHAIYAPPAS TRUST BOARD” என்னும் நிறுவனம் அவர்களது வலைத்தளத்தில் வெளியிட்டுள்ளது. அதன் சுட்டியாவது : http://pachaiyappastrustboard.org/index.php/founder/pachaiyappa-mudaliar



பச்சையப்ப முதலியாரின் உருவச் சிலை - சிதம்பரம் கோயில்

திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோயிலில் பச்சையப்ப முதலியார் கல்வெட்டு:

தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை, 1970-ஆம் ஆண்டு, முனைவர் இரா.நாகசாமி அவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு வெளியிட்ட ”சென்னை மாநகர்க் கல்வெட்டுகள்” நூலில் (இரண்டாம் பதிப்பு 2009), திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோயிலில் ஒரு தனிக்கல்லில் பொறிக்கப்பட்ட கல்வெட்டு பதிவாகியுள்ளது. அக்கல்வெட்டின் பாடம், திருவானைக்கா கல்வெட்டின் பாடத்தையே கொண்டுள்ளது. கொடைச் செய்தி மட்டிலும் வேறுபடுகிறது. நூலில் காணப்படும் கல்வெட்டின் படங்கள் கீழே காண்க.

திருவல்லிக்கேணி கோயிலில் பச்சையப்ப முதலியார் கல்வெட்டு

இந்தக் கல்வெட்டில், 120 வராகன் வட்டிப்பணம், பார்த்தசாரதி கோயிலுக்கு வருகை தரும் வெளியூர்ப் பயணிகளுக்கு உணவு வழங்குவதற்கும், நூறாயிரம் வராகன் பணத்துக்கு மேல் இருக்கும் பணத்தின் வாயிலாகக் கிடைக்கும் வட்டிப்பணம், இந்துப் பிள்ளைகளுக்கு இந்நாட்டுச் சாத்திரங்களையும் ஆங்கில மொழியையும் கற்பிப்பதற்குக் கொடையாக அளிக்கப்படுகிறது என்னும் செய்தி கூறப்படுகிறது. ஆங்கிலம் கற்பிக்கும் ஆசிரியர் ஐந்து வராகன் ஊதியம் பெறுவதும், மற்ற கல்வியைக் கற்பிக்கும் (தமிழ்) ஆசிரியர் பத்து வராகன் ஊதியம் பெறுவதும் குறிப்பிடத்தக்கவை.

திருவையாற்றில் காணப்படும் பச்சையப்ப முதலியாரின் கல்வெட்டு:



*Pachaiyappa Mudaliyaar kalvettu*
*Credits: Thiruvaiyaru-S.Rajagopal's post*

இக்கல்வெட்டு திருவையாற்றில் உள்ளது. கல்வெட்டின் தலைப்பில் திருவையாறு எனப் பொறிக்கப்பட்டுக் கல்வெட்டு தொடங்கினாலும், அதன் பாடம்

திருவானைக்கா கோவில் கல்வெட்டு, சென்னைக் கல்வெட்டு போன்றவற்றில் உள்ள வரிகளே. அந்தந்தக் கோயில்களில் நிறைவேற்றப் படவேண்டிய தன்மங்கள் மட்டுமே மாறுகின்றன. அவ்வகையில், திருவையாற்றுக் கோயிலுக்கான தர்மத்தின் செய்திகள் அடங்கிய கல்வெட்டு வரிகள் கீழ்க்கண்டவாறு:

............................................ லக்ஷம் வரா
கனுக்கு வரப்ப்ட்ட வட்டிப்பனத்தில் நின்று
திருவையாறில் ஸ்ரீபஞ்சநாத சுவாமி சன்
னதியில் நித்தியக்கட்டளை தர்மம் நடப்பிக்கி
றதற்கு வராகன் 120 மேற்படியூரிலிருக்கு
ம் சத்திரத்தில் சதாவர்த்திக்கு வராகன்
240 மேற்படியூரிலிருக்கும் மதுரைத் திருஞான
சம்மந்த மூர்த்தி ஆதீனத்தைச் சேர்ந்த மடத்தி
ல் மஹேசுவர பூசை நடக்கிறதற்கு வரா
கன் 30 ..........

ஆவுடையார் கோயில் கல்வெட்டு:

ஆவுடையார் கோயிலிலும் பச்சையப்ப முதலியாரின் கல்வெட்டு ஒன்று உள்ளது. இணையத்தில் கிடைக்கப்பெற்ற அக்கல்வெட்டின் பாடமும் மேற்கண்ட கல்வெட்டுகளின் பாடத்தையே கொண்டுள்ளது. ஆவுடையார் கோயிலின் மாலைச் சந்தி வழிபாட்டுக்காக இக்கொடை அளிக்கப்பட்டுள்ளது. கொடைப்பணம் அதே 120 வராகன்.

ஆவுடையார் கோயில்-கல்வெட்டுப் பாடம்:

இறந்துபோன புண்ணிய புருஷராகிய மேற்படி பச்சையப்ப முதலியார் அவர்களால் வைக்கப்பட்டிருக்கும் லட்சம் வராகனுக்கு வரப்பட்ட வட்டிப் பணத்தினின்றும் ஆவுடையார்கோயிலில் சாயரக்ஷ கட்டளைத் தர்மமானது கனம் பொருந்திய சுப்ரீம் கோர்ட் கவர்ன்மெண்டு அதிகாரிகளால் தர்ம விசாரணைக் கர்த்தர்களாக நியமிக்கப்பட்டுச் சென்னப்பட்டினத்திலிருக்கும் இந்து சபையாரவர்களுடைய உத்திரவின்படி சாலிவாகன சகாப்தம் 1764-ஆம் வருஷத்து சரியான சுபகிருது முதல் வருஷம் 1க்கு 120 வராகன் செலவுள்ளதாக நடந்து வருகின்றது. மேற்படி மூலதனம் சுப்ரீம் கோர்ட்டு அதிகாரிகளுடைய உத்திரவின்படி சென்னப் பட்டணத்திலிருக்கும் ஜெனரல் திரேசரி (General Treasury) என்னும் கவர்மெண்டாருடைய பொக்கிஷத்தில் வைக்கப்பட்டிருக்கின்றது. மேற்படி தர்மம் கிரமமாக நடவாவிட்டால் தர்மத்தில் சிரத்தையுள்ளவர் மேற்படி சபையாரவர்களுக்குத் தெரியப்படுத்த வேண்டியது.



கல்விக்கொடையாளர்

நன்றி : இணைய தளங்கள். பச்சையப்பர் தொடர்பான படங்கள், வராகன் படம் , ஆவுடையார் கோயில் கல்வெட்டுச் செய்தி ஆகியவற்றுக்கு.

தொடர்பு: துரை.சுந்தரம், கல்வெட்டு ஆராய்ச்சியாளர், கோவை.
doraisundaram18@gmail.com, **அலைபேசி**: 9444939156.

## 8. தொன்மையான எழுது கருவிகள்

***– முனைவர். ப. தேவி அறிவு செல்வம்***

தற்பொழுது நம்மிடம் காகித தாளும், பேனாவும் எழுது கருவிகளாகப் பயன்பாட்டில் உள்ளன. இவற்றின் பாட்டன், முப்பாட்டன் யார் என்பதைப் பார்ப்போம்.

1. களிமண் சுவடிகள்:

களிமண்ணைப் பிசைந்து சிறு சிறு பலகை போல் அமைத்து, பலகை காய்ந்து போவதற்கு முன்னமே அவற்றின் மீது கூர்மையான கருவியால் எழுதி உலரவைத்து, புத்தகமாக உபயோகித்தார்கள்.

பயன்படுத்தியோர்: யூப்ரடீஸ், டைகிரிஸ் ஆறுகள் பாய்கின்ற இடத்திலிருந்த கால் டியா, சிரியா பகுதி மக்கள். அந்த எழுத்திற்கு கூனிபார்ம் எழுத்து என்று பெயர்.

2. பேப்பரைஸ்:

'பேப்பரைஸ்' என்பது எகிப்து தேசத்தின் சதுப்புநிலங்களிலும், தண்ணீர் தேக்கம் உள்ள இடங்களிலும் வளர்ந்த ஒரு வகை செடியின் பெயர். இக் கோரை ஆனது 10லிருந்து 15 அடி உயரம் வரை வளரும் தன்மை கொண்டும், அதன் ஒவ்வொரு தாளும் ஓர் ஆளின் கை பருமன் கொண்டதாகவும் இருக்கும். இதனை வெட்டி பட்டையை உரித்து, ஒரே அளவாக வெட்டி வெயிலில் உலர்த்தி, பதப்படுத்தி, பயன்படுத்தி உள்ளனர். இதன் மேல் நாணர் செடியின் தண்டினால் செய்த பேனாவை வைத்து எழுதி உள்ளனர். அதாவது நாணற் குழாய்களை 6 அங்குல நீளத்திற்கு வெட்டி, ஒரு முனையைக் கூர்மையாகச் சீவி, கூரின் நடுவே சிறிது பிளந்து, அதில் கறுத்த மை கொண்டு நிரப்பி எழுதி உள்ளனர்.

பயன்படுத்தியோர்: எகிப்து, பாலஸ்தீனம், கிரேக்கர்கள், உரோமர்கள்.

3. கோடெக்ஸ் புத்தகம்:

'கோடெக்ஸ்' புத்தகம் என்றால் லத்தின் மொழியில் மரப்பலகை ஆகும். சிறிய பலகையை நன்றாக இழைத்து அதன் மீது மெழுகு பூசி, அதற்கு மேல் கூரிய பொருள் கொண்டு எழுதுவது கோடெக்ஸ் ஆகும்.

பயன்படுத்தியோர்: உரோமர்களது பண்டைக்கால வழக்கம்.

4. தோல் புத்தகம்:
வெள்ளாடு அல்லது செம்மறியாட்டுக் குட்டியின் தோலைச் சுண்ணாம்பு நீரில் ஊறவைத்து மயிர்களைக் களைந்து விட்டு, சதை பற்றுக்களையும் நீக்கி, மரச் சட்டத்தின் மேல் உலரவைத்து, சீமைச் சுண்ணாம்பு மற்றும் கல்லினால் தேய்த்து மெருகேற்றி இருபுறமும் எழுதக்கூடியதாக மாற்றுவார்கள். இதற்கு 'மெம்ரெனா' என்று பெயர். கன்றுக்குட்டியின் தோலினால் செய்யப்பட்ட எழுது கருவிக்கு 'வெல்லம்' என்று பெயர்.

பயன்படுத்தியோர்: மத்தியதரைக்கடல் ஓரத்தில் உள்ள நாடுகள் மற்றும் இத்தாலி பகுதியினர்.

5. பட்டு மற்றும் மூங்கில்:
பட்டுத்துணி மற்றும் மூங்கிலின் மேல் துகிலிகையினால் மையைத் தொட்டு எழுதியுள்ளனர்.

பயன்படுத்தியோர்: சீனா மக்கள்

6. எலும்பும் ஓடுகளும்:
அகலமான எலும்புகளிலும் ஓடுகளிலும் எழுதிப் பயன்படுத்தியுள்ளனர்

பயன்படுத்தியோர்: அரேபியர்கள்

7. காகிதம்:
மரக் கூழிலிருந்து இருந்து தயாரிக்கப்படும் ஒரு பொருள் ஆகும். தற்போதும் பயன்பாட்டில் உள்ளது.

பயன்படுத்தியோர்: சீனா மற்றும் உலகெங்கும் வாழும் மக்கள்.

8. ஓலைச் சுவடிகள்:
ஒருவகை பனைமரத்தின் முற்றிய, இலேசான ஓலைகளைத் தவிர்த்து நடுத்தர ஓலையை எடுத்து மணல் பூசி, தண்ணீரில் வேகவைத்து,மஞ்சள் மற்றும் எண்ணை பூசி, இவ்வாறாகப் பலவகையில் ஓலைகளைப் பதப்படுத்தி, ஒழுங்குபடுத்தி, துளையிட்டு, அடுக்கி, கம்பியோ கயிறு கொண்டு அவற்றை இணைத்து மேலும் கீழும் பலகையிட்டு கயிற்றால் பிணைத்த சுவடிகளாக்கப்படும். இந்த ஓலையின் மீது எழுத ஆணி பயன்படுத்தினர்.

பயன்படுத்தியோர்: இந்தியா, பர்மா, இலங்கை பகுதியில் வாழ்ந்த மக்கள்.

நன்றி:
'பழங்காலத்து எழுது கருவிகள்', நுண் கலைகள், மயிலை. சீனிவேங்கடசாமி, பக்கம்: 132-144, இரண்டாம் பதிப்பு - 1972, மணிவாசகர் நூலகம்.
http://www.tamildigitallibrary.com/admin/assets/book/TVA_BOK_0008143_நுண்கலைகள்.pdf

தொடர்பு:
முனைவர். ப. தேவி அறிவு செல்வம்,
மருந்தாக்கவியல் பேராசிரியை மதுரை.
https://www.facebook.com/devipharm

## 9. சங்ககாலக் கலைகள்

***– துரை.சுந்தரம்***

முன்னுரை:

கோவையில் மாதந்தோறும் நடைபெறும் கோவை வாணவராயர் அறக்கட்டளைச் சொற்பொழிவுத் தொடரில் 2019, மே மாதச் சொற்பொழிவை ஆற்றியவர் தமிழ்ப்பேராசிரியர் முனைவர் பெ. மாதையன் அவர்கள். இவரது “சங்ககால இனக்குழுச் சமூகமும் அரசு உருவாக்கமும்”, ”சங்க இலக்கியத்தில் குடும்பம்” ஆகிய ஆய்வு நூல்கள் குறிப்பிடத்தக்கன. சங்ககாலக் கலைகள் என்னும் தலைப்பில் அவர் ஆற்றிய உரையின் ஒரு சுருக்கப் பதிவு இங்கே பகிர்ந்து கொள்ளப்படுகிறது.

சங்க இலக்கியங்களும் தமிழின் பழமையும்:

சங்க இலக்கியங்கள் பல்வேறு பார்வைகளில் ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளன. மொழியியல், வாழ்வியல், மானுடவியல் எனப்பல. தொல்காப்பியம் தமிழ்ச் சமூகத்தின் அடையாளமாகக் கருதப்படுகிறது. வாழ்வியல், மானுடவியல் நோக்கில் தொல்காப்பியம் பல செய்திகளைச் சொல்கிறது. சங்ககாலத்தைக் கி.மு. 200 – கி.பி. 250 காலகட்டத்தில் ஆய்வறிஞர் ஐராவதம் மகாதேவன் அவர்கள் சேர்ப்பார். தொல்லியல் அகழாய்வுகள் இம்முடிவினை மாற்றியுள்ளன. கொடுமணல் அகழாய்வு, பொருந்தல் அகழாய்வு , மயிலாடும்பாறை (தர்மபுரி) ஆய்வு ஆகியவை குறிப்பிடத்தக்கவை. கொடுமணல் ஆய்வில் சங்ககாலக் குடியிருப்புகள் இருந்தமை தெரியவந்துள்ளது. பொருந்தல் ஆய்வின்போது கிடைத்த நெல், காலக்கணிப்புக்கு உட்படுத்தப்பட்டபோது சங்ககாலம் கி.மு. 490 எனப் பதிவாகியுள்ளது. புலிமான் கோம்பை நடுகல்-தமிழிக் கல்வெட்டும் சங்ககாலப் பழமைக்குச் சான்றாய்த் திகழ்கிறது. ஏறத்தாழ அறுநூறு ஆண்டுகள் எனச் சங்ககாலத்தை வரையறுக்கலாம்.

தமிழ்ச் சமூகத்தின் கட்டமைப்பு, கலைகள். இசைக்கருவிகள், இசைத்த பாணர்கள் எனத் தமிழரின் இனக்குழுச் சமூகத்தில் தொடங்கி, இறைவழிபாட்டுச் சமூகம் வரை சங்க இலக்கியங்கள் பேசுகின்றன. இடையில் சீறூர்ச் சமூகம் என மூவகைச் சமூகங்களாகத் தமிழ்ச்சமூகத்தைப் பார்க்கலாம்.

கலை எவ்வாறு தோன்றியது?

மனத்துள் தோன்றும் கற்பனைகள் ஒரு கட்டமைப்பை உருவாக்குகின்றன. இக்கட்டமைப்பு பின்னர் கலையாக உருவெடுக்கிறது.

கற்பனைக் கட்டமைப்பை எளிதாக இப்படிச் சொல்லலாம். நாற்காலி ஒன்றைக் கற்பனை செய்தால், அது வெறும் நாற்காலியில் அமரும் நிலையை மட்டுமே குறிப்பதாகாது. தற்காலச் சூழலில் நாற்காலி என்றதும் 'பதவி' என்னும் ஒரு கற்பனை விளைகிறது. எனவேதான், கலைஞர்களின் படைப்பில் உட்பொருள் உண்டு என்பதை உணரவேண்டும். ”போலச் செய்தல்” என்னும் ஒரு பண்புதான் எல்லாக் கலைகளுக்கும் அடிப்படை. எடுத்துக் காட்டாக, இனக்குழுச் சமூகத்தில் - வேட்டைச் சமூகத்தில் – வேட்டைத் தொழிலுக்குச் செல்லுமுன்னர் வேட்டை பற்றிய கற்பனைக் காட்சியை 'போலச் செய்தல்” முறையில் நிகழ்த்திப் பார்க்கிறார்கள். வேட்டைப் பலனை மனத்துள் கற்பனை மூலம் மந்திர ஒலிப்பாக ஒலிக்கிறார்கள். உடல் அசைவுகளால் நடனம் ஆக்கிச் செயல்படுத்தும்போது அது சடங்காகிறது. இவ்வாறு நிகழும் – நிகழ்த்தும் – மந்திரங்களும் சடங்குகளுமே பின்னாளில் கலையாக உருப்பெறுகின்றன. இந்தக் கொள்கையைப் பாறை ஓவியங்கள் நமக்குப் புலப்படுத்துகின்றன. பாறை ஓவியங்களில் காணப்பெறும் ”கைகள்” ஓவியங்கள், சடங்கு-மந்திரம் ஆகியவற்றின் வெளிப்பாடே. பாறை ஓவியங்களில் 'கைகள்' வரையப்பெற்றமை உலகம் முழுக்கக் காணலாம். தொன்மங்கள் என்னும் கற்பனைகளிலிருந்து கலைகள் தோன்றியிருக்கின்றன.

சீறூர்ச் சமூகம்-கலைஞர்களும், இசைக்கருவிகளும்:

சீறூர்ச் சமூகம் நில உடைமைச் சமூகம். சீறூர்ச் சமூகத்தில் கலைஞர்கள் போற்றப்பட்டனர். இது குறுநில மன்னர்கள் கலைஞர்களைப் போற்றிய காலம். குறிப்பாகக் கடையெழு வள்ளல்களைச் சொல்லலாம். ஔவை, அதியமான் நெடுமான் அஞ்சி இறந்தபின் அவனைக் குறித்துப் பாடுகையில்,

“ சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே
பெரியகட் பெறினே
யாம்பாடத் தான் மகிழ்ந் துண்ணு மன்னே
இனிப் பாடுநரு மில்லைப் பாடுநர்க்கொன் றீகுநரு மில்லை
........................................................ பிறர்க்கொன்
றீயாது வீயு முயிர்தவப் பலவே”

எனக்கூறுவதைக் காண்க.

அடுத்து, குமணனை வாழ்த்திப்பாடும் பெருஞ்சித்திரனார்,

”பறம்பிற் கோமான் பாரியும்.....
கொள்ளா ரோட்டிய நள்ளியு மெனவாங்
கெழுவர் மாய்ந்த பின்றை ...”
இரவலரின் இன்மையைத் தீர்க்கவந்தவன் குமணன் எனக் கூறுவதையும் காண்க.

குன்றக்குறவன் பற்றி ஐங்குறுநூறு குறிப்பிடுகிறது. பாணர், பாடுநர், பரிசிலர் ஆகியோர் பற்றிச் செய்திகள் உள்ளன.

ஓர் இலக்கியத்தில், குருவிக் கூடுகளில் யாழ் நரம்பு காணப்பட்டது என்னும் குறிப்பு வருகின்றது. யாழ் போன்ற இசைக்கருவிகள் அளவில் மலிந்திருந்தன என்பதையும் இசைக்கலைஞர்களும் நிறைய இருந்தனர் என்பதையும் இந்தச் செய்யுள் வரிகள் உணர்த்துகின்றன. சமூகம், இசைக்குழுச் சமூகமாக இருந்தது எனலாம்.

சங்கச் சமுதாயத்தில் பெண்ணுக்கு முதலிடம் அளிக்கப்பட்டது.
ஐங்குறுநூற்றுப் பாடல் ஒன்று,
"குன்றக்குறவன் கடவுட் பேணி
யிரந்தனன் பெற்ற வெள்வளைக் குறுமகள்"
என்று கூறுவதினின்று சங்க காலம் பெண்ணைப் போற்றியதுணரலாம்.

சங்ககாலத்தில் பறையன், துடியன், பாணன், கடம்பன் என நான்கு குடிகள் மட்டுமே இருந்ததாக ஒரு பாடல் கூறுகிறது.

வேந்தர் சமூகம்:

வேந்தர் சமூகத்தில் பெண்களுக்கு இடமில்லை. செல்வத்துப் பயனே ஈதல் என்னும் கருத்து நிலவியது. பாணர்கள் போன்றோர் பேணப்பட்டிருக்கிறார்கள். அவர்களுக்குக் குடியிருப்புகள் அமைக்கப்பெற்றன. வேந்தர் சமுதாயத்தில், பாணர், கலைஞர்களாக மாறுகிறார்கள்; அதற்கு முன்னர் அவர்கள் அலை குடிகளாக உணவு தேடும் நிலையிலிருந்துள்ளனர். உணவும் பரிசிலும் பெற்ற பாணன் பிற பாணரை ஆற்றுப்படுத்துகிறான். வேந்தர் சமூகத்தில் பாணர், அரசனின் ஏவலாளராகவும், கூற்றர் என்னும் தூதுவராகவும் மாறியுள்ளமையையும் காண்கிறோம்.

இசை-இசைக்கலைஞர்-இசைக் கருவிகள்:

திணைச்சமூகம் பற்றிக் கூறும் தொல்காப்பியத்தில் இசை நூல்களைப் பற்றிய குறிப்புகள் உள்ளன. அச்சமூகத்தில் கல்வி முறை இருந்தது. ("கீழ்ப்பால் ஒருவன் கற்பின்"-ஒரு பாடல் வரி) பறை, பாண், யாழ், துடி, தண்ணுமை, குழல், முழவு ஆகிய பல்வேறு இசைக்கருவிகள் பற்றிச் சங்க இலக்கியங்கள் பேசுகின்றன. யாழ் மிக முதன்மையான ஓர் இசைக்கருவியாக இருந்தது. சங்கப்பாடல்களில் அறுபத்தொன்பது இடங்களில் குறிக்கப்பெறும் ஓர் இசைக்கருவி யாழ். யாழை இசைத்தவன் பாணன். பாணன், பாண்மகன், யாழ் மகன், பாடினி ஆகிய பெயர்கள் பாணரைக் குறிக்கும் ஒருபொருட் பன்மொழி.

பறையை இசைத்தவன் பறையன். துடி இசைத்தவன் துடையன். தண்ணுமைக் கருவி, உழவுச் சூழல், போர்ச்சூழல் ஆகிய சூழல்களில் இசைக்கப்பட்டது. பூக்கோள் நிலை என்பது போர்ச்சூழலில் அமையும் ஒரு நிலை. போரை மேற்கொள்ளும்போது வெட்சி முதலிய மலர்களை அரசனிடமிருந்து வீரன் பெற்றுக்கொள்ளுதலைக் குறிக்கும் புறத்துறை. பாசறையில், அரசனிடமிருந்து போர்க்குரிய பூவைப் பெறுகையில் புலையன் தண்ணுமை இசைக்கிறான் (புறம்-289).

பாணனின் மனைவியாக விறலி பேசப்படுகிறாள். விறலி மற்றும் பாடினி இருவரும் ஆடல், பாடல், கருவி இசைத்தல் ஆகிய மூன்றிலும் வல்லவராக இருந்தனர். இருவரும் அரசரைப் பாடுதல் மரபாக இருந்தது. பாணர் சமூகத்தின் தலைவியாக விறலி கருதப்பட்டாள். தொல்காப்பியம், விறலியாற்றுப்படையைக் குறிப்பிடுகிறது. விறலியின் பெருமைக்குரிய நிலை இனக்குழுச் சமூகமான சீறூர்ச் சமூகத்தில்தான். பின்னர், விறலியர் பின்னுக்குத் தள்ளப்படுகின்றனர். மலைபடுகடாம், கலைஞர்கள் ஒரு குழுவாக வாழ்ந்ததைச் சொல்கிறது. பொருநராற்றுப்படை, யாழ் பற்றிய நீண்ட வர்ணனையைக் கூறும். குறிப்பிட்ட இசைக்கருவிகளை இசைத்தவர் இழிவாக மதிக்கப்பட்டனர்.

ஆடல் கலை-கலைஞர்:

ஆடல்(ஆட்டம்) என்றும் கூத்து என்றும் நடனக்கலை குறிக்கப்பட்டது. பயிர் விளைவது போலவும், வேட்டை ஆடுவது போலவும் நடனம் ஆடினர். ஆடலுக்குத் தனியே அவையும், ஆடுகளமும் இருந்தன. அரசர்களும் ஆடியிருக்கின்றனர் என்னும் குறிப்பு உண்டு. பதிற்றுப்பத்து நூலின் ஆறாம் பத்து, ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைக் காக்கைப்பாடினியார் நச்செள்ளையார் பாடியதாகும். அதிலுள்ள 56-ஆம் பாடல், அரசன் சேரலாதன், போர்க்களத்தில் முரசு ஒலிக்கப் பொன்னாற்செய்த உழிஞைப் பூவைச் சூடி ஆடுகின்றவன் எனக்கூறுகிறது.

”வலம்படு முரசந்துவைப்ப .........
................................................ பொலங்கொடி யுழிஞையன்
.....................................
வீந்துகு போர்க்களத் தாடுங் கோவே”
- பதிற்றுப்பத்து-56

ஆதி மந்தி-ஆட்டனத்தி ஆகியோரின் ஆட்டமும் நாம் அறிந்ததே. குரவை, துணங்கை ஆகிய ஆட்ட வகைகள் இருந்தன.

குரவையாட்டம்:

குரவையாட்டம் என்றும் குரவைக்கூத்து என்றும் கூறப்படுகின்ற இந்த ஆட்டம் குழுவாக ஆடும் ஆட்டவகையைச் சேர்ந்தது. குரவைக் கூத்தில் முதலில் பெண்களே ஆடுவர்; பின்னர் ஆண்களும் இணைந்துகொள்வர். குரவையாட்டத்தில் கள்ளுக்கு முதன்மை இடம் உண்டு. கள்ளை உணவாக உண்ணும் சமூகமாதலால், பெண்களும் கள்ளுண்டனர். பெண்கள் கள்ளுண்டு குரவையாட்டம் ஆடினர். (கட்டுரை ஆசிரியர் குறிப்பு : சங்ககால மரபை இன்றும் பேணுதலைக் காணுமாறு இன்றைய சமூகமும் கள்ளுண்ணும் சமூகமாக மாறிவிட்டதோ என்னும் ஐயம் எழுகிறது!)

போர்ப்பாசறையில், சினத்தை உடைய வீரர் வெறியாடும் குரவைக்கூத்தின் ஒலி கடலொலி போலக் கிளர்ந்தொலித்தது என்பதைப் புறநானூற்றுப் பாடல் (புறம்-22) கூறுகிறது. மலை மக்களாகிய குறவர் கள்ளுண்டு, தம் பெண்டிரொடு சிறுபறை ஒலிக்கக் குரவையாடினர் என்று மலைபடுகடாம் கூறுகிறது.

" நறவு நாள் செய்த குறவர்தம் பெண்டிரொடு
மான்தோல் சிறுபறை கறங்கக் கல்லென
வான்தோய் மீமிசை அயரும் குரவை"

- மலைபடுகடாம் 320-322

பொழுதுபோக்காகக் குரவையாட்டம் ஆடப்பெற்றது எனவும் அறிகிறோம். அரசன் பிறந்த நாளில் குரவையாட்டம் ஆடும் வழக்கம் இருந்தது. மதுரைக்காஞ்சியில் குரவை ஆட்டம் பற்றியும் அரசன் பிறந்த நாள் கொண்டாடப்பட்டமை பற்றியும் குறிப்பு உள்ளது (மதுரைக் காஞ்சி-614-619). மதுரை நகரில் விழாக்காலத்தே, திங்கள் தோன்றி இரவு வந்த பின்னர் எழுந்த பல்வேறு ஓசைகள் பற்றிக் குறிப்பிடும் மதுரைக்காஞ்சி, வெறியாடும் வேலன் முருகக் கடவுளை வழிபட்டு நிற்கும்போது மன்றம் தோறும் குரவைக் கூத்து நிகழும் என்று கூறுகிறது. சேரிகள் தோறும் புனைந்துரைகள், பாட்டுகள், கூத்துகள் ஆகிய மகிழ்ச்சி ஆரவாரங்கள், புகழ்படைத்த நன்னனுடைய பிறந்த நாள் விழாக் கொண்டாட்டத்தில் எழுந்த ஆரவாரம் போன்று முழங்குமாம். "மன்றுதொறும் நின்ற குரவை", "பேரிசை நன்னன் பெறும்பெயர் நன்னாள் சேரி விழவின் ஆர்ப்பு" என்பவை பாடல் வரிகள்.

துணங்கை:

துணங்கையாட்டம் மகளிர் குழுவாக ஆடும் கூத்து. (தொல்காப்பியத்தில் துணங்கை பற்றிய குறிப்பில்லை என்பார் கலைக்கோவன்.) போர்க்களத்தின்கண் வீரர்களும் ஆடினர். போர்க்களத்தில் ஆடும்

இவ்வாட்டத்தைப் பேய்த்துணங்கை என்பர். அரசனும் வீரர்களோடு சேர்ந்து துணங்கை ஆடியதாகக் குறிப்புள்ளது.

இறைவழிபாட்டுச் சமூகத்தில் கலையும், கலைஞரும்:

இறைவழிபாட்டுச் சமூகத்தில் வேலன் வெறியாடுதல் என்னும் வெறியாட்டம் இருந்தது. தொடக்கத்தில் சடங்காக இருந்த இது பின்னர் ஆட்டமாக மாறியது. வெறியாட்டத்தில், ஆண் தலைமையும் இருந்தது; பெண் தலைமையும் இருந்தது. ”வெறியாடு மகளிர்”, “முதுவாய்ப் பெண்டிர்” ஆகியன இலக்கியங்களில் காணப்பெறும் பெயர்கள். முதுபெண்டிர், இளம்பெண்கள் ஆகிய இரு நிலையும் வெறியாடலிலிருந்தன. இச்சமூகத்தில், குறிகேட்டலும், குறிசொல்லலும் இருந்தன. குறி சொல்லும் மகளிர் “அகவன் மகள்” எனப்பட்டனர். சங்ககாலத்தில், ஒரு தார மணமுடித்தல் என்பது பண்பாட்டுக் களமாக ஆக்கப்பட்டபோதுதான் காதல் என்பது உருவானது. காதல் காரணமாகப் பெண்டிர் வீட்டுக்குள் அடைத்து வைக்கப்படுதலும், அதன் விளைவாக உடன்போக்கும் நிகழ்ந்தன. காதல் வயப்பட்ட பெண்களை ”அணங்கு” என்னும் பேய் பிடித்த பெண்களாகக் கருதினார்கள். வெறியாடும் வேலனிடமும், அகவன் மகளிடமும் குறி கேட்டல் நிகழ்ந்தது. வெறியாடும் வேலன் ஒரு தலைவிக்கு அணங்கினால் நோய் வந்ததாகச் சொல்லியபோது, தலைவி, தனக்கு நோய் வந்தது அணங்கினால் அல்ல; தலைவனால் வந்தது என்று கூறுவதாக ஒரு சங்கப்பாடல் கூறுகிறது. வெறியாடல் வாயிலாகப் பெண்களோடு தெய்வம் இணைக்கப்பட்டது பெண்வழிச் சமூகத்துக்குச் சான்றாக வெறியாடலைக் கருதலாம். பெண் வெறியாடலைப் புறநானூறு, “முருகு மெய்ப்பட்ட புலைத்தி” எனக் குறிப்பிடுகிறது(புறம்-259).

சங்ககாலத்தில் சிற்பக்கலை:

சிற்பக்கலையின் தொடக்கம் தச்சுக்கலை ஆகும். வண்டிச் சக்கரம் செய்யத்தான் முதலில் தச்சுக்கலை ஏற்பட்டது. வணிகர்களின் வண்டிகள் (எடுத்துக்காட்டாக வணிகர்களின் உப்பு வண்டி), தேர்ப்படை ஆகியவற்றுக்காகத் தச்சர் வண்டி செய்தனர். வணிகர்களின் வாகனமாகவும் தேர் இருந்தது. சங்ககாலத்தில் கட்டில் முதன்மையாகக் கருதப்பட்டது. நெடுநல்வாடையில், கட்டில் பற்றிய வண்ணனை உண்டு. தச்சர் செய்த கதவு “வளிமறை” எனப்பட்டது. வளி=காற்று; காற்றை மறைத்து நிற்கும் கதவு “வளிமறை” என்றாயிற்று. பின்னர், கதவு அமைந்த வீட்டுக்கும் அதுவே பெயராயிற்று. செல்வர்க்கே மரக்கதவுகள் இருந்தன. எளிய மக்களுக்குப் படல் கதவுகள் இருந்தன.

பொதுச் செய்திகள்:

தொல்பழங்காலத்தில் பெண்வழிச் சமூகம் இருந்தது. பொருளாதாரத்தை வளர்ப்பதில் பெரும்பங்கு பெண்களுக்கு இருந்தது. மீன் பிடி

தொழிலை விறலியர் மேற்கொண்டதைக் காண்கிறோம். சங்ககாலத்தின் தொடக்கக் காலத்தில் பெண்கள் தலைமைதான் இருந்தது. இனக்குழு வாழ்வு உடைமையைப் பொதுவில் வைத்தது. திணை வாழ்வு தனியுடைமை பற்றியது. உலகம் முழுதும் வேளாண்மைக் காலத்தில் மந்திரங்களின் நம்பிக்கை இருந்துள்ளது. வேளாண்மையைக் கண்டறிந்தவர் பெண்களே. எனவே, மந்திரச் சடங்குகள் நடத்தும் உரிமையும் பெண்களுக்கே இருந்துள்ளது. உலகம் முழுக்கப் பெண்ணுடை அணிந்தே ஆண்கள் பூசாரிகளாக இயங்கினர். தினைப்புனத்திலும் பெண்களே தலைமை ஏற்றனர்.

தொடர்பு: துரை.சுந்தரம், கல்வெட்டு ஆராய்ச்சியாளர், கோவை.
doraisundaram18@gmail.com, அலைபேசி: 9444939156.

## 10. லாடன் முருகன் கோயில்

*– முனைவர். ப. தேவி அறிவு செல்வம்*



மதுரை நகரின் பசுமைநடை அமைப்பு நடத்தும் பசுமைநடை 101 இரண்டாவது சுற்றில் முதல் நடையாக ஜூலை 7 அன்று சென்ற இடங்களில் ஒன்று லாடன் கோயில். மதுரையில் உள்ள குடைவரைக் கோயில்களில் இதுவும் ஒன்று. பராந்தக மாறன் சடையன் காலத்தைச் சேர்ந்த லாடன் முருகன் கோயில் எனப்படும் இக்கோயில். தொல்லியல் துறைக் கட்டுப்பாட்டில் உள்ளது கி.பி. 8-

ம் நூற்றாண்டைச் சேர்ந்த இக்கோயில் யானைமலையின் ஒரு பகுதியில் குடைவரையாகத் திகழ்கிறது. இக்கோயில் ஒத்தக்கடை அருள்மிகு நரசிங்கப்பெருமாள் கோயிலை ஒட்டியே உள்ளது.



மேற்கு பார்த்த கருவறை மற்றும் முக மண்டபம் கொண்டு அமைக்கப்பட்டுள்ளது. கருவறையின் உள்ளே தாய் பாறையில் புடைப்புச் சிற்பமாக அமர்ந்த நிலையில் ஆண், பெண் சிற்பங்கள் உள்ளன. அவை முருகன் தெய்வானை என்ற பெயருடன் விளங்குகிறது. அதிட்டான பகுதியுடன் கூடிய கருவறை மற்றும் தரங்கப் போதிகைகள் கொண்ட குடைவரையாக உள்ளது இதன் தனிச் சிறப்பு. கருவறை வாயிலின் இடதுபுறச் சுவரில் மயிலும், வலது புறம் சேவல் சிற்பமும் செதுக்கப்பட்டுள்ளது. அதன் அருகில் பக்கத்திற்கு ஒன்றாக வாயிற்காவலர்கள் மற்றும் வேறு இரு சிற்பங்களும் உள்ளன.

முகமண்டபமானது சதுரம், எட்டு பட்டை, சதுரம் கொண்ட இரண்டு முழுத்தூண்களுடனும் இரண்டு அரைத் தூண்களுடனும் அமைக்கப்பட்டுள்ளது. தூண்களின் சதுர பகுதியில் தாமரைப்பூ வடிவம் செதுக்கப்பட்டுள்ளது.

குடைவரைக்குள் ஏறிச் செல்ல படிக்கட்டுகள் பாறையிலேயே வெட்டப்பட்டுள்ளது. படிக்கட்டுகளின் கைப்பிடிச் சுவர் ஆனது சுருள்யாழி வடிவில் வடிக்கப்பட்டுள்ளது. இதன் நடுவில் பூத வடிவம் உருவம் காணப்படுகிறது. குடைவரைக்குள் மழை நீர் வடிந்து செல்லாமல் இருப்பதற்காக புருவவரிகள் செதுக்கப்பட்டுள்ளன. குடைவரை உருவாக்கும்போது வெட்டப்பட்ட பாறைத் துண்டுகள் முன்புறம் காணக்கிடைக்கிறது.

நன்றி: திரு. முத்து கிருஷ்ணன் மற்றும் திரு. சாந்தலிங்கம், திரு. சுந்தர் காளி, திரு.கண்ணன்

தொடர்பு:
முனைவர். ப. தேவி அறிவு செல்வம்,
மருந்தாக்கவியல் பேராசிரியை மதுரை.
https://www.facebook.com/devipharm

## 11. பொள்ளாச்சி - உடுமலைப் பகுதியில் ஒரு தொல்லியல் களப்பயணம்

*– துரை.சுந்தரம்*

முன்னுரை:

கோவையைச் சேர்ந்த வரலாற்று ஆர்வலர் குமரவேல் என்னும் இளைஞர். அண்மையில் என்னைத் தொடர்புகொண்டு பொள்ளாச்சிப் பகுதியில் நாட்டுக்கல் பாளையத்தில் நடுகல் சிற்பம் ஒன்றில் எழுத்துகள் பொறிக்கப்பட்டிருந்ததைக் கண்டறிந்துள்ளதாகவும், கல்வெட்டு எழுத்துகளைப் படித்துச் செய்தியை அறியத்தருமாறும் கேட்டுக்கொண்டார். இவர், கோவைப்பகுதியில் தொல்லியல் தடயங்களைத் தேடிக் கண்டுபிடித்து வெளிப்படுத்தும் ஆர்வமிக்க இளைஞர். இவர், அண்மையில், கோவை-தொண்டாமுத்தூரை அடுத்துள்ள விராலியூரில் மலைப்பகுதியில் இருக்கும் பாறை ஓவியங்களைக் கண்டுபிடித்தவர். இருபத்தைந்து ஆண்டுகளாகப் பாறை ஓவியங்களை ஆய்வு செய்து வருகின்ற தொல்லியல் துறை அறிஞர் காந்திராஜன் அவர்களைக் கொண்டு விராலியூர் பாறை ஓவியங்களை ஆய்வு செய்வித்தவர். இவ்வோவியங்களின் கண்டுபிடிப்பு பற்றி அண்மையில் பல்வேறு நாளிதழ்களில் செய்தி வெளியாகியுள்ளது. இவ்வோவியங்கள் ஆறாயிரம் ஆண்டுகளுக்கு முந்தியவை என்பது குறிப்பிடத்தக்கது.

தொல்லியல் களப்பயணம்:

வரலாற்று ஆர்வலர் குமரவேலுடனும் அவரது நண்பர் சுதாகருடனும் பொள்ளாச்சிப் பகுதியில் தொல்லியல் ஆய்வு நோக்கத்துடன் அண்மையில் பயணம் புறப்பட்டோம்.

நாட்டுக்கல்பாளையம்:

பொள்ளாச்சி நகருக்கு மிக அண்மையில் ஒரு சில கல் (கிலோ மீட்டர்) தொலைவில் அமைந்துள்ள ஊர் நாட்டுக்கல்பாளையம். அதன் பெயரே அவ்வூரின் பழமையை எடுத்துக்காட்டுகிறது எனலாம். தொல்லியல் சின்னங்களுள் நடுகற்கள் முதன்மையானவை. சங்ககாலம் தொட்டுக் கல்லெடுத்து வழிபடும் மரபினைக் காண்கிறோம். கல் நட்டு வழிபடுவதைக் கல் நாட்டுதல் என்றும் கூறுவது வழக்கம். நடுகற்கள் நிறைந்த பகுதிகள் இருக்கும் சில ஊர்களுக்கும் அதன் அடிப்படையில் நாட்டுக்கல்பாளையம் என்னும் பெயர் அமைந்துவிடுகின்ற நிகழ்வையும் காணலாம். கோவை, திருப்பூர் ஆகிய

மாவட்டங்களில் நாட்டுக்கல்பாளையம் என்னும் பெயரில் வழங்கும் ஊர்கள் இரண்டு உள்ளன. ஒன்று, பொள்ளாச்சியில் உள்ள – நாம் ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட ஊர். இன்னொன்று, காங்கேயத்துக்கு அருகில் உள்ளது. இவ்விரண்டு ஊர்களிலுமே பெருங்கற்காலச் சின்னங்கள் உள்ளதாக அறிகிறோம்.

நாட்டுக்கல்பாளையத்தில் ஒரு நடுகல்:

நாட்டுக்கல்பாளையம் ஊருக்குள் நுழையும் முன்னரே அதன் எல்லையில் பெருங்கற்காலச் சின்னத்தை நினைவூட்டும் கல்திட்டை (DOLMEN) அமைப்பு காணப்படுகிறது. பெரிய கற்பலகைகளைச் சுவர் எழுப்பியதுபோல் நிறுத்திக் கூரைப்பகுதியிலும் பெரும் பலகைக் கல் ஒன்றைக் கிடத்தி அமைக்கப் பட்டிருக்கும் திட்டையே இது. ஆனால், இங்கேயுள்ள கல்திட்டை அதன் முழு உருவமைப்புடன் காணப்படவில்லை. பலகைக் கற்கள் கலைந்துள்ள நிலையில், பலகைக் கற்களின்மீது சாய்ந்த நிலையில் ஒரு பழஞ்சிற்பம் காணப்படுகிறது. இந்த நடுகற்சிற்பம், திருப்பூரில் இயங்கும் வீரராஜேந்திரன் வரலாற்று மையத்தைச் சேர்ந்த பொன்னுசாமி, சதாசிவம் ஆகியோரால், ஓரிரு ஆண்டுகளுக்கு முன்னரே கண்டறியப்பட்டுள்ளது. அடுத்து, மேற்சொன்ன இளைஞர் இருவரும் இப்பகுதியை ஆய்வு செய்தபோது, மேற்படி நடுகற்சிற்பத்தில் எழுத்துப்பொறிப்பு இருப்பதைக் கண்டறிந்துள்ளனர். அதன் தொடர்ச்சியாகத்தான் தற்போது மேற்கொண்ட ஆய்வு.



நாட்டுக்கல்பாளையம் நடுகல் சிற்பம்

நடுகல்லின் தோற்றம்:

நடுகல்லில் ஆணும் பெண்ணுமாக இருவரின் உருவங்கள் புடைப்புச் சிற்பமாக வடிக்கப்பட்டுள்ளன. இருவரும் கை கூப்பியவாறு காணப்படுகின்றனர். விரல்கள், சற்றே விரிந்த நிலையில் தோற்றமளிக்கின்றன. ஆணின் தலைப்பகுதியில் தலைப்பாகை அமைப்பு உள்ளது. பெண்ணின் தலைப்பகுதி அவளுடைய வலப்பக்கத்தில் கொண்டை முடிந்துள்ளவாறு உள்ளது. இருவருமே காதணிகள், கழுத்தணிகள் அணிந்துள்ளனர். அதுபோலவே, இருவரும் தோளிலும் முன்கைகளிலும் வளைகள் அணிந்துள்ளனர். பெண்ணின் காலில் ஓர் அணிகலன் இருப்பது புலப்படுகிறது. இருவரின் ஆடைகளும் முழங்காலுக்குக் கீழ் வரை காட்டப்பட்டுள்ளன. ஆணின் ஆடைக் கச்சில் எந்தவொரு ஆயுதமும் காட்டப்படவில்லை. எனவே, சிற்பத்தில் உள்ள ஆண் உருவத்தை ஒரு வீரன் என அடையாளப்படுத்த இயலாது. (கல்வெட்டினைப் படித்த பிறகு, ஆண் சிற்பம் ஒரு சமூகத் தலைவரான ஊர்க்கவுண்டராக இருக்கக் கூடும் என்பதாகக் கருதப்படுகிறது.) சிற்பப் பகுதி அமைந்துள்ள அந்த ஒற்றைக்கல்லின் அடிப்பகுதியை ஒரு நீள்சதுர வடிவத்தில் பீடமாக அமைத்து, அப்பீடத்தின் மீது சிற்ப உருவங்களின் கால்கள் நின்றிருப்பன போல் வடித்திருக்கிறார்கள். மொத்தத்தில், சிற்பத்தொகுதி மிகவும் நேர்த்தியாகவும் தெளிவாகவும் உள்ளது. நடுகல் சிற்பத்தை வெறும் நிலத்தில் புதைத்து வைக்கும் பாணியில் அமைக்காமல், தனிக்கல்லால் ஆன ஒரு பீடப்பகுதியை அமைத்து அதில் திருமஞ்சன நீர் வெளியேறும் வகையில் வடிகால் ஒன்றையும் வெட்டியிருக்கிறார்கள். பலகைக் கல்லில் சிற்பத்தின் புடைப்புப் பகுதியைத் தவிர்த்த வெற்றிடங்களில் எல்லாம் எழுத்துகள் பொறிக்கப்பட்டுள்ளன.



நடுகல் சிற்பம்-அண்மைத்தோற்றம்-படியெடுக்கும் முன்னர்

எழுத்துப்பொறிப்பைப் படித்தல்:

நடுகற்சிற்பம் வழிபாட்டில் இருப்பதால் எண்ணெய் பூசப்பட்டு இருந்தது. இளைஞர் இருவரும் இரும்பு புருசு கொண்டு எண்ணெய்ப் பூச்சினை அகற்றினார்கள். சிற்பப்பகுதியும் எழுத்துப்பொறிப்பும் தெளிவான தோற்றத்தை அடைந்தன. இருப்பினும் இந்த நிலையில் எழுத்துகளைப் படிக்க இயலவில்லை. வழக்கம்போல், மாவு பூசித் துடைத்தெடுத்தோம். இந்நிலையில் தெரிந்த எழுத்துகளைப் படித்து அறிந்த கல்வெட்டின் பாடம் கீழ்வருமாறு:




நடுகல் சிற்பம் - தூய்மைப்பணியில் ஆர்வலர்கள்



நடுகல் சிற்பம்-அண்மைத்தோற்றம்-படியெடுத்த பின்னர்

கல்வெட்டுப்பாடம்:

1 . . . . . . . . . . புரட்டாசி மீ 25 தே
2 தியும் செவ்வாய்
3 க்கிழமையும் திருவாதி[ரை]
4 நச்ச்செத்திரமு
5 ம் பெற்ற
6 சுப தி
7 னத்
8 தில் நாட்டுக்கல் பா
9 ளையத்திலே யிரு
10 க்கும் வேழாழன்
11 வம்முசத்தில் ஓதா
12 ழ கோத்திரம் லிங்கா
13 கவுண்டன் மகன்
14 சிங்கா கவுண்டன் அவருடைய பெண்
15 சாதி செம்பம்மாள் இவர்கள் ரெண்
16 டு பேரும் தெய்வீகமானதுக்குச் செய்
17 து வைத்த கல்ச்சிலை வெங்கி(டா)சல..

கல்வெட்டுச் செய்திகள்:

கல்வெட்டின் தொடக்கப்பகுதியில் உள்ள எழுத்துகள் தெளிவாகப் புலப்படவில்லை. எனவே, தொடக்கப்பகுதியில் குறிப்பிடப்பெறும் தமிழ் வியாழ வட்ட ஆண்டின் பெயரை அறிய இயலவில்லை. சில கல்வெட்டுகளில் எழுதப்படுவது போன்று கலியுக ஆண்டைக் குறிக்கும் எண்களோ, சாலிவாகன ஆண்டைக் குறிக்கும் எண்களோ எழுதப்படாததால் கல்வெட்டின் காலம் தெரியவில்லை. எனினும், சிற்ப அமைப்பு, எழுத்தமைதி ஆகியனவற்றின் அடிப்படையில் கல்வெட்டின் காலம் 18-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி அல்லது 19-ஆம் நூற்றாண்டின் தொடக்கப்பகுதி எனக் கொள்ளலாம். கல்வெட்டில் மாதம், கிழமை, நாள் (நட்சத்திரம்) ஆகியவற்றின் பெயர்கள் - புரட்டாசி, செவ்வாய், திருவாதிரை - கொடுக்கப்பட்டுள்ளன. வம்முசம் என்பது வம்சம் என்பதன் திரிபு. நாட்டுக்கல் பாளையத்துச் சிங்கா கவுண்டன் மற்றும் அவருடைய மனைவி செம்பம்மாள் ஆகிய இருவரும் "தெய்வீகமானதுக்குச் செய்து வைத்த கல்ச்சிலை" என்று கல்வெட்டு கூறுகிறது.

மூத்தோர் வழிபாடு:

பெரும்பாலும் மிகுதியாக நடுகற்கள், ஆநிரைக் (கால்நடைகள்) காவலில் புலியுடன் சண்டையிட்டு இறந்துபடும் வீரர்களுக்கும், போரிலும்,

பூசல்களிலும் இறந்துபடும் வீரர்களுக்கும் எடுக்கப்படும். ஒருங்கிணைந்த கோவை மாவட்டக் கொங்குப்பகுதியில் காணப்பெறும் புலிகுத்திக்கல் சிற்பங்களும், வீரனின் உருவத்தைத் தனியாகச் செதுக்கிய சிற்பங்களும், ஆணும் பெண்ணுமாக இருவரின் உருவங்களைச் செதுக்கிய சிற்பங்களும் இவ்வகையான நடுகற்கள் ஆகும். எண்ணிக்கையில் குறைவாகச் சில நடுகற்கள் நினைவுக்கற்களாக அமைவதுண்டு. அவ்வாறமைந்த நினைவுக்கல்லே நாட்டுக்கல்பாளையத்து நடுகல். இவ்வகை நினைவுக்கற்களில், முன்னோர் வழிபாட்டு மரபே பொதிந்திருக்கும். அது போன்ற மூத்தோர் வழிபாட்டுக்குச் சான்றாகத்தான் நாட்டுக்கல்பாளையத்து நடுகல் சிற்பம் அமைந்துள்ளது. இந்த நடுகல்லை, கணவனும், மனைவியும் இறந்த பின்னர், அவர்கள் பரம்பரையினர் (மக்களும், பேரன்களும்) எடுப்பித்ததாகக் கொள்ளலாம். இறந்துபோனவரின் பெயர் சிங்கா கவுண்டர் எனவும், அவரது தந்தை பெயர் லிங்கா கவுண்டர் என்பதாகவும் அவர்கள் வேளாள வம்சத்தில் ஓதாள கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள் என்றும் கல்வெட்டு குறிக்கிறது. நினைவுக் கல் எடுப்பித்தவர் வெங்கிடாசலம் என்பதாகக் கல்வெட்டின் மூலம் அறிய முடிகிறது. நாட்டுப்புற ஊர்களில் நிலக்கிழாராக இருக்கும் ஊர்த் தலைவர் - ஊர்க்கவுண்டர் - ஒருவருக்கு எடுக்கப்பட்ட இந்த நினைவுக்கல் மூத்தோரை வழிபடும் மரபின் தொல்லியல் எச்சமாக விளங்குகிறது எனலாம்.

தேவனூர் புதூர்:

அடுத்து, இளைஞர்கள் அழைத்துச் சென்ற இடம் தேவனூர் புதூர். அங்கு, மாலக்கோயில் என்றழைக்கப்படும் ஒரு சிறு கோயில். அதில் உள்ள ஒரு புலியின் சிற்பத்தில் எழுத்துப்பொறிப்பு உள்ளதாகக் கட்டுரை ஆசிரியரிடம் மேற்படி இளைஞர்கள் கூறினர். நேரில் சென்ற பிறகு, அக்கோயிலுக்குக் கட்டுரை ஆசிரியர் 2013-ஆம் ஆண்டிலேயே சென்று வந்ததும், அக்கோயில் பற்றிய செய்தியை நாளிதழ் மூலம் வெளிப்படுத்தியதும் நினைவுக்கு வந்தது. இக்கோயில் பற்றிய அச்செய்திக் குறிப்புகள் வருமாறு:

கொங்குநாட்டில் கால்நடைச் சமுதாயமும் புலிகுத்திக் கற்களும்:

கொங்கு நாடு பழங்காலத்தில் காடும் காடு சார்ந்த முல்லை நிலத்தைப் பெருமளவில் கொண்டிருந்தது. எனவே, கொங்குச்சமுதாயமும் நீண்ட காலம் கால்நடை வளர்ப்புச் சமுதாயமாகவே அமைந்திருந்தது. வேளாண்மை பெருமளவில் இல்லை. பத்து-பதினொன்றாம் நூற்றாண்டில் சோழர் கொங்குநாட்டைக் கைப்பற்றிக் கொங்குச்சோழரைக்கொண்டு ஆட்சி நடத்தியபின்னரே வேளாண்மை பெருகியது. கால்நடை வளர்ப்பில் அவற்றைப் பேணுதல் என்பது தலையாய பணி. அவற்றை அடைத்து வைக்கப் பட்டிகள் இருந்தன. ஆனால், ஊரைச் சூழ்ந்துள்ள காடுகளிலிருக்கும் புலிகளால் கால்நடைகளுக்கு மிகுந்த ஆபத்தும் இருந்தது. புலிகளால்

வேட்டையாடப்படுவதினின்றும் கால்நடைகளைப் பாதுகாக்க வீரர்கள் காவலிருந்தனர். அவ்வீரர்கள் காவல் பணியின்போது புலிகளை எதிர்கொண்டு அவற்றுடன் சண்டையிட்டுக் கால்நடைகளைக் காத்தனர். சிலபோது, வீரர்கள் இறந்துபடுதலும் நிகழும். அவ்வீரர்களின் நினைவைப் போற்றும் வகையில் ஊர்மக்கள் அவர்க்குக் கல் நாட்டி வழிபாடு செய்தனர். அவ்வகைக் கற்களில் புலியுடன் போரிடும் தோற்றத்தில் வீரனின் சிற்பங்களை வடித்தனர். கோவைப்பகுதியில், இவ்வாறான நடுகற்கள் புலிகுத்திக்கல் என்னும் பெயரால் அழைக்கப்படுகின்றன. சில ஊர்களில், இவற்றை நரிகடிச்சான் கல் எனவும் அழைக்கின்றனர். புலியைப் பெருநரி எனப் பண்டு அழைக்கும் வழக்கம் காடு சார்ந்த குடிகளிடையே இருந்துள்ளது. எனவே, நரிகடிச்சான் கல் என்பது, குழூஉக்குறியின் பின்னணியில் அமைந்ததொரு பெயராகலாம்.

தேவனூர் புதூர் நரிகடிச்சான் கோயில்:



நரிகடிச்சான் கோயில் - முகப்புத் தோற்றம்



சுற்றுச்சுவரோடு ஒரு தோற்றம்

தேவனூர் புதூரில், நவக்கரை பாலத்தருகில் மேற்சொன்ன நரிகடிச்சான் கோயில் அமைந்துள்ளது. சாலையோரத்தில் ஒரு வேப்பமரத்தின் அருகில் அமைந்துள்ள இக்கோயில் ஆறடி நீளமும் ஐந்தடி அகலமும் கொண்ட ஒரு சிறிய கருவறை அமைப்பைக்கொண்டுள்ளது. கருவறைபோன்ற இந்தக்கட்டுமானம் முழுதும் கற்களால் அமைக்கப்பெற்றது. கருவறையின் வாயில் போன்ற முன்புறத்தில், ஐந்தடி உயரமுள்ள இருகற்கள் இருபுறம் நிற்கவைக்கப்பட்டு, நடுவில் ஒருவர் உள்ளே நுழையுமளவு வாயில் திறப்பு அமைக்கப்பட்டிருந்தது. கருவறையின் இரு பக்கவாட்டுப்பகுதிகளிலும் பின்புறத்திலும் ஐந்தடி உயரமுள்ள மூன்று மூன்று கற்கள் இணைக்கப்பட்டிருந்தன. கருவறையின் கூரைப்பகுதி சற்றே பெரிய அளவிலான ஐந்தரை அடி உயரமுள்ள மூடுகற்கள் மூன்றைக்கொண்டு அடுக்கப்பட்டிருந்தது. எல்லாக்கற்களும் சுண்ணாம்புக் காரைப்பூச்சு கொண்டு நன்கு இணைக்கப்பட்டிருந்தன. பெரும்பாலும் புலிகுத்திக்கற்கள் திறந்த வெளி நிலத்தில் ஒரு பலகைகல்லில் புடைப்புச் சிற்பமாகவே காணப்படும். ஆனால், இங்கே பெரிய கற்களாலான ஒரு கட்டுமானத்துக்குள் சிற்பம் காணப்படுவது சிறப்பானது. கருவறையைச் சுற்றிலும் திறந்த வெளியும் அதை அடைத்தவாறு கற்களை அடுக்கிச் சுற்றுச்சுவரும் அமைத்திருக்கிறார்கள். சுற்றுச்சுவர் கட்டுமானத்திலும் முன்புறத்தில் இரு கல் தூண்களைக்கொண்டு ஒரு வாயிலை அமைத்திருக்கிறார்கள்.

கற்களால் அமைந்த மேற்கண்ட அறைக்குள் மூன்று அடி நீளமும் இரண்டரை அடி உயரமும் கொண்ட புடைப்புச்சிற்பத்தில், வீரன் ஒருவன் தன் இடது கையால் புலியின் வாய்க்குள் சிறிய வாளைப் பாய்ச்சியவாறும், தன் வலது கையால் நீண்டதொரு வாளைப் புலியின் வயிற்றுப்பகுதியில் பாய்ச்சியவாறும் காணப்படுகிறான். இரண்டு வாள்களுமே புலியின் உடலைத் துளைத்து உடலுக்கு மறுபுறம் வெளிவந்துள்ளவாறு உள்ளன. புலி தன் பின்னங்கால்களால் நின்றவாறு முன்கால்களைத் தூக்கி வீரனின் வலது கையைப்பற்றிக்கொண்டு தாக்கும் நிலையில் காணப்படுகிறது. வீரனின் கால்களும், புலியின் பின்னங்கால்களும் நாம் பார்க்க இயலாதவாறு பலகைச் சிற்பம் சற்றே நிலத்தில் புதைந்துபோய்விட்டது. வீரன் தலையில் தலைப்பாகை இருப்பதுபோல் தோன்றுகிறது. தலையின் வலப்பக்கம் கொண்டை காணப்படுகிறது. கழுத்திலும் காதிலும் அணிகள் உள்ளன. இடையில் ஆடைக்கச்சு காணப்படுகிறது. இடைக்கச்சில் குறுவாள் ஒன்று இருப்பதுபோல் புலப்படுகிறது. நீண்ட நாள்களாகச் சிற்பத்துக்கு எண்ணெய் பூசப்பட்டுவருவதன் காரணமாகச் சிற்ப நுணுக்கங்களை அறிய முடியவில்லை. வீரனுக்கும் புலிக்கும் இடையில் ஒரு நீண்ட தண்டு காணப்படுகின்றது. எண்ணெய்ப்பூச்சில் அதன் வடிவம் தெளிவாகப் புலப்படவில்லை.

கோயில் அறைக்கு வெளியே தனிக்கல்லில் புலியின் சிற்பம்:

கோயில் வளாகத்தில் புலியின் சிற்பம் தனிக்கல் ஒன்றில் வடிக்கப்பட்டு வைக்கப்பட்டுள்ளது. 2013-ஆம் ஆண்டில் கட்டுரை ஆசிரியர் பார்த்தபோது இந்தச் சிற்பத்திலும் முழுதும் எண்ணெய்ப்பூச்சு இருந்தமையால் எழுத்துப் பொறிப்புகள் இருந்தமைக்கான அறிகுறிகள் புலப்படவில்லை. ஆனால், இன்றைய நிலையில் ஆர்வமிக்க இளைஞர்கள் எழுத்துப்பொறிப்பை இனம் கண்டுள்ளனர்.



கோயில் அறைக்கு வெளியே தனிக்கல்லில் புலியின் சிற்பம்



புலிச் சிற்பம் - அண்மைத்தோற்றம்

புலிச்சிற்பத்தில் எழுத்துப்பொறிப்பு:

தற்போதும் புலிச் சிற்பத்தில் எண்ணெய்ப் பூச்சு மிகவிருந்தது. இளைஞர் இருவரும் நீண்ட நேர உழைப்புக்குப் பின்னர் எண்ணெய்ப் பூச்சை அகற்றி மாவு பூசினர். எட்டு வரிகள் கொண்ட கல்வெட்டு.

கல்வெட்டின் பாடம்:

1 சார்வரி வரு. ஆனி மீ . . .
2 ம(லை)யாண்டி கவுண்டன் ம
3 கன் ஆண்டி கவுண்டன்
4 மகன் மலையாண்டி
5 க்கவுண்டன் மால
6 கோவிலுக்கு
7 வைத்த
8 உபையம்



புலிச்சிற்பத்தில் எழுத்துப்பொறிப்பு

நரி கடிச்சான் கோயில் என்னும் பெயர் இக்கோயிலுக்கு இருப்பினும், மாலக்கோயில் என்னும் பெயரில் மக்கள் இக்கோயிலை வழிபடுகின்றனர். இந்த வழக்கு, கல்வெட்டிலும் காணப்படுகிறது. "மால் கோயில்" என்பதே மாலக்கோயில் என்று மக்கள் வழக்கில் மருவியுள்ளது எனலாம். கால்நடைகளை வளர்ப்போர் தம் கால்நடைகளின் நலம் வேண்டி வழிபடும் கோயிலே மால் கோயில். புலிச் சிற்பத்தைச் செய்து வைத்தவர் மலையாண்டிக்கவுண்டன் என்பது கல்வெட்டுக் கூறும் செய்தி. பாட்டன் பெயரை பெயரனுக்கு வைக்கும் மரபு அரசர் காலம் தொட்டு அண்மை நூற்றாண்டு வரை தொடர்ந்து வந்துள்ளதை இக்கல்வெட்டு உறுதிப்படுத்துகிறது. கல்வெட்டில் சார்வரி ஆண்டு குறிக்கப்படுகிறது. இது கி.பி.

1840, கி.பி. 1900 ஆகிய இரு ஆண்டுகளுக்கும் பொருந்தும். எனவே, இந்தக் காலகட்டத்தில் புலிச்சிற்பம் செய்து வைக்கப்பட்டிருக்கலாம்.

கடத்தூர்:

தேவனூர் புதூரிலிருந்து அடுத்து நாங்கள் சென்ற இடம் கடத்தூர். உடுமலைக்கருகில் அமைந்துள்ள இவ்வூர் தென் கொங்கின் பழமையான ஓர் ஊராகும். 11-ஆம் நூற்றாண்டில், இப்பகுதி வீர கேரளர் ஆட்சியிலிருந்தது. 12-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து கொங்குச் சோழர் ஆட்சியின்கீழ் வந்தது. வீரகேரளர் கல்வெட்டுகளில் தொடங்கி 13-ஆம் நூற்றாண்டின் இறுதிவரை – கொங்குச்சோழரில் இறுதி அரசனான மூன்றாம் விக்கிரம சோழனின் ஆட்சிக்காலம் கி.பி. 1299 வரை - இவ்வூரின் மருதீசர் கோயிலில் கல்வெட்டுகள் உள்ளன. இவ்வூரில் மருதீசர் கோவில் தவிரக் கொங்கவிடங்கீசுவரர் கோவிலும் உள்ளது. இக்கோயிலிலும் கல்வெட்டுகள் உள்ளன. ஆனால் இக்கோயில் சிதிலமடைந்து இடிபாடுகளுடன் வழிபாடின்றிப் பாழ் பட்டுவிட்டது. மருதீசர் கோயில், வழிபாட்டில் நல்ல நிலைமையில் உள்ளது. கல்வெட்டுகளில் இவ்வூர் கடற்றூர் என வழங்கப்படுகிறது. கல்வெட்டுகளில் இறைவன் பெயர் மருதுடையார் என்பதாகும். மருத மரத்தின் சுயம்பு வடிவமே இலிங்கமாக வழிபடப்படுகிறது. கோயிலின் பெயரைத் தற்போது “அர்ஜுனேசுவரர் கோயில்” என்று வழங்குகிறார்கள். இடைக்காலத்தில் வழங்கிய அழகிய தமிழ்ப் பெயர்களில் பெரும்பாலானவை அப்பெயர்களை இழந்து சமற்கிருதமாக்கலில் தம் வேர்கள் அறியப்படாவண்ணம் குலைவுற்றுள்ளன. மருத மரத்துக்குச் சமற்கிருதத்தில் அர்ஜுனம் என்று பெயர். மருதீசர் என்னும் இறைவன் அர்ஜுனேசுவரர் (அர்ஜுன ஈசர்) ஆக மாறுகிறார். இந்தப் பொருள் அறியாதவர் சிலரால், மகாபாரதக் கதையில் வரும் பாண்டவன் ‘அர்ஜுனன்’ இந்த ஈசனை வணங்கியதால் இறைவன் பெயர் அர்ஜுனேசுவரர் என்றானது என வாய்வழிப் புனைவுகள் எழத்தொடங்கினால் வியப்பதற்கில்லை.

கடத்தூர் மருதகாளியம்மன் கோயில்:

கடத்தூரின் கோயில் இறைவன் பெயர் மருத மரத்துடன் பிணைந்துள்ளதால், மருத மரத்தொடர்பு இங்குள்ள அம்மன் கோயிலுக்கும் ஏற்பட்டது எனலாம். எனவே, மருத காளி. இக்கோயிலின் வாயிலின் முன்புறம் இரண்டு நடுகற் சிற்பங்கள் உள்ளன. இவற்றிலும் எழுத்துப் பொறிப்புள்ளதாக மேற்குறித்த இளைஞர் இருவரும் கண்டறிந்து இதையும் படிக்கவேண்டும் என்னும் ஆர்வத்தால் களப்பணிப் பயணத்தில் கடத்தூர் மருதகாளியம்மன் கோயிலையும் சேர்த்தனர். இச் சிற்பங்களின் மீது பல காலமாகப் பூசப்பெற்ற எண்ணெய்ப் பிசுக்கினை அகற்றிய பின்னரே கல்வெட்டு எழுத்துகளைப் படிக்க இயலும்

என்னும் காரணத்தால் அந்த வேலையில் இறங்கினர். நீண்ட நேர முயற்சிக்குப் பின் ஒரு சிற்பத்தின் மீதிருந்த எண்ணெய்ப் பற்றை மட்டுமே அகற்ற முடிந்தது.




மருதகாளியம்மன் கோயிலில் நடுகல் சிற்பம்-1

நடுகல் சிற்பம் –தோற்ற அமைப்பு:

முதல் நடுகல் சிற்பத்தில் ஒரு வீரன், அவன் மனைவி என்பதாக இரு உருவங்கள் புடைப்புச் சிற்பமாக வடிக்கப்பட்டுள்ளன. வீரன் தன் வலது கையில் வாள் ஒன்றினை உயர்த்திப்பிடித்தவாறும், இடது கையில் கேடயம் ஒன்றினைப் பிடித்தவாறும் காணப்படுகிறான். அவன் மனைவி தன் இடது கையில் மதுக்குடுவை ஒன்றைத் தரையை ஒட்டிய நிலையில் பிடித்துக்கொண்டிருக்கிறாள். மடக்கி வைத்த அவளுடைய வலது கையில் உள்ள பொருள் தெளிவாகப் புலப்படவில்லை. அவளுடைய தலைக்கொண்டை வலப்பக்கமாகச் சாய்ந்த நிலையில் உள்ளது. வீரனின் தலைக்கொண்டை தலையின் மேற்புறம் உயர்த்திய நிலையில் உள்ளது. இருவருக்கும் பாதம் வரை ஆடைக்கட்டு காணப்படுகிறது. இருவருமே அணிந்துள்ள அணிகலன்களின் தோற்றம் தெளிவாயில்லை. பெண்ணின் தலைப்பகுதிக்கும் ஆணின் கையிலுள்ள வாளுக்கும் இடைப்பட்ட பகுதியில் மூன்று வரிகள்; ஆணின் தலைப்பகுதியின் இடது புறமுள்ள இடைவெளியில் இரண்டு வரிகள்; பெண்ணின் இடது கைக்குக் கீழே, அவளின் பாதம் வரையுள்ள இடைவெளியில் நான்கு வரிகள்; ஆணின் கையில் உள்ள கேடயத்தின் கீழே அவனின் பாதம் வரையுள்ள இடைவெளியில் ஐந்து வரிகள் என எழுத்துப்பொறிப்புகள் காணப்படுகின்றன. எழுத்துகள் தெளிவற்றும் திருத்தமற்றும் இருப்பதால் நடுகல் என்ன காரணத்தால் எடுக்கப்பட்டது என்னும்

செய்தி அறியப்படவில்லை. எழுத்தமைதி, மிகப் பிற்காலப் பின்னணியைக் காட்டுவதாயுள்ளது. ஆனால் நடுகல் சிற்ப அமைதி அதன் காலம் 19-ஆம் நூற்றாண்டு எனக் கருதவைக்கின்றது. எழுத்துப் பொறிப்புகளின் பாடம் - மேற்குறித்த நான்கு பகுதிகளின் வரிசையில் - கீழ் வருமாறு:

பகுதி-1:

1 . . ள்ளியப்ப நம்பியார்

2 மகன் அமராபதி

3 மருதக்கார்

பகுதி-2: (இனம் காண இயலவில்லை)

1 . . . . . .

2 . . . . . .

பகுதி-3:

1 . . . ய்யாண . .

2 (பேரன்) காளி

3 கநத்தூர்

4 ண

பகுதி-4:

1 அம

2 ர உ

3 பையம்

4 . . . .(றன்)




மருதகாளியம்மன் கோயிலில் நடுகல் சிற்பம்-2

களப்பணியின் இறுதியில் கல்வெட்டுகள் கண்டுபிடிப்பு:

மேற்கண்ட நடுகல் சிற்பத்திலிருந்த எழுத்துப் பொறிப்புகளைப் படிக்க எடுத்துக்கொண்ட பெரு முயற்சியின் பலன் குறிப்பிடும் படியாயில்லை என்பது களப்பணியின் இறுதிக்கட்டத்தில் ஒரு நிறைவற்ற நிலையில் எங்களை நிறுத்தியது. தொல்லியல் தேடல் தொடர்புள்ள பயணங்களில் சில போது, தடயங்களோ, கல்வெட்டுகளோ கிட்டாமல் போவதுண்டு. அதைப் பொருட்படுத்தாது தேடல் தொடர்வதில்தான் தொல்லியல் ஆர்வலரின் பணி அமையவேண்டும். நாட்டுக்கல் பாளையத்தில் காலை பத்து மணியளவில் தொடங்கிய பணி மருதகாளியம்மன் கோயிலில் முடியும் தறுவாயில் நேரம் மாலை ஆறு மணி ஆகிவிட்டிருந்தது. அடுத்து நான்கு நாள்களில் வரவிருக்கும் சித்திரை மாதப்பிறப்பு தன் கடும் வெயிலை முன்கூட்டியே அனுப்பிவைத்தது என்று எண்ணுமாறு அன்று நிலவிய கடும் வெயிலால் களைத்துப்போயிருந்த நாங்கள் வீடு திரும்ப அணியமானோம்.

கோயில் பூசையாளரின் மகன் - ஒன்பதாம் வகுப்புப் படிக்கும் மாணவன் - ஆர்வத்தோடு எங்கள் களப்பணியைப் பார்த்துக்கொண்டிருந்தவன், மிக்க ஆர்வத்தோடு, கோயிலின் அர்த்தமண்டப நிலைக்காலில் எழுத்துகள் உள்ளன என்றும் அவற்றையும் பார்த்துப் படித்துச் செய்தி சொல்லுங்கள் என வேண்டுகோள் விடுத்ததும் ஒரு திருப்பமே. புதியதொரு கல்வெட்டினைக் கண்டுபிடிக்கும் வாய்ப்பு. சென்று பார்த்தோம். இரண்டு கல்வெட்டுகள் அந்த நிலைக்காலிலிருந்தன என்பது இரட்டிப்பு மகிழ்ச்சியைத் தந்தது. அது மட்டுமல்ல; அவற்றில் ஒரு கல்வெட்டு, கி.பி. 11-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பழங்கல்வெட்டாய் அமைந்துவிட்டதில் நாங்கள் கொண்ட மகிழ்ச்சி எல்லையற்றது. அர்த்தமண்டப நிலைக்காலில் கை விளக்கின் வெளிச்சத் துணையுடன் ஒளிப்படங்கள் எடுத்துக்கொண்டோம்.

முதல் கல்வெட்டு – 11-ஆம் நூற்றாண்டு வீரகேரளர் கல்வெட்டு:

முதல் கல்வெட்டு ஒரு பழங்கல்வெட்டு என்பது முதல் பார்வையிலேயே புலனாகியது. எழுத்தமைதி அவ்வாறானது. ஆனால், எழுத்தைப் பொறித்த சிற்பி எழுத்துகளுக்கு ஒரு திருத்தமான வடிவத்தைத் தந்திருக்கவில்லை. இடைக்காலக் கல்வெட்டுகளில் காணப்படும் எழுத்துக்குரிய முழு வடிவம் காணப்படவில்லை. ஒரு விரைவும், அக்கறையின்மையுமே அதில் காணப்பட்டது. இடது மூலையிலிருந்து வலது மூலைக்கு நேர் கோடாய்ச் செல்லாமல் வலப்புறம் செல்லச் செல்லச் சாய்மானமாய் எழுதப்பெற்றிருந்தது. கோயிலிலேயே முழுதும் படித்துவிட இயலவில்லை. கணினியில் கல்வெட்டுப்படத்தைப் பதிவிட்டுப் படித்ததற்கும் நிறைய நேரமும் சிந்தனையும் செலவாயின.

அரசன் யார்? – ஓர் ஆய்வு:

எல்லாக் கல்வெட்டுகளையும் போல் இக்கல்வெட்டும் "ஸ்வஸ்திஸ்ரீ" என மங்கலச் சொல்லுடன் தொடங்கியது. அதனை அடுத்தும் இரண்டாவது வரியிலும் அரசன் பற்றிய செய்தி இருந்தது. ஆனால், எழுத்துகளை இனம் கண்டுகொள்வதில் சிக்கல் இருந்தது. கல்வெட்டுப் பகுதியின் தேய்மானமும் சிக்கலை ஏற்படுத்தியது. அரசன் பெயரில் "சோழ" என்பது சற்றுப் புலனாயிற்று. முழுப்பெயரும் எளிதில் புலனாகவில்லை. "ஸ்வஸ்திஸ்ரீ" என்னும் தொடக்கச் சொல்லை அடுத்துப் பொதுவாகக் கல்வெட்டுகளில் காணப்படும் சொல் "கோ" என்பதாக அமையும். "கோ" என்பது "அரசன்", "அரைசன்" என்பதற்கும் மேம்பட்ட ஒரு உயர்நிலைச் சொல் வழக்கு. அந்த யூகத்துடன் அணுகியபோது "கோ" எழுத்தை வலிந்து பெற முடிந்தது. "வீர", "ராய" , "தேவர்க்கு" ஆகிய எழுத்துகள் சற்றே எளிதில் புலப்பட்டாலும், வலிந்து மேற்கொண்ட யூகத்தால் "வீர நாராயண தேவர்க்கு" என்று அரசனின் பெயரைத் தெரிந்து கொள்ள முடிந்தது. "வீரநாராயண" , "சோழ" ஆகிய இரு சொற்களைத் துணையாகக் கொண்டால், கொங்குப்பகுதியை ஆண்ட கொங்குச் சோழருள் ஒருவரான உத்தம சோழ வீரநாராயணன் என்னும் பெயர் முன் நின்றது. ஆனால், "கோ" என்பதையடுத்தும், "சோழ" என்பதற்கு முன்னரும் அரசனின் பெயரில் இயற்பெயர் அமையும் இன்னொரு சொல்லில் உள்ள எழுத்துகள் "உத்தம" என்னும் எழுத்துகளோடு பொருந்தவில்லை.. அந்தச் சொல்லில் "தி" , "சை" ஆகிய எழுத்துகள் ஓரளவு புலப்படவே, மீண்டும் வலிந்த யூகத்தின் அடிப்படையில் பெயர் ஆய்வுக்குள்ளானது. கல்வெட்டு காணப்பெறும் பகுதி தென்கொங்கு. தென்கொங்குப் பகுதியைக் கொங்குச்சோழர் தம் ஆட்சியின்கீழ் கொணர்வதற்கு முன்னர் அது வீரகேரள அரசர் மரபின் கீழ் இருந்தது. வீரகேரள அரசர் வரிசைப் பட்டியலைப் பார்க்கையில், "அதிசய சோழன் வீரநாராயணன்" என்னும் பெயர் காணப்பட்டது. எனவே, "அதிசய" என்னும் இயற்பெயர்ப்பகுதி கிடைத்தது. அதன் அடிப்படையில் ஆய்ந்து பார்த்தபோது "தி-சை-ய" எழுத்துகள் கிடைத்தன. "அ" எழுத்து முற்றிலும் காணப்படாவிட்டாலும், "வ" எழுத்தை யூகம் செய்து அறிந்துகொள்ள முடிந்தது. இப்போது அரசனின் பெயர் "கோவதிசைய சோழ வீரநாராயணன்" என்றானது. கல்வெட்டுகளில் "விஜய" என்பது 'முதலில் "விசய" என மாற்றம் பெற்றுப் பின்னர் "விசைய" என்ற மாற்றத்திலும் எழுதப்படுவதுண்டு. அது போலவே, "அதிசய" என்பது இக்கல்வெட்டில் "அதிசைய" என எழுதப்பட்டிருக்கவேண்டும். முதலாம் இராசராசனின் பட்டப்பெயர் "கோ"-"இராசகேசரி" என்பது புணர்ச்சியிலக்கண வழியில் "கோ-விராசகேசரி" என அமைவது போல, இக்கல்வெட்டில் "கோ"-அதிசைய" என்பது "கோவதிசைய" என எழுதப்பெற்றிருக்கவேண்டும் என்னும் கருத்து முடிவு ஏற்பட்டது.

வீரகேரளர் ஆட்சியில் அரசனின் பெயர் இரு கூறுகளாகக் காணப்படும். பெயரின் பிற்பகுதி ஆட்சியில் உள்ள அரசனின் பெயராகவும், பெயரின் முற்பகுதி தந்தையின் பெயராகவும் அமையும். அவ்வகையில் இக்கல்வெட்டில் ஆட்சி அரசனின் பெயர் வீரநாராயணன் என்பதாகும்.




11-ஆம் நூற்றாண்டு வீரகேரளர் கல்வெட்டு

கல்வெட்டின் பாடம் :

1 ஸ்வஸ்திஸ்ரீ கோவதிசைய சோ

2 ழ (ஸ்ரீ) வீர நாராயண தேவ(ர்)க்கு திருவெ

3 ((ழுத்தி)ட்டுச் செல்லா நின்ற தி(ரு)ந

4 (ல்லி)யாண்டு இருபத்திரண்டா

5 (வது) கடற்றூர் ((முடிச்சி ந)க்க

6 ந் செய்வித்த பெ . . . . . .

7 . . . . . . . . . . . . . . . . . . . .(யு)

8 ம் . . . ய . . . . . (கை)யும் இ

9 நிலை(யும்) செ[ய்]வித்தே

10 ந் முடிச்சி நக்கந்

கல்வெட்டின் காலம்:

கல்வெட்டில் காணப்படும் அரசன் தென்கொங்கை ஆண்ட வீரகேரளரில் அதிசய சோழனின் மகனான வீரநாராயணன் ஆவான். இவனுடைய ஆட்சிக் காலம் கி.பி. 1021-1040 என்பதாகக் ”கோவை மாவட்டக் கல்வெட்டுகள்” நூலில் தரப்பட்டுள்ளது. கொங்கு நாட்டில் வீரகேரளர் ஆட்சி பற்றி ஆய்வு செய்த

கோவை-தொல்லியல் துறை முன்னாள் கல்வெட்டு ஆய்வாளர் திரு இரா.ஜெகதீசன் அவர்கள் வீரநாராயணனின் ஆட்சிக்காலம் கி.பி. 1076-1093 என வரையறை செய்துள்ளார். நமது கல்வெட்டு பொறிக்கப்பட்ட காலம் இவ்வரசனின் இருபத்திரண்டாவது ஆட்சியாண்டு எனவிருப்பதால், கல்வெட்டின் காலம் கி.பி. 1098 ஆகும். அவ்வகையில் மருதகாளியம்மன் கோவில் கல்வெட்டு வீரநாராயணனின் ஆட்சிக்காலத்தை மேலும் ஐந்தாண்டுகள் கூட்டுவதாக அமைகிறது. அரசனின் ஆட்சியாண்டைக் குறிக்கையில் கல்வெட்டு, ”திருவெழுத்திட்டுச் செல்லாநின்ற திருநல்லியாண்டு” எனக்கூறுகிறது. ”திருவெழுத்திட்டு” என்னும் தொடர், அரசன் பட்டப்பெயர் சூட்டியதைச் – அதாவது முடி சூடியதை – சுட்டும். “திருநல்லியாண்டு” என்பது ஆட்சியாண்டைக் குறிக்கும்.

கல்வெட்டுச் செய்தி:

கல்வெட்டு அமைந்துள்ள கோயில் கடத்தூர் மருதகாளியம்மன் கோயில்; கல்வெட்டு அமைந்துள்ள இடம் அர்த்த மண்டப நிலைக்கால். நிலையைச் செய்து கோயிலுக்குக் கொடையாக அளித்தவன் பெயர் நக்கன் என்பது. நக்கன் என்பது ஒரு பொதுச் சிறப்புப்பெயர். கொடையாளியின் இயற்பெயர் “முடிச்சி” என்பதாகக் கல்வெட்டு எழுத்துகள் வழி அறிகிறோம். இப்பெயர், சற்றுப் புதிதாக இருப்பதாலும், அரசனின் பெயராய்வு சரியானதாவென உறுதிப்படுத்திக்கொள்ளவும் கல்வெட்டின் பாடத்தைப் படத்தோடு கல்வெட்டறிஞர்கள் திரு. சுப்பராயலு, திரு. பூங்குன்றன் ஆகியோரின் பார்வைக்கனுப்பிக் கருத்துக் கேட்டதில் கல்வெட்டுப்பாடம் சரியாக உள்ளதென்பது தெளிவாயிற்று. கல்வெட்டில், கடத்தூரின் பழம்பெயர் கடற்றூர் எனக் குறிப்பிடப்படுகிறது. திருநிலையோடு, வேறு சில உறுப்புகளையும் கொடையாளி செய்து அளித்துள்ளார் என 6,7,8 ஆகிய வரிகள் மூலம் அறிகிறோம். எழுத்துகள் புலப்படாமையால் அவை என்ன என்பது அறியப்படவில்லை. இருப்பினும், கடத்தூர் மருதீசர் கோயில் கல்வெட்டுகளின் அடிப்படையில், திருநிலையோடு, போதிகை, முகவணை, உத்தரம், திருக்கதவு போன்றவற்றையும் கொடையாளி அளித்திருக்கலாம்.

கடத்தூர் மருதகாளியம்மன் கோயிலின் பழமை:

வீரகேரளரின் கல்வெட்டு வாயிலாகக் கடத்தூர் மருதகாளியம்மன் கோயிலின் பழமையை அறிகிறோம். பெருஞ்சமயம் சார்ந்த சிவன் கோயில்கள் எழுப்பப்படும் முன்னரே, நாட்டார் வழிபாடு என்பது தாய்த்தெய்வ வழிபாடாகவே விளங்கியது எனலாம். கல்வெட்டு, மருதகாளியம்மன் கோயிலில் கி.பி. 11-ஆம் நூற்றாண்டில் புதுப்பித்தல் பணி (திருப்பணி) நடைபெற்றிருக்கக் கூடும் என்பதைச் சுட்டுகிறது எனலாம்.

இரண்டாம் கல்வெட்டு - கி.பி. 1883 – ஆம் ஆண்டுக்கல்வெட்டு:

வீரகேரளர் கல்வெட்டின் கீழேயே பிற்காலக் கல்வெட்டு ஒன்றும் பொறிக்கப்பட்டிருந்தது. அதன் காலம், கல்வெட்டில் கூறப்பட்ட கலியாண்டு 4984, சுபானு வருடம் ஆகிய குறிப்புகளின்படி கி.பி. 1883 ஆகும். கோவில் காணியாளரான, சின்னவீரப்பட்டி ஊரைச் சேர்ந்த பவழ குல வெள்ளாளர் குப்புச்சாமிக்கவுண்டன் வகையறா மற்றும் காசனங்குடி ஊரின் கோவில் பூசாரிகள் ஆகியோர் மருதகாளியம்மன் கோயிலைப் புதுப்பித்துக் கொடுத்தனர் என்று கல்வெட்டு குறிப்பிடுகிறது.



கி.பி. 1883-ஆம் ஆண்டுக்கல்வெட்டு

கல்வெட்டின் பாடம் :

1 சுபஷிது
2 கலி 4 9 8
3 4 மேல் சு
4 பானு ஸ்ரீ தை
5 மீ கடத்தூற்
6 மறுதகாளி
7 அம்ம[ன்] கோவி
8 ல் காணியாழ்
9 சின்ன வீரப
10 ட்டி பகழ குலம்
11 குப்புச்சாமிக்க
12 வுண்டன் வகைய
13 றா பேற் கிறாமம் கா
14 சனங்குடி கோ
15 வில் பூசாரிகழா
16 லும் பழங்கெட
17 வேலை புதுப்பித்தது
18 உபயம்

முடிவுரை:

தென்கொங்கில் வீரகேரளர் ஆட்சி ஏறத்தாழ 250 ஆண்டுகள் நடைபெற்ற போதிலும், வீரகேரளர் கல்வெட்டுகளைக் காட்டிலும் கொங்குச் சோழரின் கல்வெட்டுகளே மிகுதியும் உள்ளன. வீரகேரளர் கல்வெட்டு எண்ணிக்கையைக் கூட்டும் வகையில், இந்தக் களப்பணி மூலம் வீரகேரளர் கல்வெட்டு ஒன்று கண்டறிந்ததில் ஏற்பட்ட மகிழ்ச்சியோடும் நிறைவோடும் வீடு திரும்பும் பயணம் தொடங்கியது.

நன்றி :

1. திரு. எ.சுப்பராயலு அவர்கள், தொல்லியல் பேராசிரியர், கோவை.

2. திரு. பூங்குன்றன் அவர்கள், தமிழகத் தொல்லியல் துறை - முன்னாள் உதவி இயக்குநர், கோவை.

3. திரு. இரா.ஜெகதீசன் அவர்கள், தமிழகத் தொல்லியல் துறை - முன்னாள் கல்வெட்டு ஆய்வாளர், கோவை.

தொடர்பு: துரை.சுந்தரம், கல்வெட்டு ஆராய்ச்சியாளர், கோவை.

doraisundaram18@gmail.com, **அலைபேசி** : 9444939156.

## 12. திருமுக்கூடல் வீரசோழன் ஆதுலர் சாலை

*– முனைவர். ப. தேவி அறிவு செல்வம்*

ஆயிரம் வருடங்கள் தொன்மையான தமிழகக் கோயில் ஒன்றினுள்ளே மருத்துவமனை ஒன்று செயல்பட்டதைக் கல்வெட்டுச் செய்தியால் அறியமுடிகிறது. திருமுக்கூடல் கல்வெட்டில் அங்கு 'வீரசோழன்' என்னும் பெயரில் இயங்கிய மருத்துவமனை பற்றிய செய்தியின் சுருக்கம் கீழே:

கோயில் இருப்பிடம்:
காஞ்சிபுரம் மாவட்டத்தில் உள்ள திருமுக்கூடல் அருள்மிகு ஸ்ரீ அப்பன் வெங்கடேச பெருமாள் திருக்கோயில்

மூலவர்:
மும்மூர்த்திகளான சிவன், பிரம்மா, திருமால் மூவரும் ஒரே திருக்கோலத்தில் உள்ளனர்.

மூலவரின் சிறப்பு:
இவர் கடுசர்க்கரை படிமத்தால் ஆனவர், எனவே அபிஷேகம் இல்லாமல் தைலக்காப்பு மட்டும் நடைபெறுகிறது.

ஆதுலர் சாலை அல்லது மருத்துவமனை பற்றி உள்ள கல்வெட்டுச் செய்தி:
கோயிலின் உள்ளே செயல்பட்டுக் கொண்டிருந்த இந்த மருத்துவமனை 15 படுக்கைகள் கொண்டிருந்தது.

மருத்துவர்:
ஆலம்பாக்கத்து சவர்ணன் கோதண்டராமன் அசுவத்தாமன் பட்டர் என்பவர் நாடி பார்த்து மருந்து கொடுப்பவராக இருந்துள்ளார். இவருக்கான ஊதியம் தினமும் 3 குறுணி நெல் 4 காசுகள்.

அறுவை சிகிச்சை செய்பவர்:
அறுவை சிகிச்சை செய்யும் மருத்துவர் சல்லிய கிரியை பண்ணுவான் எனக் குறிப்பிடப்பட்டுள்ளார். இவருக்கான ஊதியம் தினம் 1 குறுணி நெல்லும் 2 காசுகளும்.

நீர் கொண்டு வருபவர்:

மருத்துவமனைக்குத் தண்ணீர் கொண்டு வருவதற்கு ஒரு பணியாள் இருந்துள்ளார். இவருக்கான ஊதியம் ஆண்டுக்கு 15 கலம் நெல்.

மருத்துவப் பணி மகளிர்:

மருத்துவப் பணி மகளிராக இருவர் இருந்துள்ளனர். இவர்கள் மருந்து அடும் பெண்கள் என அழைக்கப் பட்டுள்ளனர். இவர்களுக்கான ஊதியம் தினம் 4 நாழி நெல்லும் அரைக் காசும்.

நாவிதன்:

மருத்துவக் குழுவில் நாவிதர் ஒருவர் இருந்துள்ளார். நாவிதர்கள் கத்தியைக் கையாள்வதில் திறமை பெற்றவர்கள். ஆதலால் சவரத் தொழிலையும், அறுவை தொழிலையும் செய்துள்ளனர். இவர் நரம்பு உடல் உறுப்புகள் பாதிக்கா வண்ணம் சிறு அறுவை சிகிச்சை செய்வதால் இவரும் மருத்துவர் என்று அழைக்கப்பட்டார். பிள்ளைப் பேற்றுத் துறையில் நாவிதர் மனைவிமார் ஈடுபட்டதால் இவர்கள் மருத்துவச்சி என அழைக்கப்பட்டனர். நாவிதர்க்கான ஊதியம் நாளொன்றுக்கு 4 நாழி நெல்.

நோயாளிகள்:

நோயாளிகளை வியாதிப்பட்டு கிடப்பார் என்று பெயர் கொண்டு அழைத்ததாகக் கல்வெட்டுச் செய்தி குறிப்பிடுகின்றது. இவர்களுக்கு ஒரு வேளைக்கு ஒரு நாழி அரிசி வழங்கப்பட்டது.

மருந்துகள்:

ஆதுலர் சாலையில் ஒரு ஆண்டுக்குத் தேவையான பலவகையான மருந்துகளிருந்தன, அவை;

1. பிராமியம் கடும் பூரி - 1 எண்ணிக்கை
2. வாசா ஹரீ தகி - 2 படி
3. தச மூலா ஹரீ தகி - 1படி
4. பல்லாதக ஹரீ தகி -1 படி
5. கண்டீரம் - 1 படி
6. பலா கேரண்ட தைலம் -1 தூணி
7. லசு நாக ஏரண்ட தைலம் -1 தூணி
8. பஞ்சக தைலம் -1 தூணி
9. உத்தம கர்ணாதி தைலம் -1 தூணி
10. பில்வாதி கிருதம் -1 பதக்கு
11. மண்டூகர வடகம்-2000 எண்ணிக்கை

12. திராவத்தி -1 நாழி
13. விமலை - 2000 எண்ணிக்கை
14. சுனேற்றி - 2000 எண்ணிக்கை
15. தம் ராதி - 2000 எண்ணிக்கை
16. வஜ்ர கல்பம் - 1 தூணி 1 பதக்கு
17. கல்யாண லவணம் - 1 தூணி 1 பதக்கு

இந்த அனைத்து மருந்துகளையும் பத்திரப்படுத்திப் பாதுகாக்க 40 காசுகள் வழங்கப்பட்டுள்ளது என்று திருமுக்கூடல் கோயிலின் கல்வெட்டு செய்தி தெரிவிக்கின்றது.

இதேபோன்று ஆதுலர் சாலை( மருத்துவமனை) ஒன்று சென்னை வடபழனி முருகன் கோயிலின் உள்ளே இன்றும் செயல்பட்டுக் கொண்டிருக்கிறது.

சான்றாதாரங்கள்:
'திருமுக்கூடல்', முனைவர் சீ. வசந்தி, தமிழ்நாடு அரசு தொல்லியல்துறை வெளியீடு, 2013 பதிப்பு, பக்கம் 75-77.

அருள்மிகு திருமுக்கூடல் கரியமாணிக்க வரதராஜப் பெருமாள் திருக்கோயில் http://www.tamilvu.org/ta/அருள்மிகு-திருமுக்கூடல்-கரியமாணிக்க-வரதராஜப்-பெருமாள்-திருக்கோயில்-139047

தொடர்பு:
முனைவர். ப. தேவி அறிவு செல்வம்,
மருந்தாக்கவியல் பேராசிரியை மதுரை.
https://www.facebook.com/devipharm

## 13. ஜபல்பூர்க் கல்லறையில் தமிழ்க்கல்வெட்டுகள்

***– துரை.சுந்தரம்***

இந்தியக் கல்வெட்டியல் ஆண்டறிக்கை 1950-51:

1945 – 1952 ஆண்டுகளுக்கான கல்வெட்டியல் அறிக்கைகள் அடங்கிய தொகுதி நூலைப்படித்துக் கொண்டிருக்கையில், 1950-51 ஆண்டுக்குரிய பகுதியில் ஒரு செய்தி கருத்தை ஈர்த்தது. இப்பகுதியின் பதிப்பாசிரியரான என். லக்ஷ்மிநாராயண் ராவ் அவர்கள், 1857-ஆம் ஆண்டில் இந்திய நாட்டில் எழுச்சியுற்ற சிப்பாய்க் கலகத்துடன் தொடர்புள்ள இராணுவ நடவடிக்கைகளுக்குச் சான்று பகரும் வகையில் அமைந்த இரு கல்வெட்டுகளைக் குறித்துச் செல்கிறார். மத்தியப் பிரதேசத்து மாநில ஜபல்பூர் (JABALPUR) மாவட்டத்தில் ஸ்லீமனாபாத் (SLEEMANABAD) நகரில் இருக்கும் இரண்டு கல்லறைகளில் தமிழ்க் கல்வெட்டுகள் இரண்டு உள்ளன எனப்பதிவு செய்கிறார். தமிழ்ச் சிப்பாய்கள் இருவர் இறந்துவிட்ட நிகழ்வைத் தொடர்ந்து எழுப்பப்பட்ட கல்லறைகள் அவை. அவை பற்றிய விரிவான செய்தியை அறிந்துகொள்ளத் துணையாக, இவ்விரண்டு கல்வெட்டுகளும் INDIAN HISTORICAL QUARTERLY என்னும் இந்திய வரலாற்றைக் கூறும் காலாண்டு இதழில் பதிவு செய்யப்பட்டுள்ளன என்பதையும் குறிப்பிட்டிருக்கிறார். இவர் இந்தியா முழுமைக்குமான தொல்லியல் துறையின் கல்வெட்டு ஆய்வாளராக (GOVERNMENT EPIGRAPHIST FOR INDIA) இந்தக் காலகட்டத்தில் (1947-1951) பணியாற்றியுள்ளார். மேற்படிக் குறிப்பை வைத்து வரலாற்றுக் காலாண்டிதழை இணையத்தில் தேடிப் படித்ததில் அறியவரும் செய்திகளின் பதிவு இங்கே.

கல்லறைக் கல்வெட்டுகள்:

இந்தியக் கல்வெட்டு ஆய்வாளரான மேற்குறித்த என். லக்ஷ்மிநாராயண் ராவ் அவர்கள், தம் பணிப் பொறுப்பில், 1951-ஆம் ஆண்டு துறையின் களப்பணிப் பயணத்தின்போது ஸ்லீமனாபாத் (SLEEMANABAD) நகரில் இவ்விரு கல்வெட்டுகளையும் படியெடுத்துள்ளார். அது பற்றி இந்திய வரலாற்றுக் காலாண்டிதழில் அவர் எழுதியுள்ள கட்டுரையில் கல்லறைக் கல்வெட்டுகள் இரண்டையும் பற்றி விரிவாகக் குறிப்பிடுகிறார்.

ஸ்லீமனாபாத் (SLEEMANABAD):

மத்தியப் பிரதேச மாநிலம் ஜபல்பூர் (JABALPUR) மாவட்டம் சிஹோரா (SIHORA) வட்டத்தில் அமைந்துள்ள ஊரே ஸ்லீமனாபாத் (SLEEMANABAD). லக்னோவில் (LUCKNOW) பிரிட்டிஷாரின் சார்பில் 1849-1856 காலப்பகுதியில் இருந்து வாழ்ந்த SIR

WILLIAM SLEEMAN என்பவரின் பெயரால் அமைந்த ஊர் ஸ்லீமனாபாத் (SLEEMANABAD). இந்த ஊரில், ஜபல்பூர் (JABALPUR) - கத்னி (KATNI) சாலையில் 39/5 எண்ணிட்ட மைல் கல்லின் அமைவிடப்பகுதியில் இவ்விரு கல்லறைக் கல்வெட்டுகள் உள்ளன. இக்கல்வெட்டுகளைப் பற்றித் தொல்லியல் துறைக்குத் தெரியப்படுத்தியவர் முனி காந்தி சாகர் (MUNI KANTI SAGAR) என்னும் பெயருடைய ஒரு ஜைனத் துறவியர். பனாரஸ் (BANARAS) என்னும் காசியிலிருந்து ”ஞானோதயா” என்னும் பெயரில் இந்தி மொழியில் ஓர் இதழை வெளியிட்டுவந்தவர். இந்தியத் தொல் பொருள்களைத் (ANTIQUITIES) தேடிக்கண்டுபிடிப்பதிலும் அவற்றைப் பாதுகாப்பதிலும் மிகுந்த ஆர்வம் கொண்டிருந்தவர்.

1857-ஆம் ஆண்டுச் சிப்பாய்க்கலகம்:

கல்வெட்டுகள் அமைந்துள்ள இப்பகுதி இந்திய நாட்டின் “மஹாகோஷல்” (MAHAKOSHAL) என்றழைக்கப்பட்ட பகுதி. நாடு முழுதும் நிகழ்ந்த சிப்பாய்க் கலகத்தோடு தொடர்புள்ள, இப்பகுதிக்கான இராணுவச் செயல்பாடுகளுக்குச் சான்றாக இக்கல்வெட்டுகள் திகழ்கின்றன என்கிறார் என். லக்ஷ்மிநாராயண் ராவ் அவர்கள். இரு கல்வெட்டுகளும் கல்லறைகளில் காணப்படுபவை எனினும், முதல் கல்வெட்டு, கல்லறைக் கட்டுமானத்தின் மீது எழுதப்பட்டுள்ளது. மற்றது கல்லறையின் சிலுவைப்பகுதியின் மீது எழுதப்பட்டுள்ளது. இறந்துபோன இரு சிப்பாய்களும் தமிழர்கள்; இரு கல்வெட்டுகளும் தமிழில் எழுதப்பட்டுள்ளன.

முதல் கல்வெட்டு:

முதல் கல்வெட்டு எழுதப்பட்டது 1857-ஆம் ஆண்டு, நவம்பர் 6-ஆம் தேதி. இராமசாமி என்னும் சிப்பாயின் இறப்பைக் குறிப்பது. இவர், மதராஸ் பீரங்கிப்படையின் (MADRAS ARTILLERY) மூன்றாவது படைப்பிரிவில் பணியாற்றியவர்; பீரங்கியை இயக்கும் சிப்பாய்ப் பணியாளருள் (GUN LASCAR) ஒருவர். முருவாடா என்னுமிடத்தில் நிகழ்ந்த போரில், நெற்றியில் குண்டடி பட்டு இறந்தவர்.

கல்வெட்டின் பாடம் (ஆங்கில எழுத்துகளில் தமிழ் ஒலிப்பில்)

1 1857 வரு. நவ
2 ம்பற் மீ 6 தி மதறாஸ்
3 ஆட்டில்லெறி 3 ணா(ம்)
4 பட்டாளம் டி கம்ப[னி]
5 கன் லஸ்கற் ராமசாமி
6 முருவாடா சண்ட
7 யில் குண்டு நெத்தி
8 யில் பட்டு வெள்ளி

9 கிழமை காலம்பர
10 6 1/2 மணிக்கி மறண
11 ம் அடந்தார் சிலமான்
12 பாதையில் கொண்டுவந்
13 து அடக்கிலம் செய்தா
14 [ர்]கள் யிது அறியவும்
15 யிவருடைய தம்பி வேம்பிலி செய்[தார்]

கல்வெட்டு, எழுத்து நடைத் தமிழில் எழுதப்படாமல் பேச்சு வழக்குத் தமிழில் எழுதப்பட்டமையால் சில பிழைகளைக் கொண்டுள்ளது. இராணுவத்தின் பீரங்கிப்படையைக் குறிக்கும் ARTILLERY என்னும் சொல், ஆட்டில்லெறி என்றும், ஸ்லீமனாபாத் (SLEEMANABAD) என்னும் ஊர்ப்பெயர் சிலமான்பாதை என்றும் தமிழ்ச் சாயலில் எழுதப்பட்டுள்ளன. கல்வெட்டின் இறுதி வரி (வரி 15), இடப்பற்றாக்குறையின் காரணமாகக் கல்லறையின் பக்கவாட்டுப் பகுதியில் எழுதப்பட்டுள்ளது. கல்லறையைக் கட்டி அமைத்தவர், இறந்துபோன வீரரின் தம்பி வேம்பிலி என்பவர் ஆவார். தமிழகத்திலிருந்து நீண்ட தொலைவில் இருக்கும் வடநாட்டு ஊர் ஒன்றில் போரில் இறந்துபட்ட தம் அண்ணனுக்கு நினைவுக் கல்லறை எழுப்ப அவருடைய தம்பி முனைந்து செயல்பட்டமை ஒரு பெருஞ்செயல் எனில், கல்லறையில் தமிழ் மொழியில் எழுதிவைத்தமை தமிழ் மொழியின்பால் அவரும் அவருடைய தமையனும் கொண்டிருந்த பற்றுக்குச் சான்று.

இரண்டாம் கல்வெட்டு:

இரண்டாம் கல்வெட்டு குறிப்பிடும் தேதி 1858 நவம்பர் 29. முதல் கல்வெட்டு பொறிக்கப்பட்ட கல்லறைக்கு அருகிலேயே இருக்கும் இன்னொரு கல்லறையின் சிலுவையில் எழுதப்பட்ட கல்வெட்டு. 28-ஆம் படைப்பிரிவைச் சேர்ந்த FIRST MARTIN MADRAS NATIVE INFANTRY என்றழைக்கப்பட்ட தரைப்படையின் மூன்றாவது 'கம்பெனி'யில் பணியாற்றிய டேனியல் (DANIEL) என்னும் சிப்பாய் இறந்துபோன நினைவுக்கு எழுப்பப்பட்ட கல்லறையின் கல்வெட்டு. இவர் இறந்தது போரில் அல்ல; படை முகாமில் இருந்தபோது காய்ச்சல் கண்டு ஜன்னியால் இறந்துபோனதாகக் கல்வெட்டு குறிக்கிறது.

கல்வெட்டின் பாடம் (ஆங்கில எழுத்துகளில் தமிழ் ஒலிப்பில்)

1 1858
2 வரு. 28 வ
3 து றிசிமெண்
4 று மதறாஸ் நே

ற்றிவ் இன்பெ
ற்றி பஸ்ட்டு மாட்டின் 3 கம்
பனி சிலமான்பாத்துக்கு தவு
டு வந்து யிருக்கும்போது 3 கம்ப்
பனி சிப்பாயி டேனியலுக்கு காச்
சல் கண்டு ஜன்னி புறந்து மே மீ
29 தேதி சனிக்கிழமைக் கால
மே 5 1/2 மணிக்கி ஆ
ண்டவருடைய பர
கதி அடைந்தார்
அதே 3 கம்ப்ப
னியில் யிருந்த கி
றிஸ்த்தவர்களு
ம் டென்ற்று லாஸ்
க்கர் கிறாம்ம் மெக்க
ஏல் என்பவ
ரும் எல்லாரும் யே
கோப்பித்துக் கூ
[டி] யிந்தக் கல்ல
றை கட்டி வை
த்தோம்

இக்கல்வெட்டும் பேச்சு வழக்கில் எழுதப்பட்டுள்ளது. இவர் கிறித்தவர் என்பதால் முகாமில் உடனிருந்த கிறித்தவச் சிப்பாய்களும், ‘டெண்ட்’ லஸ்கர் கிரஹாம் மைக்கேல் என்பவரும் ஒன்று கூடிக் கலந்து பேசிக் கல்லறை எழுப்பியுள்ளனர். இக்கல்வெட்டில் டேனியலின் உறவினர் யாரும் தமிழகத்திலிருந்து வந்த செய்தி குறிக்கப்படவில்லை. கிறித்தவர் அனைவரும் ஒன்றுகூடிக் கல்லறை எழுப்பியது பற்றிக் கல்வெட்டில் குறிப்பிட்டாலும், தனியே ஒரு கிறித்தவர், கிரஹாம் மைக்கேல் என்பவர் சுட்டப்படுவதால், அவரை இறந்துபட்ட டேனியலுக்கு நெருங்கியவராகவோ ஊர்க்காரராகவோ கருத வாய்ப்புண்டு. இரண்டு கல்வெட்டுகளிலும், சொல்லின் முதலில் வருகின்ற “இ”கர உயிர் எழுத்து, “யி” என்னும் எழுத்தால் எழுதப்பட்டுள்ளதைக் காண்கிறோம்.

முதல் கல்வெட்டில்:
வந்து யிருக்கும்போது 3 கம்ப்
[ர்]கள் யிது அறியவும்
யிவருடைய தம்பி வேம்பிலி செய்[தார்]

இரண்டாம் கல்வெட்டில்:
னியில் யிருந்த கி
[டி] யிந்தக் கல்ல

இது போல் எழுதும் மரபு 16-17-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த விஜய நகரக் காலத்துக் கல்வெட்டுகளில் தொடங்கிப் பிற்காலக் கல்வெட்டிகளிலும் அமைந்திருப்பதைக் காணலாம். எடுத்துக்காட்டாகச் சென்னை பார்த்தசாரதிக் கோயில் கல்வெட்டு ஒன்றில் (க.வெ.எண் : 535, தெ.இ.க. தொகுதி-8 காலம் கி.பி. 1603 – விஜய நகர அரசர் வீர வெங்கடபதி தேவ மகாராயர்),

“. . . . . . . . தளிகை அமுது செயிறத்துக்காக . . . . சமைப்பித்த கெட்டி வராகன் 20 யிந்த வராகன் இருவதும் . . . . “

“ . . . . . தான சமையமும் யிப்படி யிவர்கள் சொன்னபடி . . . “
என எழுதப்பட்டுள்ளதைக் காண்க.

இரண்டாம் கல்வெட்டில், ஏழாம் வரியில், “சிலமான்பாத்துக்கு தவுடு வந்து யிருக்கும்போது” என்னும் தொடரில் உள்ள ”தவுடு” என்னும் சொல் தமிழ்ச் சொல்லா இல்லையா என்னும் ஐயம் எழுகிறது. ”தவுடு” என்னும் சொல், படை முகாமைக் குறிக்கும் ”தண்டு” என்னும் சொல்லுடன் தொடர்புள்ளதாக இருக்குமோ? அன்றி , “தவுடு” என்னும் இந்திச் சொல்லுடன் தொடர்புள்ளதாக இருக்குமோ? மொத்தக் கல்வெட்டு எழுத்துகளையும், மேற்படி நூலில், என். லக்ஷ்மிநாராயண் ராவ் அவர்கள் தமிழ் எழுத்தின் அச்சு வடிவத்தில் காண்பிக்கவில்லை; ஆங்கில எழுத்துகளைக் கொண்டு தமிழ் ஒலி பெயர்ப்பில் (TRANSLITERATION) காட்டியுள்ளார். கல்வெட்டின் படத்தை நூலில் பதிவு செய்யாததால் தமிழ்க் கல்வெட்டின் மூலப்பாடம் அறியப்படவில்லை.

செய்தியின் நம்பகத்தன்மை:

கல்வெட்டுகளில் உள்ள செய்திகளின் உண்மைத்தன்மை அல்லது நம்பகத்தன்மைக்கு லெப். கர்னல் இ. ஜி. பிதியன் ஆடம்ஸ் (Lt. COLONEL E.G. PHYTHIAN ADAMS) என்பவரின் கூற்று உறுதி பகர்கிறது. இவர், “THE MADRAS SOLDIER 1746-1946” என்னும் நூலை எழுதியுள்ளார். இந்நூலினை எழுதுவதற்காக இவர், இராணுவத் துறையின் ஆவணங்களை முழுதும் ஆய்வு செய்துள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது. மேற்குறித்த கல்வெட்டுகளைக் குறித்து இவரிடம் என். லக்ஷ்மிநாராயண் ராவ் அவர்கள் தொடர்புகொண்டதையும், ஆடம்ஸ் அவர்கள் கடிதம் மூலம் சில விளக்கக்கள் அளித்ததையும் என். லக்ஷ்மிநாராயண் ராவ் அவர்கள் குறிப்பிடுகிறார். ஆடம்ஸ் அவர்களின் குறிப்பிலிருந்து :

“மதராசைச் சேர்ந்த “FOOT ARTILLERY” பீரங்கிப் படைப்பிரிவுகள் மொத்தம் நான்கில் மூன்று ஆங்கிலேயர் பிரிவுகள்; ஒன்று இந்தியப் பிரிவு. முன்னதில் ஒவ்வொரு பிரிவிலும் நான்கு கம்பனிகள் என்னும் கணக்கில் பன்னிரண்டு கம்பனிகளும் பின்னதில் (இந்தியப் பிரிவு) பத்துக் கம்பனிகளும் ஆக மொத்தம் இருபத்திரண்டு கம்பனிகள். இப் பீரங்கிப்படைப்பிரிவுகள் ஜெனரல் விட்லாக் (GENL. WHITLOCK) தலைமையில் “மஹாகோஷல்” பகுதியில் இயங்கின. ”கன் லஸ்கர்” இராமசாமி இக்கம்பனிகளுள் ஒன்றில் பணியாற்றியவர் என்பதில் ஐயமில்லை. A முதலான ஆங்கில எழுத்துகளின் வரிசையால் பெயர் சூட்டப்பெற்ற கம்பனிகள் மொத்தம் இருபத்திரண்டும் T என்னும் எழுத்துகளுக்குள் அடங்கும். இராமசாமி “டி” கம்பனியில் பணியாற்றியதாகக் கல்வெட்டு குறிப்பதால், அவர் “D” கம்பனியிலோ “T” கம்பனியிலோ பணியாற்றினார் என்பது தெளிவு. கன் லஸ்கர் பதவியில் இருப்போர் ஐரோப்பியராயினும் இந்தியராயினும் பீரங்கிப் படைப்பிரிவைச் (ARTILLERY) சேர்ந்தவர் கணக்கிலேயே அமைவர்.

THE 28th MADRAS NATIVE INFANTRY என்னும் படைப்பிரிவானது MARTIN-KE-PALTAN என்னும் பெயரால் குறிக்கப்பெற்றது. கல்வெட்டில் 2-6 வரிகளில் குறிக்கப்பட்ட ‘28வது றிஜிமெண்று மதறாஸ் நேற்றிவ் இன்பெற்றி பஸ்ட்டு மாட்டின்’ என்பது மேற்குறித்த THE 28th MADRAS NATIVE INFANTRY - MARTIN-KE-PALTAN என்பதையே சுட்டுகிறது என்பது தெளிவு.”

முடிவுரை:

மேற்படிக் கல்வெட்டுகள் மூலம் இறந்துபட்ட இரு வீரர்களும் தாம் பணியாற்றிய படையின் நம்பிக்கைக்குரிய வீரர்களாகத் திகழ்ந்தனர் என்றோ, அல்லது, தாம் சார்ந்த நாட்டின் மேல் பற்றுக்கொண்டவராய்த் திகழவில்லை என்றோ இரு வேறு கோணங்களில் பேசப்படலாம். ஆனால், கல்வெட்டுகள் தமிழ் மொழியில் எழுதப்பட்டமை, சொந்த மண்ணை விட்டு எவ்வளவு தொலைவைக் கடந்து சென்றாலும் ஒரு தமிழ்ச் சிப்பாயின் உள்ளத்தில் தாய்த்தமிழின்பால் தீயாய்க் கனன்று நிற்கும் காதலை மெய்ப்பிக்கும் செயலெனவே நிலைத்து நிற்கும்.

தொடர்பு: துரை.சுந்தரம், கல்வெட்டு ஆராய்ச்சியாளர், கோவை.
doraisundaram18@gmail.com, அலைபேசி : 9444939156.

# 14. வெஸ்ட்மினிஸ்டர் அபே நினைவுச்சின்னத்தில் மலைக்கோட்டை

*– தேமொழி*

பிரித்தானியப் பேரரசின் மணிமகுடத்தை அலங்கரிக்கும் ஒரு சிறந்த அணிகலன் (India, the crown jewel of the British Empire) என இந்தியா பெயர் பெற்றது. இவ்வாறு குறிப்பிட்டவர் பெஞ்சமின் டிஸ்ரேலி (Benjamin Disraeli, 1874-81) என்ற இங்கிலாந்தின் பிரதமர். உலக வரலாற்றில், வளங்கள் பல கொண்ட, சிறப்பு மிக்க இந்தியா இங்கிலாந்துக்குக் கிட்டாமலே கைநழுவிப் போயும் இருக்கலாம். இந்தியாவை நவீன போர்க்கருவிகள் உதவிகொண்டு பிரான்ஸ் தங்கள் கட்டுப்பாட்டில் கொண்டு வந்து இன்று நாம் யாவரும் பிரஞ்சு மொழி பேசும் நிலைக்கும் தள்ளப்பட்டிருக்கலாம். ஆனால் அதற்கெல்லாம் முட்டுக்கட்டை போட்டவர் தனது ஐம்பதாவது வயதில் இங்கிலாந்தின் கிழக்கிந்திய வணிக நிறுவனத்தைப் பிரெஞ்சு வணிக அமைப்பின் தாக்குதல்களிலிருந்து காக்கும் பொறுப்பை ஏற்ற மேஜர் ஸ்ட்ரிங்கர் லாரன்ஸ். இவரே இந்தியாவின் இராணுவத்தை முதலில் கட்டமைத்து உருவாக்கியவர் என்ற பெருமை பெற்றவர். இந்திய ராணுவத்தின் தந்தை என்று ஆங்கிலேயர் இவரைக் குறிப்பிட்டார்கள் (The First English Commander-in-Chief, India – Major-General Stringer Lawrence).

இவர் உருவாக்கி வளர்த்தெடுத்த கிழக்கிந்தியக் கம்பெனியின் பாதுகாப்புப்படையே பின்னர் பிரிட்டிஷ் இந்தியாவின் இராணுவமாகவும், இந்திய விடுதலைக்குப் பிறகு இந்தியாவின் இராணுவமாகவும் ஆனது. இந்தியாவில் தனது ஆதிக்கத்தை விரிவுபடுத்தும் எண்ணத்துடன் திறம்படச் செயலாற்றிக் கொண்டிருந்த பிரஞ்சு ஆளுநர் டூப்ளே (Dupleix) வின் கனவைக் கலைத்து, பிரான்ஸ் நாட்டிலேயே டூப்ளே மதிப்பிழந்து போகும் அளவிற்குத் தக்காணத்தில் அதிரடியாகப் போர்களை இவர் மட்டும் நடத்தியிராவிட்டால் இங்கிலாந்து இந்தியாவில் கால் ஊன்றி இருக்கமுடியாது. நாம் படித்த வரலாற்று நூல்களில் இவர் முக்கியத்துவம் சிறப்பித்துக் கூறப்படவில்லை என்பது மட்டுமல்ல, இங்கிலாந்திலும் இவர் சாதனையை யாரும் சென்ற நூற்றாண்டிலேயே நினைவு வைத்திருந்ததாகத் தெரியவில்லை. அவ்வாறுதான் மேஜர் ஸ்ட்ரிங்கர் லாரன்ஸ் வரலாற்றை 20 ஆம் நூற்றாண்டின் துவக்கத்தில் நூலாக எழுதி வெளியிட்ட ஜான் பிட்டுல்ஃப் என்பவரும் கருதுகிறார் என்பதை அவர் நூலைப் படிக்கையில் அறிய முடிகிறது. வரலாற்றின் திருப்புமுனையை உருவாக்கிய ஒருவர் ஏனோ யாராலும் அறியப்படாமலே இருந்துவரும் நிலை தொடர்கிறது.

பிரிட்டிஷ் இந்தியா என்பதன் துவக்கத்தை ராபர்ட் கிளைவ் என்பதிலிருந்தே தொடக்கம் என்றுதான் வரலாற்றில் கூறப்படுகிறது. ஆனால் தனது கீழ் பணியாற்றிய இராபர்ட் கிளைவ் என்ற துடிப்பு மிக்க போர் வீரரை அடையாளம் கண்டதுடன், தக்க வகையில் அவரைப் பயன்படுத்திக் கொண்டவர் மேஜர் ஸ்ட்ரிங்கர் லாரன்ஸ். அவர் இந்தியாவில் தான் நடத்திய போர்களைப் பற்றி எழுதியிருந்தாலும் ('A Narrative of Affairs on the Coast of Coromandel from 1730 to 1764' — Stringer Lawrence) தனது பங்களிப்பைப் பெரிதுபடுத்தி விவரிக்க முற்படவில்லை. கிளைவிற்கு அவரது பணியைப் பாராட்டி அரசு வைரம் பதித்த வீரவாளைப் பரிசளித்துப் பெருமைப்படுத்த முற்பட்டபொழுது, கிளைவ் அதனை ஏற்க மறுத்து மேஜர் ஸ்ட்ரிங்கர் லாரன்ஸ்சுக்கும் பரிசளித்தாலே தானும் ஏற்றுக் கொள்ளமுடியும் என்று கூறும் அளவிற்குத்தான் அன்றே நிலைமை இருந்திருக்கிறது.



இவர் பங்களிப்பைப் பாராட்டும் விதத்தில் பதவி உயர்வும் அளிக்கப்படாமல், நீண்டகாலம் பணிபுரிந்த அனுபவம் என்ற அடிப்படையில் மற்றொருவரைத் தலைவராக அறிவித்த பொழுது மேஜர் ஸ்ட்ரிங்கர் லாரன்ஸ் வெறுப்படைந்து அவர் கீழ் ஒத்துழைக்க மறுத்த நிலையும் இருந்துள்ளது. இந்தியாவில் சுமார் இருபது ஆண்டுகள் அவர் பணியாற்றிய காலத்திலேயே இனி இந்தியாவிற்கு வரப்போவதில்லை என்ற வெறுப்பில் எடுத்த முடிவுடன் இருமுறை இங்கிலாந்து சென்று மனம்மாறி பின்னர் மீண்டும் திரும்பி வந்துள்ளார். இறுதியாக 1766இல் பணி ஓய்வு பெற்றுச் சென்று அவர் அங்கு மறைந்திருக்கிறார். காலம் முழுவதும் கிளைவும் இவரும் நல்ல நண்பர்களாகவும் இருந்துள்ளார்கள். கிளைவ் செய்த செயல்கள் தகுந்த முறையில் பாராட்டு பெற வேண்டும் என்பதில் இவர் கவனமாக இருந்துள்ளார். கிளைவும் இவரை மதித்து இவருக்கு நல்ல ஓய்வூதியம் கிடைக்க அவரால் ஆன வகையில் உதவியிருக்கிறார்.



மேஜர் ஸ்ட்ரிங்கர் லாரன்ஸ் மறைவுக்குப் பிறகு இங்கிலாந்தின் உலகப் புகழ்பெற்ற வெஸ்ட்மினிஸ்டர் அபே தேவாலயத்தின் வடக்குப் பகுதியில், பெருமைக்குரியவர்களுக்காக நினைவுச்சின்னம் அமைக்கும் இடத்தில் இவருக்கும் ஒரு நினைவுச்சின்னம் கிழக்கிந்தியக் கம்பெனியால் அமைக்கப்பட்டது. வில்லியம் டைலர் என்ற சிற்பி உருவாக்கிய நினைவுச்சின்னத்தில், வெண்மை நிறத்தில் மேஜர் ஸ்ட்ரிங்கர் லாரன்சின் மார்பளவு சிலை அமைக்கப்பட்டு அதன் கீழே ஒரு தேவதையும் ஒரு பெண்ணும் இருபுறத்திலும் அமர்ந்திருக்க, கிழக்கிந்தியக் கம்பெனியின் குறியீடாக அவருக்கு இடப்புறமுள்ள பெண் மேஜர் ஸ்ட்ரிங்கர் லாரன்சைச் சுட்டிக் காட்டும்வகையில் நினைவுச்சின்னம் அமைந்துள்ளது. சிலைக்குக் கீழுள்ள பீடத்தில் மேஜர் ஸ்ட்ரிங்கர் லாரன்சிற்குரிய சின்னம் (Coat of arms) பொறிக்கப்பட்டிருக்கும், அதற்கும் கீழே பெண்ணின் முழங்கால் அருகில் உள்ள செவ்வக அமைப்பில் திருச்சி மலைக்கோட்டையின் புடைப்பு உருவம் செதுக்கப்பட்டு அதன் கீழ் “திருச்சினாபோலி” (Trichinopoly) என்று திருச்சிராப்பள்ளி ஆங்கிலேயர் காலத்தில் அவர்களது உச்சரிப்புக் குறைபாட்டுடன் அழைக்கப்பட்ட விதத்தில் குறிக்கப்பட்டிருக்கும். இடப்பக்கம் உள்ள தேவதையின் கையில் உள்ள கேடயத்தில் இரண்டாம் கர்நாடகப் போரில் (மே 1753 – அக்டோபர் 1754) மேஜர் ஸ்ட்ரிங்கர் லாரன்ஸ் ஆர்காட்டு நவாப் மகமது அலிகான் – வாலாஜாவுக்கு ஆதரவாகப் பிரெஞ்சுக்காரர்களுடன் போரிட்டு திருச்சியைக் கைப்பற்றியது குறிப்பிடப்பட்டிருக்கும்.

“Born March 6, 1697; died January 10, 1775”
“For Discipline Established, Fortresses Protected, Settlements Extended, French and Indian Armies Defeated, and Peace Concluded in the Carnatic”

அதற்கும் கீழுள்ள கருப்பு பளிங்கு பீடத்தில்;

“Erected by the East India Company to the memory of Major General Stringer Lawrence in testimony of their gratitude for his eminent services in the command of their forces on the coast of Coromandel from the year MDCCXLVI to the year MDCCLXVI”.

எனப் பொறிக்கப்பட்டுள்ளது.

மேஜர் ஸ்ட்ரிங்கர் லாரன்ஸ் திருச்சியைக் கைப்பற்றி சாந்தா சாகிப் (Chunda Sahib) பின் கதையை முடித்து, பிரெஞ்சு ஆளுநர் டூப்ளே வின் ஆதிக்கத்தை வளரவிடாமல் தடை செய்யும் வரை கிழக்கிந்தியக் கம்பெனியின் இந்திய எதிர்காலம் நம்பிக்கை தரும் வகையில் அல்லாமல் இந்தியாவில் ஆங்கிலேயர்களின் நிலை வெறும் நூலிழையில் ஒட்டிக்கொண்டிருந்தது என்பதுவே மறுக்கமுடியாத உண்மை. அந்தச் சூழ்நிலையைச் சற்று விரிவாகவே காண்போம்.




***Major General Stringer Lawrence memorial at Westminster Abbey***

*Image © 2019 Dean and Chapter of Westminster*

18 ஆம் நூற்றாண்டின் துவக்கத்தில், வடக்கில் மன்னர் ஔரங்கசீப்பின் (கி.பி. 1707) மறைவுக்குப் பிறகு முகலாய பேரரசின் ஆட்சியாளர்கள் திறமை குறைந்தவர்களாக இருந்த காரணத்தால் பல சிற்றரசுகள் தனியாட்சி அரசுகளாக தங்களை அறிவித்துக் கொண்ட காலம் இந்தியாவின் போராட்டங்கள் நிறைந்த காலத்தின் துவக்கம். தக்காணத்தில் மராட்டியர்களுக்கும், தன்னாட்சி அமைத்துக் கொண்ட ஆர்காட்டு நவாபுக்கும் இடையில் அரசுரிமைப் போட்டி. தன்னாட்சி செய்த ஹைதராபாத் நிஜாம் அரச குடும்பத்தில் வாரிசுரிமைப் போட்டி. இக்காலத்தில் வாரிசுரிமைச் சச்சரவுகளே பெரும்பாலான உள்நாட்டுப் போர்களுக்குக் காரணமாகவும் அமைந்தன.

ஹைதராபாத் நிஜாமிடம் இருந்து 1713 இல் தன்னைவிடுவித்துக் கொண்டு ஆர்காட்டை நவாப் தோஸ்த் அலிகான் ஆட்சி செய்கிறார். மராட்டியர்கள் கி.பி. 1741இல் படையெடுத்து வந்து ஆர்க்காட்டு நவாப் தோஸ்த் அலிகானைக் கொன்று அவருடைய மருமகனான சந்தாசாகிபைச் சிறை பிடித்துச் செல்கிறார்கள். இதுதான் தொடர் போர்களையும், கர்நாடகப் பகுதியில் ஐரோப்பியர் ஊடுருவலையும் துவக்கி வைக்கிறது. தோஸ்த் அலிகானின் மகனும் தொடர்ந்து உறவினர் ஒருவரால் கொலையுண்டு மாண்டு போக, ஹைதராபாத் நிஜாம் அன்வாருதீன் என்பவரை 1744ல் ஆர்காட்டின் நவாப் ஆக்குகிறார்.

உள்நாட்டுச் சண்டை போதாதென்று வணிகம் செய்ய வந்த பிரெஞ்சு மற்றும் ஆங்கிலக் கிழக்கிந்திய வணிக நிறுவனங்களுக்கு இடையிலும் போர் நிகழ்ந்த காலம் அது. ஆங்கில கிழக்கிந்தியக் கம்பெனியின் இடையூற்றை நிறுத்தச் சொல்லி பிரெஞ்சு ஆளுநர் டூப்ளே ஆங்கில அரசின் உதவியை நாடுகிறார். ஆங்கிலேய அரசு நாட்டுக்குள் அவர்களின் கிழக்கிந்திய வணிக நிறுவனம் போரில் இறங்காது. ஆனால், கடலில் வணிக கப்பல்களுக்கு இடையே ஏற்படும் சண்டைகள் தங்கள் கட்டுப்பாட்டில் இல்லை எனக் கூறிவிடுகிறது. ஆங்கிலேயக் கப்பல்கள் பிரெஞ்சு கப்பல்களைத் தாக்குகிறது. வெறுப்படைந்த டூப்ளே ஆங்கிலேயரின் சென்னை கோட்டையைத் தாக்கி கைப்பற்றுகிறார் (1746). ஆங்கிலேயரிடம் முறையான படை என ஒன்றும், பயிற்சி அளிக்கப்பட்ட போர் வீரர்கள் என்றும் எவரும் இல்லை. அவர்களின் வணிக நிறுவனம், தொழிற்சாலை போன்றவற்றின் காவலுக்காக வைத்திருக்கும் சில ஐரோப்பியக் காவலாளிகளையும், உள்ளூர் காவலாளிகளையும் ஒருவாறு ஒருங்கிணைத்து பிரெஞ்சுப்படையைத் தாக்கி தோல்வி அடைகிறார்கள். ஆர்காட்டு நவாபின் உதவியை நாடுகிறார்கள். அவர் அனுப்பி வைத்த படையும் பிரெஞ்சுப் படையுடன் போரிட்டுத் தோல்வியடைந்து திரும்பிவிடுகிறது.

இதனால் ஆர்காட்டு நவாபை தங்கள் எதிரி என அடையாளம் காணுகிறார் டூப்ளே. வெற்றி பெற்ற உற்சாகத்தில் இருக்கிறார். ஆனால் ஆஸ்திரிய உரிமைப் போட்டி காரணமாக ஏழாண்டுக் காலம் (கி.பி. 1742-1748) ஐரோப்பாவில் போரில் ஈடுபட்டிருந்த பிரான்சும் இங்கிலாந்தும் ஒரு உடன்படிக்கை செய்து கொண்டு, இருநாட்டு வணிக நிறுவனங்களும் இந்தியாவில் தங்களுக்குள் எந்தப் போரிலும் ஈடுபடக்கூடாது, அவரவர் கைப்பற்றிய இடங்களைத் திரும்ப ஒப்படைக்க வேண்டும் என்ற ஒப்பந்தம் செய்து கொள்கிறார்கள். அந்த உடன்படிக்கையின்படி பிரெஞ்சு ஆளுநர் டூப்ளே சென்னை கோட்டையை ஆங்கிலேயர் வசம் திருப்பி ஒப்படைத்தாலும் வெற்றி பெற்ற படை தன்னிடம் இருக்க உள்நாட்டில் விரிவாக்கம் செய்ய ஆவலுடன் காத்திருக்கிறார். பிரெஞ்சு நிறுவனம் நல்ல படையையும் அதிக எண்ணிக்கையில் வீரர்களையும் கொண்டிருந்த காலம் அது. இங்கிலாந்து தங்கள் வணிக நிறுவனத்தின் பாதுகாப்பிற்கு ஸ்ட்ரிங்கர் லாரன்சை 1747 இல் இந்தியாவிற்கு அனுப்புகிறார்கள். கடலூர் அருகே ஆரியங்கோப்பு, தஞ்சையில் தேவிகோட்டை போன்ற சில போர்களுக்குப் பிறகு அவர் 1750 முடிவில் இங்கிலாந்து திரும்பிவிடுகிறார்.

ஹைதராபாத் நிஜாமின் மறைவுக்குப் பிறகு அவரது மகன் நசீர் ஜங்கும் பேரன் முசாஃபர் ஜங்கும் அரசுரிமைப் போட்டியில் இறங்குகிறார்கள். நசீர் ஜங்கும் ஆர்க்காடு நவாப் அன்வாருதீனும் பிரித்தானிய ஆதரவைப் பெற்றிருந்தனர். ஆங்கிலேயருக்கு உதவுவதற்காக பிரெஞ்சுப்படையை எதிர்த்த ஆர்க்காடு நவாபுக்கு ஆங்கிலேயர் ஆதரவு இருக்கிறது. பிரெஞ்சு உதவியுடன் பணம் கொடுத்து விடுதலைபெற்ற சாந்தா சாகிப் தனது மாமனார் ஆட்சி செய்த ஆர்க்காடு நவாப் உரிமை தனது என்று கூறி பிரெஞ்சு உதவியுடன் அன்வாருதீன்கானை எதிர்க்கிறார்.

ஆம்பூரில் நடந்த போரில் 1749இல் அன்வாருதீன் கொல்லப்படுகிறார். சாந்தா சாகிப் தன்னை ஆர்க்காடு நவாபாக அறிவித்துக் கொள்கிறார். ஆங்கிலேயர் ஆதரவளித்த இருவருமே கொல்லப்படுகிறார்கள். ஹைதராபாத் நிஜாம் என உரிமை கோரிய நசீர் ஜங்கும் கொல்லப்படுகிறார். ஆர்க்காட்டு நவாப் அன்வாருதீன் மகன்களில் ஒருவரும் கொல்லப்படுகிறார். மற்றொருவர் மகமது அலிகான்-வாலாஜா திருச்சிக்குத் தப்பிச் சென்று ஆங்கிலேயர் உதவி கோருகிறார். சந்தா சாகிபும் முசாஃபர் ஜங்கும் முறையே ஹைதராபாத் நிஜாமாகவும், ஆர்காட்டு நவாபாகவும் பதவியேற்கின்றனர்.

ஆனால் 1751 இல் ராபர்ட் கிளைவ் தலைமையிலான பிரித்தானியப் படைகள் ஆர்க்காட்டைக் கைப்பற்றி சாந்தாசாகிபையும் அவரது மகனையும்

போரில் தோற்கடிக்கிறார்கள். ஆர்க்காடு நவாபாக யார் பதவி ஏற்பது என்ற வாரிசுரிமைப் போர் திருச்சிக்கு நகர்கிறது.

மார்ச் 14, 1752 அன்று இந்தியாவிற்கு மீண்டும் அனுப்பப்பட்ட ஸ்ட்ரிங்கர் லாரன்ஸ், கிளைவ் தலைமையில் நடக்கவிருந்த போருக்குத் தலைமையை ஏற்றுக் கொள்கிறார். வந்திறங்கிய மூன்றாம் நாளே படையை திருச்சி நோக்கி நடத்திச் செல்கிறார். இரண்டாம் கர்நாடகப் போராகப் பொன் மலைப் போர் (Battle of Golden Rock) என்பது 1753, ஜூன் 26 இல் நிகழ்ந்தது.

திருச்சியில் ஆங்கிலேயரிடம் புகலிடம் பெற்ற ஆர்க்காட்டு நவாப் மகமது அலிகான்-வாலாஜாவுக்கு ஆதரவாக, தஞ்சையை ஆண்ட மராட்டிய மன்னர் பிரதாப் சிங், மராட்டியப் படைத்தளபதி முராரி ராவ், ஸ்ட்ரிங்கர் லாரன்சின் தலைமையில் கிளைவ், டால்ட்டன் போன்ற தளபதிகளைக் கொண்ட ஆங்கிலேயப்படை என யாவரும் திருச்சியை மையமாகக் கொண்டு போரில் ஈடுபட்டனர்.

ஆர்காட்டு நவாப் பதவிக்கு உரிமை கோரும் சாந்தா சாகிப், ஹைதராபாத் நிஜாம் முசாஃபர் ஜங், மைசூர் அரசின் படைத்தளபதி ஹைதர் அலி, ஆகியோருடன் லா என்ற பிரெஞ்சு தளபதியின் தலைமையின் கீழ் பிரெஞ்சு ஆளுநர் டூப்ளேயின் படை களத்தில் இறங்கியது. அவர்கள் ஆங்கிலேயரின் திருச்சி புறக்காவல் நிலையத்தைத் தாக்கினார்கள்.

திருவரங்கத்தில் பிரெஞ்சுப்படை பாசறை அமைத்தது. பொன்மலை, காஜாமலை, திருவெறும்பூர் எறும்பீஸ்வரர் மலை, உய்யக்கொண்டான் திருமலை எனத் திருச்சியிலும் அதன் சுற்றுவட்டாரங்களிலும் அனைத்திலும் ஆங்கிலேய மற்றும் பிரெஞ்சுப்படைகள் ஒன்றையொன்று தாக்கிக் கொண்டன. காவிரியைக் கடந்து வடகரை சென்று பிரெஞ்சுப்படையைச் சுற்றிவளைக்கலாம் என்ற கிளைவின் திட்டத்தை ஸ்ட்ரிங்கர் லாரன்ஸ் ஏற்று அவரை அனுப்பி வைக்கிறார்.

காவிரியைக் கடந்து வடகரையில் சமயபுரத்தில் கிளைவ் பாசறை அமைத்து பிரெஞ்சுப்படையைச் சுற்றி வளைக்கிறார். டூப்ளே உதவிக்கு அனுப்பிய பிரஞ்சுப் படையையும் தடுத்து நிறுத்தி அவருடனான தொடர்பையும் துண்டிக்கிறார்கள். போரின் இறுதியில் ஆங்கிலப்படை வெற்றி கொள்கிறது. சரணடைந்து தப்பிச்செல்லப் பேரம் பேச முனைந்த சாந்தா சாகிப் கைது செய்யப்பட்டு, 1752 இல் தஞ்சையின் மராட்டியப் படைத்தலைவரால் தலை துண்டிக்கப்பட்டுக் கொல்லப்படுகிறார். அவரது உடல் திருச்சி நத்தர்ஷா பள்ளிவாசல் பகுதியில் அடக்கம் செய்யப்படுகிறது.

ஆங்கிலேயர்கள் மீட்டுத் தந்த ஆர்க்காட்டின் நவாபாக அன்வாருதீன் மகன் மகமது அலிகான் – வாலாஜா 1795 வரை ஆள்கிறார். ஆங்கிலேயப்படை உதவிக்கான செலவைத் திருப்பிக் கொடுக்க வேண்டி, தனக்குப் பாளையக்காரர்கள் மூலம் கப்பமாகக் கொடுக்கப்படுவதில் ஆறில் ஐந்து பகுதி வரியை வசூலித்துக் கொள்ளும் உரிமையை ஆங்கிலேயருக்கு விட்டுக் கொடுக்கிறார் ஆர்க்காட்டு நவாப் (அதை ஆங்கிலேயருக்குச் செலுத்த மறுத்த கட்டபொம்மன் போரின் இறுதியில் ஆங்கிலேயரால் தூக்கிலிடப்படுகிறார் என்பது தமிழகம் நன்கு அறிந்த வரலாறு).

பிரஞ்சு ஆளுநர் டூப்ளே வின் செயல்பாட்டில் நம்பிக்கையிழந்த பிரான்ஸ் அவரைத் திரும்ப அழைத்துக் கொள்கிறது. ஆங்கிலேயரின் கிழக்கிந்திய கம்பெனியின் வணிகம் இராணுவ கட்டமைப்பால் இந்தியாவில் விரிவடைகிறது. உள்நாட்டுக் கலகங்களைச் சாதகமாக்கிக் கொண்டு, ஒருசில அரசுகளைத் தவிர்த்து, அடுத்து வந்த ஒரு நூறாண்டுக்குள் இந்தியாவின் பெரும்பான்மையான இடங்கள் ஆங்கிலேயரின் கட்டுப்பாட்டில் வந்துவிடுகிறது. இந்தவகையில் இங்கிலாந்தின் வெற்றிக்கு மேஜர் ஸ்ட்ரிங்கர் லாரன்ஸ் திருச்சியில் பிரெஞ்சுப்படைகளை முறியடித்த நிகழ்வே துவக்கம் எனக் கூறலாம்.

References:


• Westminster Abbey – https://www.westminster-abbey.org/abbey-commemorations/commemorations/stringer-lawrence

• Stringer Lawrence, the Father of the Indian Army, John Biddulph, J. Murray, 1901

• The Monthly Review, Volume 46, Ralph Griffiths, George Edward Griffiths, R. Griffiths, 1772

• Historical Sketches of the South of India, in an Attempt to Trace the History of Mysoor, Etc, 'Volume 1', Mark Wilks, Higginbotham and Company, 1869

• The chronology of modern India for four hundred years from the close of the fifteenth century, A.D. 1494-1894, James Burgess, 1913

• Stringer Lawrence, by Henry Manners Chichester, Dictionary of National Biography, 1885-1900, Volume 32

• தமிழகத்தில் நடைபெற்ற போர்கள், http://www.tamilvu.org/courses/degree/a031/a0314/html/a0314113.htm



நன்றி: சிறகு - http://siragu.com/வெஸ்ட்மினிஸ்டர்-அபே-நினை/



தொடர்பு: தேமொழி (jsthemozhi@gmail.com)

# 15. மொழியியல் நோக்கில் பெண்மொழி

*– முனைவர் க.பசும்பொன்*

இக்கட்டுரை பெண், ஆண் மொழி வேறுபாடுகளைக் கட்டமைக்க முற்படுகிறது.

பெண்களின் போராட்டம் சமூகத்தின் சலுகைகளைப் பெற அல்ல. அவர்களுக்கான அடிப்படை உரிமைகளைப் பெற என்ற பார்வை உறுதிப்படுத்தப்படுகிறது. தாய்மை உணர்வோடு வாழ்வதற்கும் தாய்மை கிரீடத்தைச் சுமப்பதற்கான வேறுபாட்டையும் தெளிவுபடுத்துகிறது.

நான் சரி என்று நம்பிய வரிகளை வெட்டினார்கள். காரணம் பெண்ணுக்கென்று ஒரு மொழி உண்டு என்ற வாதத்தை ஏற்றுக் கொள்வதில் பலருக்குச் சிக்கல் இருந்ததுதான். ஆனால் இப்பொழுது அவள் தானாக சிந்திக்க ஆரம்பித்திருக்கிறாள். அவள் சிந்தனைக்குச் சொல் வடிவம் கொடுக்க ஏற்கனவே புழக்கத்தில் உள்ள சொற்களை அப்படியே பயன்படுத்த முடியாது அவள் உள்ளுக்குள் உறைந்து மொழியைச் செதுக்கி செதுக்கி அவளால் தான் வெளியே வடிக்க முடியும். மொழி என்பது வெறும் எழுத்துக்களால், சொற்களால் ஆனது மட்டுமில்லை. மொழிக்கு உணர்வு உண்டு. பாலின வேறுபாடுகளைச் சுட்டும் பொதுவான வழக்கமான மொழி வெளிப்பாடுகள் உடலின் பல்வேறு இயக்கங்களையே மையமாகக் கொண்டுள்ளன. நமது உடலின் தோற்றம், ஆண், பெண் என்பதை வெளிக்காட்டும் விதமாக நாம் செய்பவை, சொல்பவை நமது உடல் சார் அனுபவங்கள் பாலுறவு, விளையாட்டும், சமயமும் கோரும் பிரத்தியேக உடல்சார் செயல்பாடுகள் ஆகியவற்றை உள்ளடக்கிய அனுபவங்கள், உடல் மீதான கட்டுப்பாடுகள், ஒழுக்கம் பற்றிய விதிமுறைகள் நியதிகள் ஆகியவற்றை மையமிட்டே பாலினம் சார்ந்த மொழியானது செயல்படுகிறது, என்கிறார்கள் வ.கீதா மற்றும் கிறிஸ்டி சுபத்ரா.

மொழியியலில் கிளை மொழி ஆய்வுகள் ஆண் பெண் பேச்சில் வேறுபாடு இருப்பதை எடுத்துரைத்துள்ளன. இவை சாதி, சமயம், வயது, ஆண், பெண் போன்றவற்றில் பேச்சு வழக்கில் வேறுபாடுகளுள்ளன என்று ஆய்வுகள் தெரிவிக்கின்றன. கடந்த ஐம்பது ஆண்டுகளாக மானிடவியல் அறிஞர்கள், மொழியியல் அறிஞர்கள், உளவியல் அறிஞர்கள், மற்றும் தத்துவவியல் அறிஞர்கள் ஆண், பெண் பேச்சு வேறுபாடு குறித்து ஆராய்ந்து வருகின்றனர்.

இலக்கண மற்றும் ஒலிப்புக் கூறுகளில் ஆண், பெண் பேச்சு வேறுபாடு இருப்பதாக ரொமன்ஸ் மொழி, யானா மொழி, குரேல்வென்ட்ரா மொழி மற்றும் மொல்க்ஜியோன் மொழிகளில் ஆதாரங்கள் இருக்கின்றன என்று (பிரான்சில் எக்கா 1972) கூறுகிறார். பெண் பேச்சில் ஆண்களிடம் வேறுபட்டு சில மொழிக் கூறுகளைப் பயன்படுத்துகின்ற தன்மை அமெரிக்க ஆங்கில மொழியில் டெராய்ட் நீக்ரோ பேசும் பேச்சு (Wolform, 1969), நியூ யார்க் கிளைமொழி (லேபோ, 1966), இங்கிலாந்து கிளைமொழி (ஃபிசல்சர் 1958), நார்விச் கிளைமொழி (பீட்டர் டிரட்சில்) தேசிய மொழி மற்றும் கேஸ்வவுச்சர் மொழி (கேப்வெல்) ஆகியவற்றில் வேறுபாடு இருப்பதாக மொழியியல் அறிஞர்கள் கூறுகின்றனர்.

கலிபோர்னியா யானா மொழியில் ஆண் பெண் பேச்சு வேறுபடுகின்றது. யானா மொழியில் இரண்டு வகையான வடிவங்கள் உண்டு. ஒன்று முழு வடிவம் (Full form) மற்றொன்று குறை வடிவம் (Reduced form) முழு வடிவம் மொழிக் கூறை ஆண்களுக்கு ஆண்களிடம் பேசும்பொழுது பயன்படுத்துகின்றனர். குறை வடிவ மொழிக்கூறை பெண்களுக்குள் பேசுகின்றனர்.

இந்திய ஆசிய மொழியான பெங்காலியில் ஆண்கள் மொழிக்கு முதலில் வருகின்ற 'ந' சரத்திற்குப் பதிலாக 'ல'கரத்தை அடிக்கடி பயன்படுத்துகின்றனர். (வார்டு காப் 1986 : 304).

தமிழகத்தில் மீனவப் பெண்களின் பேச்சு வழக்கில் ஆண்களின் பேச்சு வழக்கிலிருந்து ஒலிப்பு முறை வேறுபட்டு இருப்பதை ராஜகுமாரி (1979) குறிப்பிட்டுள்ளார்.

ஆதிதிராவிடர் பேச்சு வழக்கிலும் ஆண், பெண் வழக்கு வேறுபாடுகள் காணப்படுவதாக ஆரோக்கியநாதன் (1986) சுட்டிக்காட்டுகிறார். பெண்களின் பேச்சு வழக்கில் ஒருதனியான ஒலியமுத்தமும், வாக்கிய முடிவில் ஏறி இறங்கும் ஒலியமுத்தமும் காணப்படுகின்றன.

'ச'கர ஒலியைச் 'ச்சகரமாக' ஒலிப்பது பெண்களின் பேச்சு வழக்கில் அதிகமாகக் காணப்படுகின்றது. சில குறிப்பிட்ட வாக்கியங்களைப் பெண்கள் மட்டுமே அதிகம் பயன்படுத்துகின்றனர் என்று ஆரோக்கியநாதன் சுட்டிக்காட்டுகிறார்.

பெண்கள் மட்டுமே பேசும்மொழி – பெண்ணின் மொழி ஒன்று இருந்திருக்கிறது என்பதற்கு ஆதாரம் கிடைத்துள்ளது. ஏறத்தாழ நானூறு ஆண்டுகளுக்கும் மேலாகச் சீனாவில் பெண்கள் தங்கள் அக உணர்வுகளைப் பிற பெண்களுடன், தம் தோழியருடன் பகிர்ந்து கொள்ள அவர்களுக்கே உரிய ஒரு

மொழியைப் பயன்படுத்தும் மரபு இருந்தது. இம்மொழி ஆண்களுக்குப் புரியாது. சீன நாட்டில் ஜியாங் யாங் எனும் இடத்தில் இம்மொழி உருவாயிற்று. இதை நுஷூ(Nushu) எனக் குறிப்பிடுகின்றனர்.

பெண்களின் மொழிப் பயன்பாட்டில் வேறுபாடுகள் இருப்பதாகக் குறிப்பிடுகிறார் ராபின் லேகாப் (1975), மொழியும் பெண்களுக்கான இடமும் என்ற நூலில் பெண்மொழி ஓர் அழுத்தம் இல்லாதது, உடன்பாட்டுக் கேள்விகளை அடிக்கடி கேட்பது, அதிகமான ஆடைகள், அதிக மரியாதைச் சொற்கள் ஆகியவற்றைப் பயன்படுத்துவது, மொழியை எளிமையாகச் சரளமாகப் பயன்படுத்த முடியாமை மற்றும் முற்றுப் பெறாத வாக்கியங்கள் அதிகம் இருப்பது போன்ற கூறுகளைக் கொண்டது எனச் சுட்டுகிறார். (எல்.இராமமூர்த்தி, பெண்ணியமும் மொழி நிர்ணயமும் ப.7).

பேராசிரியர் மீனாட்சி முருகரத்தனம், பழமொழிகளை அதிகம் கையாளுதல், சுற்றி வளைத்துப் பேசுதல், சாடை பேசுதல் போன்றவற்றையும் பெண்ணின் மொழிக் கூறுகள் என்கிறார்.

சங்க இலக்கியப் பாடல்களில் மூதின்முல்லை என்னும் துறையைச் சார்ந்த பாடல்கள் ஆண்பாற் புலவர்களும் பெண்பாற் புலவர்களும் பாடியுள்ளனர். மொழியியல் அடிப்படையில் இவற்றை ஆராய்ந்த இராமமூர்த்தி பால் வேறுபட்டால் மொழிக் கூறுகள் மாறுபடுகின்றன என்றார். ஆ, உ வின் முடிவுகளாகச் சில பால் பாகுபாடு காட்டும் கூறுகளையும் சுட்டுகிறார்.

சங்கப் பெண்பாற் புலவர்களின் மொழியில் வினைமுற்றுகள் அதிகம் இடம் பெற்றுள்ளன. ஆனால் ஆண்பாற் புலவர்களின் மொழியில் எச்சங்களின் பயன்பாடு அதிகம் இடம் பெற்றுள்ளன. வினை முற்றுகளில்,

கெடுக, வெல்க
களந் தொழிந்த தன்னே
ஆண்டு பட்டனவே
பரவும், எய்தும்

என்னும் வியங்கோள் வினைமுற்றுகள் பெண்பாற் புலவர்கள் பாடிய பாடல்களில் உள்ளன. அதே போல பெண்பாற் புலவர்கள் மொழிகளில் தருதல், ஆக்குதல், கொடுத்தல், பெருக்குதல், மூதின் மகளிராதல் போன்ற தொழிற்பெயர்களும் அதிகம் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பார் ரேணுகாதேவி (2013 : 155). எச்சங்கள் பொதுவாக வினையெச்சம், பெயரெச்சம் என இரு வகைப்படும். எச்சங்களின் பயன்பாட்டிலும் வேறுபாடுகள் உள்ளன. பெண் மொழியில் வினையெச்சங்கள் அதிகம்

பயன்படுத்தப்படுகின்றன. ஆண்பாற் புலவர்களால் பெயரெச்சங்களே அதிகம் பயன்படுத்தப்படுகின்றன.

பெயரடைப் பயன்பாட்டையும் ஒருவித மொழி ஆளுமையுடன் வெளிப்பாடாகக் கருதலாம் என்கின்றனர் ஆய்வாளர்கள்.

புதுச்சேரி மாநில மீனவர்களின் கிளை மொழியை கட்டுரையாளர் ஆய்வு மேற்கொண்டபோது வெட்டியான் என்ற சொல்லாட்சி பெண்கள் பயன்படுத்துகின்றனர். இது தரப்படுத்தப்பட்ட தமிழ்ச் சொல்லாகும். பறையன் என்கிற சொல்லை ஆண்கள் அதிகமாகப் பயன்படுத்துகின்றனர். பெண்கள் இச்சொல்லைக் குறைவாகப் பயன்படுத்துகின்றனர்.

மேளம் (மோளம்), மேடு (மோடு), திண்ணு (துண்ணு), பிள்ளை (புள்ளே) போன்றவை தரப்படுத்தப்பட்ட சொற்கள், அடைப்புக்குறிக்குள் இருக்கும் சொற்கள் தரப்படுத்தப்படாத சொற்கள், மீனவப் பெண்கள் ஆண்களைவிட மேற்குறிப்பிட்ட தரப்படுத்தப்பட்ட சொற்களை அதிகமாகப் பயன்படுத்துகின்றனர்.

தொள்ளாயிரம் (தூளயிரம்), நல்லவரு (நெல்லவரு), சரியில்லெ (செரியில்லே), கொத்தனாரு (கொலுத்துகாரு), தொடப்பம் (தொடப்பக்கட்டே), மண்ணென்ன (மரஎண்ணெ), அதிகமாகவே (மிச்சமாவே) ஆகிய சொற்கள் தரப்படுத்தப்பட்ட சொற்கள், அடைப்புக்குறிக்குள் உள்ள சொற்கள் தரப்படுத்தப்படாத சொற்கள். அடைப்புக் குறிக்கு வெளியே உள்ள சொற்களைப் பெண்களைக் காட்டிலும் ஆண்கள் அதிகமாக பயன்படுத்துகின்றனர்.

தரப்படுத்தப்பட்ட சித்தப்பா என்ற சொல்லை பெண்கள் அதிகமாகப் பயன்படுத்துகின்றனர். ஆண்கள் நயினா என்ற சொல்லைப் பயன்படுத்துகின்றனர்.

உண்மெ, அர்சி, ரசம், விவசாயம், குடிசெ, வரிச்செ, தலகானி, பாணகொம், கட்டுவிரியன், கண்ணாடிவிரியன், கொம்பேரி மூக்கன், சூரியன், வியாழன், பொதன், சாப்டு போன்ற தரப்படுத்தப்பட்ட சொற்களை ஆண்களைக் காட்டிலும் அதிகமாகப் பெண்கள் பயன்படுத்துகின்றனர். தரப்படுத்தப்பட்ட சொற்களைப் பெண்கள் பேசுகின்றனர் என்ற கருத்தை லெபோ (1966), டிரட்சில் (1974), பொய்தோன் (1989). யுரோவா ; (1989), ஏசுதாசன் (1977) போன்றோர் ஆதரிக்கின்றார்கள்.

பெண்கள் தரப்படுத்தப்பட்ட சொற்களை 70.59 விழுக்காடும் ஆண்கள் 29.41விழுக்காடும் பயன்படுத்துகின்றனர்.

பெண்கள் தரப்படுத்தப்பட்ட சொற்களை அதிகமாகப் பயன்படுத்துவதற்கு சமூகச் சூழலில் சொல்லின் முக்கியத்துவத்தை உணர்ந்துள்ளனர். மீன் விற்பதால் மற்ற சாதியினரோடு பழகும் சூழல் உருவாகிறது. அதனால் தரப்படுத்தப்பட்ட சொற்களைப் பயன்படுத்துகின்றனர்.

முடிவாக, ஆண், பெண் பேச்சில் ஒலிப்பில், இலக்கணத்தில், வாக்கியத்தில் வேறுபாடு உள்ளதை அறிய முடிகிறது.

பார்வை நூல்கள்:

1. பஞ்சாங்கம், க., பெண்-மொழி-புனைவு, காவ்யா, பெங்களூர், 1999.

2. பிரேமா, இரா., பெண்ணியம் சொற்பொருள்விளக்கம், ஷான்வி புக்ஸ், பெங்களூர், 2015.

3. ரேணுகாதேவி, வீ, சங்கப் பெண்பாற்புலவர்களின் மொழிநடை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2012.

4. Bodine, Ann, Sex Differentiation in Language. In Barrie Thorne and Nancy Henley. (eds.) Language and Sex: Difference andDominance. 130-151 Rowley, Mass: Newbury House Publishers, 1975.

5. Brouwer, Dedede, Gender Variation in Dutch : A Sociolinguistic Study of Amsterdam Speech. Dordrecht: Foris Publications. 1989.

6. Brouwer, D.M. Gerritsen and D.Dehaan, Speech Differences between Woman and Men: On the Wrong Track? Language in Society 8:33-50.1979

7. Capell, Studies in Sociolinguistics, Paris, The Hague: Mounton, 1966.

8. Fischer, J.L., Social Influences in the Choice of a Linguistic Variant, Word 14: 47-56, 1958.

9. Francis, Ekka, Men’s and Women’s Speech in Kurukh, Linguistics, 14:47, 1972.

10. Lonov, W. The Social Stratification of English in New York City, Washington, D.C., Cal, 1966.

11. ______, Some Sources of Reading Problems for Negro Speakers of Non-Standard English (Mino). Chicago: Spring Institute of on New Directions in Elementary English, 1966.

12. Mary, R.Hass, Man’s and Woman’s Speech in Koasati. In Dell Hymns (ed.) Language, Culture and Society. 228. New York: Harper and Row, 1964.

13. Poynton, Cate, Language and Gender: Making the Difference, Oxford : Oxford University Press, 1989.

14. Trudgill, Peter, Sex Covert Prestige and Linguistic Change in Urban British English Norwich, Language and Society I: 179-195, 1972.

15. Trudgill, P., The Social Differentiation of English in Norwich. Cambridge: Cambridge University Press, 1974.

16. ______, Sociolinguistics: An Introduction. Haramondsworth: Penguin, 1974.

17. Vasantha Kumari, T., The Standard Spoken Tamil, In B.Gopinathan Nair (Ed.) Studies in Dialectology 1, 1. Trivandrum: Department of Linguistics (Mimeo), 1976.

18. Warhaugh, Ronald. An Introduction to Sociolinguistics, Oxford Basil Blackwell, 1990 (1986).

19. Wolfram, W., A Sociolinguistic Description of Detroit Negro Speech. Washington, DC : Centre for Applied Linguistics, 1969.

20. Yesudhason, C., "Tamil Dialects of Kanyakumari District (with reference to Vilavankodu Taluk)", Unpublished Ph.D. Dissertation, Annamalai Nagar : Annamalai University, 1977

நன்றி: உலகத்தமிழ் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம்

முனைவர் க. பசும்பொன்
மேனாள் இயக்குநர், உலகத்தமிழ்ச்சங்கம், மதுரை

## 16. அறவாழி அந்தணன்

***– கனக. அஜிததாஸ்***

அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.

திருக்குறள் என்ற ஒப்பிலா நூல் மெய்ப்பொருள் காட்டி உயிர்களனைத்துக்கும் அரண் செய்து வழிகாட்டும் ஓர் உயிர்த்துணை நூல். துன்பங்களின்று விடுதலை காண வழிகள் கூறும் உபாய நூல்; மனிதனை எவர்க்கும் - ஏன்? இறைவர்க்கும் அடிமையில்லை என்று சிந்திக்க வைத்துத் தன்முயற்சி யாளனாக்கும் உறுதி உரைக்கும் நூல். இத்தகு சிறப்பு வாய்ந்த திருக்குறள் போற்றும் நெறி எது? போற்றும் கடவுள் யார்? என்பதை அறிய கடவுள் வாழ்த்தில் முதலில் புகுவதைத் தவிர்த்து உட்புகுதல் வேண்டும். ஏனெனில் திருக்குறள் வாழ்த்தில் குறிப்பிடப்பட்டுள்ள வணக்கத்திற்குரிய பெயர்களில் திருக்குறள் போற்றும் நெறிகள் அடங்கியுள்ளன. திருக்குறள் நெறியை உள்ளவாறு அறியாதவர்களுக்கு இப்பெயர்களில் அடங்கியுள்ள மறைபொருள் அறியப்படாத ஒன்றே!

கொல்லாமை, வாய்மை, புலால் உண்ணாமை, உயிர்ப்பலி ஓம்பாமை, கள்ளாமை, கள்ளுண்ணாமை, அவாவறுத்தல், மிகுபொருள் விரும்பாமை, உழவின் மேன்மை, இருவினை, தவத்தின் மாட்சி, தீவினையஞ்சுதல், தவமுடையார்க்கு உடம்பும் மிகை என்ற திகம்பரத் துறவு முதலானவற்றையெல்லாம் பட்டியலிட்டுப் பரத கண்டத்தின் சமயங்களில் ஒவ்வொன்றாக எடுத்துக் கொண்டு மேற்குறிப்பிட்ட கொள்கைகளை முன்னுக்குப் பின் முரண் என்பதே இல்லாமல் முக்காலத்தும், எவ்விடத்தும் முழுதுமாகத் தம் நெறியின் அடிப்படை-அச்சு இவை என உறுதிபடக்கூறும் தகுதி படைத்த சமயம் எது என வினவினால் ஒரே ஒரு நெறியினர்-அருகர் நெறியினர் மட்டுமே- இக்கொள்கைகள் எமது எனக் கூறமுடியும். அஃது அறவாழி அண்ணலாகிய ஆதிபகவன் காட்டிய நெறியாகும்.

திருக்குறளின் சுவடுகள், திருக்குறளார் வழி வந்த நூல்களில் - சிலம்பில், சிந்தாமணியில், சூளாமணியில், நாலடியில், அநநெறிச் சாரத்தில், அருங்கலச் செப்பில், ஏலாதியில், சிறுபஞ்ச மூலத்தில், வளையாபதியில், மேருமந்தரத்தில், ஸ்ரீபுராணத்தில், மகாபுராணத்தில், இரத்தினகரண்ட

சிராவகாசாரத்தில், சமயசாரத்தில், தத்வார்த்த சூத்திரத்தில் என எல்லாவற்றிலும் அருக-நெறி நூல்கள் அனைத்திலும் மிகத் தெளிவாக உள்ளன. சிலவற்றில் திருக்குறளின் அதிகாரங்கள் அப்படியே உள்ளன! அருக நெறியினர்க்கு இதுவியப்பல்ல! திருக்குறளின் சுவடுகள்-திருக்குறளின் பிரதி பிம்பங்கள் பின்னரெழுந்த சமண நூல்கள் அனைத்தும். அப்படியெனில் திருக்குறள்? ஆம்! ஆதிபகவன், அறவாழி அந்தணன் உரைத்த அறநெறிகளின் பிரதிபிம்பமே திருக்குறள்! எனவேதான் திருக்குறளின் ஆசிரியர் - தம் பெயர் குந்தர் குந்தர் என்றபோதிலும், ஆக்கியோன் தான் எனத் தன் பெயரிடாது பேரறம் புரிந்தார்! என்னை? ஆம்! ஆதிபகவனே; அறவாழி அந்தணனே திருக்குறளின் மூலாசிரியன்! பேராசிரியன்!

இனி, 'அறவாழி அந்தணன்' என்ற பெயரின் மறை பொருளையும், இப்பெயருக்குரிய பெரியோன் யார்? என்பதையும் காண்போம். திருக்குறள் போற்றும் இறைவனது பெயர்கள் அருகநெறியினர் நன்கு அறிந்தவையாகும். நாள்தோறும் செய்யப்படும் வழிபாட்டில் கையாளப்படும் சொற்களே இவை. ஜினாலயங்கள் சிலவற்றில் எழுந்தருளியிருக்கும் அருகப் பெருமானது பெயர்களில் (ஆதிபகவன், ஆதிபட்டாரகன், ஆதிநாதன் எண்குண இறைவன்), தத்தம் குழந்தைகளுக்கு சூட்டி மகிழும் பெயர்களில் திருக்குறள் பெயர்களும் (ஆதிநாதன், அறவாழி) உள்ளன. திருக்குறள் இறைவன் பெயர்கள் சமணர் நூல்களில் எல்லா மொழி நூல்களிலும் மிகவும் சரளமாகக் கையாளப்படும் பெயர்களே.

அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.

என்பது அருகப் பெருமானை நன்றியின் பொருட்டுத் தேவர் பெருமான் போற்றி வணங்கும் பாடலாகும்.

அறவாழி என்பது யாது? அறவாழி என்பதற்கு அறக்கடல் என்றும் அருட்சக்கரம், தரும சக்கரம் என்றும் இருபொருள்கள் தரப்படுகின்றன. திருக்குறளாசிரியர், இங்குக் குறிப்பிட்டுள்ளது அருட்சக்கரத்தையே என்பது கீழ்க்கண்ட பலகாரணங்களால் தெளிவாகிறது. இச்சான்றுகளை அறிந்து கொள்ள ஊகமோ, ஆழ்ந்த சிந்தனையோ, பிறர்கூறுவதில் நம்பிக்கையோ தேவையில்லை. நேரடியாக, தம் கண்களால் பார்த்து உண்மையை அறிந்து கொள்ளலாம்! என்னதாம் அச்சான்றுகள்? இந்த அறவாழி என்பது எல்லா ஜினாலயங்களிலும் (அருகப்பெருமான் ஆலயங்களில்) உலோக பிம்பமாக சமைக்கப்பட்டு வழிபாடு செய்யப்பட்டு வருகிறது. இதனைத் தரும சக்கரம் என்பர்.

இது ஜிநதருமமத்தின், அருக நெறியின் பிரதி பிம்பமாகக் கருதப்படுகிறது. ஒவ்வொரு ஜினாலயத்திலும் நவதேவதை (அ) உயரிய ஒன்பது என்ற வழிபாடியற்றப்படும் படிமங்கள் உள்ளன. இந்த உயரிய ஒன்பதாவன: அருகர், சித்தர், ஆச்சாரியர், உபாத்தியாயர், சர்வ சாதுக்கள் ஆகிய பஞ்ச பரமேஷ்டிகள், ஜிநதருமம் (தருமசக்கரம்) ஜிந ஆகமம், ஜிநர் படிமம், ஜினாலயம் என்பனவாகும். இவற்றில் ஜிநதருமம் என்பது தரும சக்கரமாகவே உருவகப்படுத்தப் பட்டுள்ளதை நேரடியாக, கண்களாற் கண்டு அறிந்து கொள்ளலாம். வழிபட ஓதும் மந்திரங்களைக் கேட்டு உண்மையைத் தெளியலாம். எனவே அறவாழி என்பது தருமசக்கரம். அருகர் நெறியின் பிரதி பிம்பம் என்பதே உண்மை. இதுமட்டுமன்றி, தரும சக்கரம் என்பது தனிப்படிமமாகவே உருவாக்கப்பட்டுச் சிறப்புச் செய்யப்படுவதையும் இன்றும் ஜினாலயங்களில் காணலாம்.

ஜினாலயங்களில் உள்ள கொடித்தூண் (துவஜஸ்தம்பம்) அடிப்பாகத்தில் பொறிக்கப்படும் திருஉருவங்களில் அறவாழியும் ஒன்றாகும். ஜினாலயங்களில் உள்ள அருகர் படிமைகளின் வலப்புறத்தில், அப்பெருமான் பக்கத்தில் அறவாழி நிறுவப்பட்டுள்ளதைக் கண்கூடாகக காணலாம். அருகப் பெருமான் திருவுருவம் உள்ள பீடத்தில் அறவாழி பொறிக்கப்பட்டுள்ளதையும் காணலாம்.

வழிபடும் ஓவியத்தில் அறவாழி:

தீர்த்தங்கரர் ஆகக் கூடிய வினை பெற்ற மாபெரும் துறவி, வாலறிவு பெற்றவுடன் அருகப் பெருமான் எனப் போற்றப்படுகிறார். அப்போது அவர் அறமுரைத்திட சமவசரணம் என்னும் ஒப்பரிய திருநிலையம் ஏற்படுத்தப்படுகிறது. ஆங்கே அந்தத் திருநிலையத்தின் மையத்தில் அமைந்துள்ள மூன்று மேடைகளில் உச்சி மேடையில் தாமரை மலர் மீது நான்கு விறற்கடை விட்டு மேலே அருகப் பெருமான் எழுந்தருளி அறவுரைபகர்வார். இத்தகு சிறப்பு வாய்ந்த மூன்று மேடைகளில் - அடியில் உள்ள முதல் மேடையின் நான்கு புறங்களிலும், தர்ம சக்கரங்கள் பக்கத்திற்கு ஒன்றாக இருக்கும். இதனைத் தேவர்கள் தாங்கி நிற்பர் (மஹாபுராணம், ஸ்ரீபுராணம், கிரியாகலாபம், மேருமந்தரபுராணம்). இந்தச் சமவசரண அமைப்பு ஜைனர்களின் இல்லங்களிலும், ஜினாலயங்களிலும், திருமலை போன்ற மலையில் உள்ள குகை ஓவியங்களிலும் காணலாம். சமவசரணம் வழிபாடு செய்யப்படுவதை, வணங்கப்படுவதைத் திருக்குறள் ஆராய்ச்சி அறிஞர்கள் தம் கண்களால் கண்டு மகிழலாம். மேலும், அருகப்பெருமானாகிய அறவாழி அந்தணன், ஆதிபகவன் அறஉரை பகர பல இடங்களுக்கும் எழுந்தருளும்போது அவர்முன் அறவாழி செல்லும் என்பதைச் சமண சமய சமஸ்க்ருத, தமிழ் நூல்கள் விவரிக்கின்றன.

இவ்வாறு அறவாழி என்பது தருமசக்கரமாக, அருட்சக்கரமாக, அருகப் பெருமானுடைய மங்கலச் சின்னங்களில் ஒன்றாக, பொருள் கொள்ள அழுத்தந்திருத்தமாக ஆதாரங்கள் பல உள்ளன. ஊகத்துக்கு இடமின்றி, நேரடியாகக் கண்டு அறிந்து கொள்ளக் கூடிய ஆதாரங்கள் இவை. எனவே அறவாழி என்பது அருட்கடல் அறக்கடல் என்று உரைப்பது. இங்கு, திருக்குறளில் பொருத்தமாக இல்லை. 'கௌ' என்றபதத்திற்கு நீர், வாக்கு, பூமி, பசு, திக்கு, மயிர், வஜ்ரம், ஆகாசம், அம்பு, கிரணம் ஆகிய பல பொருள்கள் இருப்பினும் வழக்கத்தில், பழக்கத்தில் இருப்பதைக் கொண்டு 'பசு' என்று பொருள் கொள்வதுதானே சிறப்பு; உயிரின் குணங்கள் பலவாயினும் அதனைக் குறிப்பிடும்போது 'அறிவுள்ளது' என்று கூறுவது தானே சாலப் பொருந்தும். எனவே திருக்குறளில் ஆளப்பட்டுள்ள அறவாழி என்ற சொல் தருமசக்கரத்தையே குறிக்கும் என்பதில் ஊகத்திற்கு சிறிதும் இடமில்லை. திருக்குறளாசிரியர் அருகநெறியாளர். அவர் முன்னோர் அருகப் பெருமானை எவ்வாறு கண்டனரோ, சிறப்பித்தனரோ, வியந்து வாழ்த்தினரோ அவ்வாறே இவரும் தன் ஒப்பற்ற ஞானத்தினால் அருகப் பெருமானை காண்கிறார்-சிறப்பிக்கிறார் -வாழ்த்துகிறார். திருக்குறளாசிரியர் பின் வந்த அருகநெறியினரும் இவர் போன்றே இன்றும் ஆதிபகவனை அறவாழி அண்ணலாகவே காண்கின்றனர். சிறப்பிக்கின்றனர், விதந்து போற்றுகின்றனர். பரிமேலழகரும், பிற சான்றோர்களும் அறவாழி என்பதற்கு வேறு பொருள் உரைக்கிறார்களெனில் அது 'அறிபவருடைய அபிப்ராய'மாகும்.

திருமால் கரத்தில் ஆழி உள்ளதே! அது அறவாழியாகாதோ? என்று கருதுவது இயற்கையே ! திருக்குறள் கூறும் நெறி 'தவத்தோர்க்கு உடம்பும் மிகை' என்ற முழுத்துறவு நெறி! இப்படியிருக்க, பகையாக எண்ணும் சில உயிர்களை வதை செய்யவே திருமால் கையிலேந்தப்பட்ட ஆழியைத் திருக்குறளார் குறிப்பிடுவது எங்ஙனம்? எனவே திருக்குறளாசிரியர் குறிப்பிடும் ஆழி ஆதிபகவனுடைய -அருகப் பெருமானுடைய அறவாழியே.

அடுத்து, அந்தணன் என்ற சொல் மிகச்சிறந்த உயரிய நெறிகளைக் கைக்கொண்டொழுகும் பெரியோனைக் குறிக்கும். அந்தணன் என்போன் அறவோன்; செந்தண்மை பூண்டொழுகுபவன்; இங்குத் திருக்குறளிள் குறிப்பிடப்பட்டுள்ள அந்தணன், பெரியோர்க்கும் பெரியோன்; அறிவினாலறியாத அறிவன்; அறவேந்தன்; ஏனெனில் இவன் அறவாழியை உடையோன் ஆதலால்; அறவாழி உடைய சிறப்பு அருகப் பெருமான் ஒருவர்க்கே உண்டு. வாலறிவு பெற்ற அந்தணர் ஒருவர்க்கே அறவாழி சிறப்பு உண்டு. 'ஆதிக்காலத்து அந்தணன்' என ஆதிபகவனைத் திருத்தக்கதேவர் போற்றி மகிழ்வதை சிந்தாமணியில் காணலாம். அடுத்து பிறவாழி என்பது பிறவிக்கடல் என்றும் பொருள் மற்றும் இன்பக்கடல் என்றும் விளக்கப்படுகின்றது. பிறவிக்கடல் என்று பொருள் கொண்டாலும்,

பிறவியை ஏற்படுத்தக் கூடிய பொருளும், உலகவியல் இன்பமும் என்றும் பொருள் கொண்டாலும் இக்குறளுக்கு ஒப்ப அமைகிறது. எனினும் கடவுள் வாழ்த்துப் பாக்களில் இறுதிப் பாவாகிய பிறவிக்கடல் நீந்துவர் நீந்தார் இறைவனடி சேராதார் என்பதில் பிறவிக்கடல் என்ற ஆளுகை இருப்பதால், அறவாழி அந்தணன் என்ற குறளில் இதே கருத்தை முன்கூறி பின்னரும் குறிப்பிடுவாரோ ஒப்பற்ற ஞானியாகிய குந்தகுந்தப் பெருமான் என்று வினா எழுப்பாமல் இருக்க முடியவில்லை. இரண்டு இடங்களில் ஒருபொருளை விளக்கினார் என்பதைவிட, ஒவ்வொரு குறளிலும் வெவ்வேறு அறநெறிகளைக் குறிப்பிட்டுள்ளார் என்பது சிறப்பான சிந்தனையன்றோ? நல்வினையையே ஒரு கட்டத்தில் விலக்கும்போது பொருள், இன்பம் இவற்றை விட்டொழிக்க வேண்டுமன்றோ? பொருள் மற்றும் இன்பக் கடலினின்றும் தப்பி வெளியேறிட அற வேந்தன்தாள் துணையாம். அதன்பின் எய்துவது வீடன்றோ?

அறவாழியும் அருகனும், பிறகடவுளர்களும்: ஓர் ஒப்பாய்வு

தமிழில் இலக்கணம், இலக்கியம் போன்றே முக்கியமான அங்கமாக இடம்பெறுவன நிகண்டுகளாகும். அறவாழி அண்ணல் என்பது அருகன் திருநாமங்களில் ஒன்றென நிகண்டுகளில் குறிக்கப்பட்டுள்ளதைக் காணலாம். கண்டபின் வேறெந்தக் கடவுளர்க்கு ஆழி உள்ளதென்பதையும், அது அறவாழியா மறவாழியா என்பதையும் திருக்குறள் நெறிநின்று காண்போம். சொற்களின் பொருள்களை அறிய தெளிவுபெறத் துணையாய் நிற்பவை, நிகண்டுகள் ஆகும்.

நிகண்டுகளில் ‘அறவாழி’ என்ற பெயர் யாருக்கு?

திவாகரத்தில் 43 பெயர்கள் அருகனுக்குக் குறிப்பிடப் பட்டுள்ளன. குறட்பெயர்கள் பலவும் உள்ளன. அவற்றில் அறவாழி அந்தணன் என்ற பெயரும் உண்டு.

அருகன் பெயராக

அறவாழி அந்தணன் (திவாகரம்)
அருளாழிவேந்தன் (திவாகரம்)
அறவாழி வேந்தன் (பிங்கலம், சூடாமணி நிகண்டு)
அறவாழி அண்ணல் (கயாதரம்)
அறத்தினாழியன் (தமிழ் உரிச்சொல் பனுவல்)
படையிலி (தமிழ் உரிச்சொல் பனுவல்)
கொல்லாவேதன் (சூடாமணி நிகண்டு)
சாது (சூடாமணி நிகண்டு)
தருமராசன் (சூடாமணி நிகண்டு)
அருட்கொடையாளன் (தமிழ் உரிச்சொல் பனுவல்)

அறத்தின் மன்னன் (தமிழ் உரிச்சொல் பனுவல்)
ஆழியன் (தமிழ் உரிச்சொல் பனுவல்)
கொல்லா மறையோன் (தமிழ் உரிச்சொல் பனுவல்)
பொறையன் (தமிழ் உரிச்சொல் பனுவல்)

இதுவரை அருகனுக்கு அறவாழியந்தணன் என்ற பெயர் எந்தெந்த நிகண்டுகளில் கூறப்பட்டுள்ளன என்று பார்த்தோம்.

பிறநெறிக் கடவுளர்க்கு இந்தப் பெயர் எந்தெந்த நிகண்டுகளில் உள்ளதென்பதைக் காண்போம்.

சிவபெருமானுக்கு பொருந்துமா?

சிவபெருமான் குறித்து அறவாழி அந்தணன் என்ற பெயர் திவாகரத்தில் - ஒன்றுமேயில்லை.

ஆனால் அரவாபரணன், அழலாடி, அழலேந்தி, ஆனையுரித்தோன், ஈமத்தாடி, கபாலமூர்த்தி, கறைமிடற்று அண்ணல், சடையோன், சுடலையாடி, நாரிபாகன், நீறணிகடவுள், பரசுபாணி, பிறைசூடி, பினாகபபாணி, புலித்தோலுடையோன், பேயோடாடி, மழுவாளி என்ற நாமங்கள் வழங்கியதைக் குறிப்பிடுகின்றன. சிவனார் நெறியின் தத்துவத்தை உணர்த்தும் பெயர்களாக இவை இருக்கும் நிலையில், குறள் நெறிக்கு குறள் அதிகாரங்கள் பலவற்றிற்கு மாறானவை இப்பெயர்கள் என்பதும் வெள்ளிடைமலை. இதுபோன்றே பிற நிகண்டுகளிலும் பிறைசூடிய பெருமானுக்குப் பெயர்கள் அமைந்துள்ளன.

திருமாலுக்குப் பொருந்துமா?

சக்ராயுதன், ஆழிப்படை உடையவன் என திருமால், திவாகர நிகண்டில் குறிக்கப்படுவதால் அறவாழி அந்தணன் என்ற பெயரை இது குறிப்பிடாதோ என எண்ணுவது இயல்பே. திருமால் தன் கையில் தரித்திருப்பது அறவாழியன்று, அறத்தை நிலைநாட்ட பிறரைக் கொல்வதற்குத் தரித்த மறவாழி என்றே திருமாலின் திருத்தொண்டர்கள் கூறியுள்ளனர் என்பதை அறிஞர் மயிலை சீனி, வேங்கடசாமி அவர்கள் தமது அறவாழி அந்தணன் என்ற கட்டுரையில் தெளிவுபட விளக்கியுள்ளார்.

"அடலாழி ஏந்தி அசுரர் வன்குலம் வேர் மருங்கறுத்தாய்" என்றும், "அமர்கொள் ஆழி" என்றும், "கனலாழிப் படையுடையவன்" என்றும், "கொலை ஆழி" என்றும், "கூர் ஆழி" என்றுத் "கனலாழிப் படையுடையவன்" என்றும் "பேராழி கொண்ட பிரான்" என்றும் "ஊன்திகழ் நேமி" என்றும், "ஈர்க்கின்ற சக்கரத்தெம்மான்" என்றும் திருமாலின் ஆழி (சக்கரம்) படை என்றே வர்ணிக்கப்படுகிறது" என்பதை

மயிலை. சீனி. வேங்கடசாமி அவர்கள் தெளிவாக எடுத்துக் காட்டியுள்ளார்கள். எனவே அறவாழி யந்தணன் என்ற பெயர் சிவபெருமானுக்குப் பொருந்தாமை போன்றே திருமாலுக்கும் பொருந்தாமை தெளிவாகிறதன்றோ?

புத்த பிரானுக்குப் பொருந்துமா?

புத்த பிரானுக்கு நிகண்டுகளில் அறவாழியன் என்ற பெயரேதுமில்லை யெனினும் மணிமேகலைக் காப்பியத்தில் அறக்கதிராழியுருட்டுவோன் என்ற திருநாமம் சூட்டப்பட்டுள்ளது. புத்த தேவன் எனும் போதே அருள் வடிவம் தோன்றுவது குறித்து அருள் நெறி சுரக்கும் செல்வன், அருளிடுவோன், அருளின் படிவன், அறத்தின் வேந்தன், தருமன், தருமராசன் என நிகண்டுகள் போற்றுகின்றன. ஆனால் புலால் மறுத்தலை கொல்லாமையை, வினைக் கொள்கையைப் போற்றாமையால், குறள் நெறியும், குறளின் இறைவனது பெயர்களும் இப்பெருமானுக்குப் பொருந்தாமை வெள்ளிடைமலை.

எனவே, பழைய நிகண்டுகளில் குறள் வாழ்த்தும் இறைவனது பெயர்கள் அருகதேவனுக்குக் குறிக்கப்பட்டிருப்பதையும், இதே நிகண்டுகளில் குறள் கூறும் இறைவனது பெயர்கள் பிறகடவுளர்க்குக் குறிப்பிடப்படாமையும், அதுமட்டுமன்றிக் குறளின் நெறிக்கு மாறான பொருள் உடைய திருப்பெயர்கள் அருகனல்லா பிற கடவுளர்க்கு அக்காலத்திலேயே வழங்கி வந்துள்ளமையும் திருக்குறள் அருகநெறி நூல் என்பதற்கு அழுத்தமான சான்றாகும்.

திருக்குறள் கடவுள் வாழ்த்து அருகக் கடவுளைச் சார்ந்த தென்பதையும் மற்ற அதிகாரங்களில் உள்ளவை அருகநெறிகள் என்பதையும் விளக்கும் பொருட்டே இதர சமயங்களை ஒப்பிட வேண்டியதாயிற்று. இது தெளிவு கொள்ளவே யன்றிப் பிற சமயங்களையோ, பிற கடவுளர் களையோ குறை கூற அல்ல என்பதை உளத்தூய்மையோடு கூறுவதில் மனநிறைவேற்படுவது உண்மை.

இப்போது, அறவாழி அந்தணன், அறம் அருளியவன் என்பவை சமண சமய தமிழ், சமஸ்கிருத, பிராக்ருத இலக்கியங்களில், தத்துவ நூல்களில், சரளமாகக் கையாளப்பட்டுள்ளதை காணலாம்.

சீவக சிந்தாமணியில்;

ஆதிக்காலத்து அந்தணன் (சீவக. 366)

கொலையிலாழி வலனுயர்த்த குளிர்
முக்குடையினிழலோய்நீ (சீவக. 1244)

மறுவற வுணர்ந்தனை மலம் அறு திகிரியை (சீவக. 2563)

அறவாழி யண்ணல் இவனென்பர் (சீவக.1611)
அருமறை தாங்கியி அந்தணர் தாதையை (சீவக.2561)
தண்மதிபோல் நேமி அரண் உலகிற்கு ஆய அறிவரன் நீயே (சீவக. 1246)
திருவறம் வளர்க (சீவக. இறுதி வாழ்த்து
ஆதிவேதம் பயந்தோய்நீ (சீவக. 1242)
உலகமிருள் கெடவிழிக்கும் ஒண்மணி அறவாழி
அலகையிலாக் குணக்கடலை (சீவக. முக்தி 425)

சூளாமணியில்;

ஆதிநாள் அறக்கதிர் ஆழி தாங்கிய சோதியான் (சூளா.மந்திர 147)
அழல் அணங்கு தாமரை ஓர் அருளாழி உடையகோன் (சூளா-1039)
ஆழி அறவரசே (சூளா-1913)
ஆர் அழல் அம்சோதி வாய்சூழ்ந்த அருள் ஆழியானை (சூளா-1907)
ஓர் அருள் ஆழியை (சூளா-216)
அறவாழி (சூளா-156-158)
அருமறையை விரித்தாயை (சூளா-184)
விளியாத மெய்ப் பொருளை நீவிரித்தாள் (சூளா-1906)
ஊழி மூன்றாவது ஓய்ந்து இறுதி மன்னுயிர்
சூழ்துயர் பலகெடச் சோதி மூர்த்தியாய்
ஏழ்உயர் உலகுடன்பரவ ஈண்டு அருள்
ஆழியாங் கிழமையெம் அடிகள் தோன்றினார் (சூளா394)

ஆதி பகவன் குறித்த அற்புத வர்ணனை). இதன் வரலாறு அருகநெறியாளரே அறிகுவர்.

அருள்புரி அழலஞ்சோதி ஆழியான் (சூளா.துறவு. (27))
அருளாழிமுன் செல்லப் பின் செல்வதென்னோ
வடிப்படாதாய் நின்ற வகன் ஞால முண்டோ (சூளா-துறவு-68)

தாமரையி னங்கணடி வைத்தருளு மாதியா யாழி

யறவரசே யென்று நின் னடிபணிவ தல்லால் (சூளா. துறவு 73)

பகைநாறும் அயிற் படைகள் பயிலாத திருமூர்த்தி (சூளா.183)

மேருமந்தர புராணத்தில்;

அறவேந்தனே (மே.பு.634)

அறிவன் நீயே (மே.பு.999)

மறமிலிவிலாழியுடை மன்னவன் (மே.பு.1042)

சம்பவன் முன்பு நின்ற தருமச் சக்கரத்தினும்பர் (மே.பு.1189)

பெருமையொடு மங்கலங்களறவாழி (மே.பு.1195)

அப்பாண்டை நாதர் உலாவில்;

சினதர்மசக்கரத்தன் (10)

அருட்கடலுமாயினோன் (19)

அருளாழியான் (24)

அறவாழியான் (24)

தருமக்கடலான் (58)

நன்மையறவாழி நடக்க (444)

அறவாழி வேந்தன் (635)

அறவாழி சேர்த்தீசன் (943)

அறவாழி முத்தன் (993)

படைவாளும் இலான்

திருமேற்றிசை அந்தாதியில்;

திருவருளாழி நடாத்தும் குடதிசைச் செங்கனி (347)

திருநறுங்கொண்டை மலைப்பதிகம்;

இடர்திசை நீங்கநின்றார்க்கு அறமாயுதம் (151)

படைகளொன்றின்றி இருவினையெனும் பண்டை முதுபகைபுறங் கண்டவன்

திருக்கலம்பகத்தில்;

சயங்கொள் ஆழியங்கடவுளே (திருக்கல.35)

பேரறங்க ணேமி கொண்டு வென்ற சோதி யெங்களாதியே (திருக்கல.24)

உலகமேழும் வந்திறைஞ்ச அருளாழி வலங்கொண்டு

ஏத்துஞ் சிகர மணிநீல
வண்ண (திருக்கல.31)

திருநூற்றந்தாதியில்;

அருளோடெழும் அறவாழி அப்பா (திருநூற்.5)
அற ஆழிகொண்டே வென்ற அந்தணனே (திருநூற்.27)
அருட்சக்கரம் ஏந்திய சங்கரன் (திருநூற்.67)

திருநறுங்கொண்டைத் தோத்திரமாலை-மந்திரப்பத்து;

தரும சக்கரா (53)
தரும சாரணன் (60)
மறுவிலா அறவாழி அந்தணனே (68)

நீலகேசியில்;

உயிர்கட்கு இடர்தீர்த்து உயிர் இன்பம் ஆக்கும்
சொல்லான் தருமச்சுடரான்
அங்கம் பயந்தான் அறைந்தசுதக்கடல் (நீல.660)
தீதுஇல் நன்னெறி பயந்து (நீல.155)
அங்க பூவமது அறைந்தாய் அறிவர்தம் அறிவர்க்கும்
அறிவா (நீல. 157)
அன்னான் பயந்த அறஆர் அமிர்து (நீல. 2)
அறங்கூர்மாரி பொழிந்தோய் (நீல.139)

திருவெம்பாவையில்;

பள்ளியுணர்ந்திலையோ பாவாய் நீ முன்வந்தென்
வள்ள லறவாழி நாதன் மலரடியை

உரைமேற்கோள்;

அருள்நெறி நடத்திய ஆதி தன்
திருவடிபரவுதும் சித்தி பெறற் பொருட்டே (உ.மே.44)
ஈர்அறம் பயந்த ஓர் அருள் ஆழியை (உ.மே.11)
அறவாழியினான் (உ.மே.20)
அறவாழியனே (உ.மே.29)
படை ஒன்றிலான் (உ.மே.31)
அறப்புணையே புணையாக மறுகரைபோய்க் கரைஏறி
இறப்பு இலநின் அருள் புரிந்தாங்கு எமக்கு எல்லாம்
அருளினையாய்

மறவாழி ஒளிமழுங்க மனையவர்க்கும்
முனையவர்க்கும்
அறவாழி வலன்உயரி அருள் நெறியே அருளியோய்
(உ.மே. 138)

அறவாழியின் அமைப்பு;

கனல்வயிரம் குறடு ஆகக் கனல்பைம்பொன் சூட்டுஆக
இனமணி ஆரமா இயன்று இருள் இரிந்து ஓட
அந்தரத்து உருளும் நின்அலர்கதிர் அறவாழி
இந்திரனும் பணிந்து ஏத்த, இருவிசும்பில் திகழ்ந்தன்றே
(உ.மே. 39)

அல்லல் நீக்கற்கு அறப்புணை ஆயினை (உ.மே. 37)
அருளினை நீ (உ.மே. 37)
நனைஇல்காட்சி நல்லறத்தலைவ (உ.மே.41)
அறமும் நீ (உ.மே.37)
அறவன்நீ (உ.மே.40)

சிலப்பதிகாரத்தில்;

அருண்முனி
அருளறம் பூண்டோன்
தரும முதல்வன்
தருமன்

யசோதர காவியத்தில்;

திருமொழி அருளும் தீர்த்தகரர்களே துயர்கள் தீர்ப்பர்
(ய.சோ.53)

தர்மசக்ரம் குறித்து கிரியாகலாபம்-நந்தீஸ்வரபக்தியில்
(சமஸ்கிருதத்தில் ஆசார்யர் பூஜ்யபாதர் அருளியது)

ஸ்புரதர ஸஹஸ்ரருசிரம் விமலமஹா
ரத்ந கிரண நிகர பரீதம்
ப்ரஹஸித ஸஹஸ்ர கிரணத்யுதி மண்டல
மக்ரகாமி தர்மஸுசக்ரம்
(கிரியாகலாபம் -192- நந்தீஸ்வர பக்தி)

ஜோதி மயமானதும், ஆயிரம் ஆரக்கால்களை உடையதும், மனோகரமானதும், நிர்மலமானதுமான மிகச்சிறந்த மணிகளாலாம் வட்டைகளால் சூழ்ந்துள்ளதும். சூரியன் ஒளியை மிஞ்சத்தக்க காந்தியோடு

விளங்குவதும், (சமவ சரணத்தின்) நாற்புரமும் உள்ளனவுமாகிய சிறந்த தர்மசக்கரம் பகவான் முன் தொடர்ந்து செல்லும்.

இதுவே மேருமந்திரத்தில்;

சக்கரன் சாபம் போலத் தனுவில்லை யுமிழச் சென்னி
மிக்கமா மணிசெ யாரம் விளங்குமா யிரத்த தாகித்
திக்குலாம் பொழுது காத நான்கதாய்ச் செறிந்திருந்தால்
விற்கண்மூன்றாய அறப்பேராழி தான் விளங்கு
நின்றே (மே.பு.1171)

சமவசரணத்தில் மூன்று வில், உயரமுடைய அறவாழி அருகப்பெருமான் ஆங்காங்கே எழுந்தருளும் போது அவருக்கு முன்னே நான்குகாதம் என்னும் தொலைவில் செல்லும்.

அறவாழி அருளட்டும்
(கிரியாகலாபம்-சாந்தி பக்தி-9)

க்ஷேமம் சர்வப்ராஜாநாம் ப்ரபவது
...........................................
ஜைநேந்த்ரம் தர்மசக்ரம் ப்ரபவது ஸததம்
ஸர்வ ஸௌக்ய ப்ரதாயி-

.................இவ்வுலக உயிர்களனைத்திற்கும் இன்பத்தைத் தருகின்ற ஜிநேந்திரர்களின் அறவாழி எப்போதும் நிலைப்ப தாகுக.

தர்மசக்கரம். அருகத்பரமேஷ்டிக்கு வாலறிவு தோன்றிய உடன் ஏற்பட்ட 24 அதிசயங்களுள் ஒன்றாகும். சமவசரணத்தின் நாற்றிசைகளிலும், பூதங்களால் தரிக்கப்பட்ட ரத்ன மயமான தர்மசக்ரம் நான்கும் திசைக்கு ஒன்றாக விளங்கும்.
-கிரியாகலாபம்.

மஹாபுராணத்தில்

ஶ்ரீமதே ஸகலக்ஞான சாம்ராஜ்ய பதமீயுஷெ!
தர்மசக்ரப்ரதே பத்திரதே நம: சம்சார பீமஷெ!!
-மகாபுராணம்-கடவுள் வணக்கம்.

சகல ஐஸ்வர்யத்தோடும் கூடி கேவல ஞானப் பேரரசினைப் பெற்றவரும், பிறவித்துன்பத்தினை விலக்குபவரும் தர்மசக்ரத்தை உடையவரும் ஆகிய அருக பகவானை நான் வணங்குகிறேன்.

அமரசிம்மம் அருகன் நாமமாலை

அமரசிம்மம் அருகன்பேர்வழி ஸ்லோகத்தில் தர்மசக்ரம், அருள்சக்ரம், அசாதாரணசக்ரம், சித்த சக்ரம், சார்வசக்கரம் கூறப்பட்டுள்ளன.

மஹாபுராணத்தில்
(மாமுனிவர் ஜினசேனாசாரியாரால் அருளப்பட்டது)

சமஸ்க்ருத மொழியில் இயற்றப்பட்ட மஹாபுராணத்தில் அருகப்பெருமானைப் போற்றும் 1008 திருநாமங்கள் உள்ளன. இதில் 64 ஆவது திருநாமம் தர்மசக்ரினே, 840 ஆவது தர்மசக்ராயுதனே! 1008 ஆவது திருநாமம் தர்மசாம்ராஜ்ய நாயகன் என்பனவாகும்.

அறவாழி அந்தணன் அருகனைக் குறித்தது என்பதற்கு எத்தனையோ சான்றுகள் உள்ளன. இந்நூல் அறவாழி அந்தணன் என்ற பெயருடன் திருக்குறள் கடவுள் வாழ்த்து இறைவன் பெயர்கள் அனைத்தையும் ஆய்வதற்கு உருவாக்கப்படும் நூல் என்பதால் விரிவஞ்சி நிறைவு செய்யப்படுகிறது.

"தெருளாமையால் வினவற்பால தொன்றுண்டு
திருவடிகள் செம்பொனார் அரவிந்தம் ஏந்த
இருளாழி ஏழுலகும் சூமொழியின் மூழ்க
இமையாத ரெங்கண்ணின் இமையோர் வந்தேத்த
உருளாழியானும் ஒளிமணி முடிமேற் கைவைத்(து)
ஒருபாலில்வர, உலகம் நின்றுழைபதாக
அருளாழி முன்செல்லப் பின்செல்வகென்னோ?
அடிப்படாதாய் நின்ற அகன் ஞாலம் உண்டோ?

- சூளாமணி

அறவாழி அந்தணன்தாள் போற்றி! போற்றி!

தொடர்பு: பேரா. Dr. கனக. அஜிததாஸ், M.Sc., M.Phil., D.H.Ed., Ph.D., (ajithadoss@gmail.com)

# 17. குறுந்தொகை சித்தரிக்கும் நாண்

*– முனைவர் ச. கண்மணி கணேசன்*

முன்னுரை:

குறுந்தொகையில் 'வெட்கம்' என்று பொருள்படும் 'நாண்' பற்றிப் பதினாறு பாடல்கள் பேசுவதாக உ.வே.சாமிநாதையர் பதிப்பினின்றும் அறிகிறோம். இவற்றை நுணுகி நோக்கி நாண் தோன்றுமிடங்கள், நாண் அழியுமிடங்கள், நாண் கொள்ளும் பாத்திரங்கள் என ஆராய்வதாக இக்கட்டுரை அமைகிறது. நாண் இருபாலார்க்கும் பொதுவான பண்பா? பாத்திர அடிப்படையில் நாணுக்குரிய காரணத்திற்கு வேறுபாடுண்டா? என்னும் ஐயங்கட்கு விடைகாண முயல்கிறது. குறுந்தொகைச் செய்திகள் முதல்நிலைத் தரவுகளாகவும், தொல்காப்பியம், திருக்குறட் செய்திகள் இரண்டாம்நிலைத் தரவுகளாகவும் அமைகின்றன.

நாணம் கொள்ளும் பாத்திரங்களும் காரணங்களும்:

தலைவன், தலைவி ஆகிய இரு தலைமைப் பாத்திரங்களே நாணம் கொள்ளும் பாத்திரங்களாகக் காட்டப்படுகின்றன. தவறான ஒழுக்கம் காரணமாகவும், களவு நீட்டிப்பு காரணமாகவும், மடலேறி மணந்த சூழ்நிலையில் ஊரார் சுட்டிப் பேசும் போதும், சான்றோர் புகழும் போதும் தலைவனுக்கு நாணம் தோன்றும். தலைவனின் புறத்தொழுக்கத்தைப் பிறர்க்கு மறைத்துத் தலைவி நாணம் கொள்வாள்.

மடலேறித் தான் விரும்பிய தலைவியை மணக்க நினைக்கிறான் தலைவன். மறுகில் அவளுடன் செல்லும் போது ஊரார் அவனைச் சுட்டி இன்னாள் கணவன் இவன் என்று உரைப்பதாகக் கற்பனை செய்கிறான். அச்சூழ்நிலையில் தான் நாணம் கொள்ளக்கூடும் என்றும் எடுத்துரைக்கிறான்.

"நல்லோள் கணவன் இவனெனப்
பல்லோர் கூறயாம் நாணுகம் சிறிதே" (குறுந்தொகை- 14)

என்று தலைவன் கூற்றாகவே இப்பாடலடிகள் அமைந்துள்ளன.

சான்றோர்கள் தன்னைப் புகழும் போது தலைவன் நாணுவதுண்டு. பழி ஏற்பட்டால் தாங்கிக் கொள்ள மாட்டான் என்று தலைவன் இயல்பைத் தோழிக்கு எடுத்துக் கூறுகிறாள் தலைவி.

" ..........................................சான்றோர்
புகழும் முன்னர் நாணுப
பழியாங்கு ஒல்பவோ காணுங் காலே" (மேற்.- 252) என்னும் பாடலடிகள் நோக்குக.

களவொழுக்கத்தின் விளைவாகத் தலைவன் தலைவியை உடன் வரைந்து கொள்ள வேண்டிய நிலைமை ஏற்பட்டது. தோழி தலைவனிடம் சூழ்நிலையை எடுத்துக் கூறினாள். தலைவன் நாணம் கொண்டு வரைதற்பொருட்டுப் பிரிந்தான்.

"நின்நிலை யான்தனக்கு உரைத்தனன் ஆகத்
தான் நாணினன்" (மேற்.- 265) என்று தலைவியிடம் எடுத்துக் கூறுகிறாள் தோழி. தொல்காப்பியப் பொருளியல் 51ம் சூத்திரத்தில் நாண் என்ற சொல்லுக்கு உரையெழுதுங்கால் 'பெரியோர் ஒழுக்கத்து மாறாயின செய்யாமைக்கு நிகழ்வதோர் நிகழ்ச்சி' என்று இளம்பூரணர் கூறியிருக்கும் விளக்கத்திற்கு இத்தலைவன் ஏற்ற சான்றாகிறான்.

பரத்தைபால் பிரிந்து மீண்டு வருகிறான் தலைவன்; வாயில் வேண்டி நிற்கிறான். அவனது தகாத ஒழுக்கத்தால் தனக்கு ஏற்பட்ட துன்பத்தை வெளிக் காட்டவில்லை தலைவி. மாறாக அவன் செய்த குற்றத்திற்குத் தான் நாணி நிற்கிறாள். கற்பொழுக்கத்தில் சிறந்து நிற்கிறாள்.

"தண்ணந் துறைவன் கொடுமை
நம்முன் நாணிக் கரம்பா டும்மே" (மேற்.- 9)
என்று இச்சூழலைப் பற்றித் தோழி கூறுகிறாள். தொல்காப்பியரின் மெய்ப்பாட்டியல் 12ம் சூத்திரத்திற்கு உரையெழுதும் இளம்பூரணர் 'நாண்' என்னும் சொல்லுக்கு 'தமக்குப் பழி வருவன செய்யாமை' என்று விளக்கம் கூறியுள்ளார். தலைவி இவ்விளக்கத்திற்கேற்ற சான்றாகிறாள்.

நாண் அழியுமிடங்கள்:

காமமும் நாணமும் முரண்பட்ட பண்புகளாம். ஒன்று விஞ்சும் போது மற்றொன்று அழிகிறது. களவுக்காலத்தில் காமம் மேலோங்கும் போது தலைவியின் நாணம் அழிகிறது. மடலேறத் துணியுங்கால் தலைவனின் நாணம் அழிகிறது. கற்புக்காலத்தில் தலைவன் பரத்தையை நாடும் போதும் அவனது நாணம் அழிகிறது.

இரவுக் குறியைத் தலைவன் விரும்புகிறான். எனவே அவன் இரவுக்குறியில் வருவான் என்பதைத் தோழி தலைவியிடம் கூறும் போது களவொழுக்கத்தால் ஏற்படும் பழிக்கு அஞ்சி நாணம் கொள்ளாத வகையில் காமம் மிகுதிப்படுவது புலப்படுகிறது.

"நடுநாள் வருதலும் வரூஉம்
வடுநாணலமே தோழி நாமே" (மேற்.- 88) என்று தலைவி பேசுவதாகக் கொள்ளவும் வழி உள்ளது.

காமம் விஞ்சும் போது நாணம் அழிவதால் அது இரக்கத்திற்குரியது.
"அளிதோ தானே நாணே நம்மொடு
.................................................
காம நெரிதரக் கைந்நில்லாதே" (மேற்.- 149) என்று தலைவி புலம்புவதாக அமையும் பாடல் இது.

தோழியிடம் குறையிரக்கும் தலைவன் தன் நாணத்தை அழித்து மடலேறத் துணிவதாகக் கூறுகிறான்.
"பொன்நேர் ஆவிரைப் புதுமலர் மிடைந்த
பல்நூல் மாலைப் பன்படு கலிமாப்
பூண்மணி கறங்க ஏறி நாணட்டு" (மேற்.- 173) எனத்
தான் மேற்கொள்ளவிருக்கும் செயல்களை வரிசைப்படுத்துங்கால் நாணத்தைக் கைவிடப் போவதாகத் தன் வாயாலேயே கூறுகிறான்.

தன் நெஞ்சோடு பேசுங்கால்,
"ஒருநாள் மருங்கில் பெருநாண் நீங்கித்
தெருவின் இயலவும் தருவது கொல்லோ" (மேற்.- 182)
எனத் தான் நாணத்தை விட்டுத் தெருவோடு அனைவரும் காணும்படியாக மடலேற இருப்பதைக் கூறுகிறான்.

புறத்தொழுக்கத்தில் ஈடுபடும் தலைவனைப் பற்றித் தோழியிடம் பேசும் தலைவி,
"நாணட்டு நல்லறிவிழந்த காமம்" கொண்ட தலைவன்
கொடுமையை விதந்தோதுகிறாள். (மேற்.- 231)

திருக்குறளும் காமமிகுதியால் நாணத்தை விட்டு மடலூர நினைக்கும் தலைவன் பற்றி 'நாணுத்துறவுரைத்தல்' என்னும் அதிகாரத்திலேயே பேசுகிறது.
"நோனா உடம்பும் உயிரும் மடலேறும்
நாணினை நீக்கி நிறுத்து" (குறள்- 1132) என்னும் திருக்குறள் நோக்குக.

தலைவன் நாணமும் தலைவி நாணமும்- ஓர் ஒப்பீடு:

நாணம் இருபாலார்க்கும் உரிய பொதுப்பண்பு ஆயினும்; ஒரே சூழலில் தலைவன் கொள்ளும் நாணத்திற்கும், தலைவி கொள்ளும் நாணத்திற்கும் காரணம் வேறுபடுகிறது.

தலைவன் பரத்தையிற் பிரிவதும், மீண்டும் தலைவியிடம் வருவதும், தலைவி வாயில் நேர்வதும் சங்க இலக்கியத்தில் பல இடங்களில் நாம்

காணக்கூடிய சூழ்நிலையே. குறுந்தொகையிலும் இத்தகு சூழல்கள் இடம் பெறுகின்றன. அவ்வமயம் தலைவன் நாணம் கொள்வதாகவும், தலைவி நாணம் கொள்வதாகவும் பாடல்கள் சித்தரிக்கின்றன. ஆயின் நாணத்தின் காரணம் நுட்பமான வேறுபாட்டுடன் அமைந்து பாத்திரப் படைப்பை விளக்கமுறச் செய்கிறது. தன் கணவனின் புறத்தொழுக்கத்தைப் பிறர்க்கு வெளிப்படுத்த நாணி அவனை வீட்டினுள்ளே அனுமதித்துக் கற்பில் சிறந்து நிற்கிறாள் தலைவி. அவ்வாறு நடந்து கொண்ட மனைவிக்கு முன்னர் தன் தவறுணர்ந்து நாணம் கொள்கிறான் தலைவன்.

"காஞ்சி ஊரன் கொடுமை
கரந்தனள் ஆகலின் நாணிய வருமே." (குறுந்தொகை- 10) என்று தலைவனின் நாணம் பற்றித் தோழி எடுத்துக் கூறுகிறாள்.

"அச்சமும் நாணமும் மடனும் முந்துறுத்த
நிச்சமும் பெண்பாற்கு உரிய என்ப." (தொல்காப்பியம்- களவியல்- சூத்.- 8) என்றும்,

"காமத் திணையில் கண்ணின்று வரூஉம்
நாணும் மடனும் பெண்மைய ஆதலின்" (தொல். கள.- சூத்.- 17)
என்றும் தொல்காப்பியர் சுட்டுவது குறுந்தொகைப் பாடல்களுடன் முரண்பட்ட கருத்தாக உள்ளது. ஏனெனில் அகத்திணையில் நாணம் தலைவனுக்கும் உரிய பண்பு என இதுவரை கண்டோம்.

முடிவுரை:

குறுந்தொகை காட்டும் புலனெறி வழக்கில் தலைவன், தலைவி ஆகிய இரு தலைமைப் பாத்திரங்களும் நாணம் கொள்ளும் பாத்திரங்கள் ஆவர். களவு நீட்டிப்பும், ஊரார் இன்னாள் கணவன் என்று சுட்டிப் பேசுவதும், சான்றோர் புகழ்ச்சியும், தவறான ஒழுக்கமும் தலைவன் நாணத்திற்குக் காரணங்களாய் அமைகின்றன. தலைவனின் புறத்தொழுக்கத்திற்காகத் தலைவி நாணுகிறாள். களவுக்காலத்தில் காமம் மேலோங்கும் போது இருவரின் நாணமும் அழிகிறது. பரத்தமை ஒழுக்கத்தின் போது தலைவன் நாணம் அழிகிறது. நாண் பெண்ணுக்கு உரியது என்று கூறும் தொல்காப்பியக் கருத்து குறுந்தொகையுடன் முரண்பட்டது.

துணை நூற் பட்டியல்:

தொல்காப்பியம்- இளம்பூரணர் (உ.ஆ.)
திருக்குறள்
குறுந்தொகை- உ.வே.சாமிநாதையர்(ப.ஆ.)

(குறிப்பு: மதுரை சங்க இலக்கிய ஆய்வுமையமும் சிவகாசி ஸ்ரீகாளீஸ்வரி கல்லூரியும் இணைந்து 3திசம்பர் 2006 அன்று நடத்திய குறுந்தொகை பன்னாட்டு ஆய்வுக் கருத்தரங்கில் வாசித்த ஆய்வுக் கட்டுரை- மாநாட்டு மலரில் பதிப்பிக்கப்பட்டது.)

தொடர்பு: முனைவர் ச. கண்மணி கணேசன் (kanmanitamilskc@gmail.com)

## 18. புணர்ச்சி இலக்கணம்

*– பழமைபேசி*

புணர்ச்சி மாந்தனுக்கும் இன்றியமையாதது! மொழிக்கும் இன்றியமையாதது!!

இலக்கணத்தில் புணர்ச்சி என்பது சொற்கள் சேர்ந்து வருவதாகும். சொற்கள் தனிச்சொற்களாயிருக்கும்போது அவற்றை தனிமொழிகளென்றும், அவை சேர்ந்திருக்கும்போது அவற்றை தொடர்மொழிகளென்றுஞ்சொல்கிறோம். தொடர்மொழிகளில் இரண்டோ இரண்டுக்கு மேற்பட்ட சொற்களோ இருந்தாலும், அவற்றை ஒரு தனிச்சொல்லைப் போல ஒன்றாகத்தான் கொள்ளவேண்டுமேயன்றி, புணர்ந்துள்ள சொற்களை தனிச்சொற்களாக பிரித்தெழுதுதல் கூடாது. அவ்வாறு பிரித்துவிட்டால், பிரிந்தசொற்கள் ஒவ்வொன்றும் தனிமொழிகளாகவே கொள்ளப்படுமேயன்றி, தொடர்மொழியென சொல்லப்படமாட்டா.

தொடர்மொழிகள் பேச்சுவழக்கில் உள்ளவையே. நாம் பேசும்போது சிலசொற்களை தனித்தும் சிலவற்றை சேர்த்தும் பேசுவதை இயல்பாய்ச் செய்வோம். ஒருவருடைய பேச்சை கேட்டுப்பார்த்தாலோ அல்லது இருவர் பேசிக்கொண்டிருக்கும்போது அவர்களது பேச்சை கேட்டுக்கொண்டிருந்தாலோ அவற்றில் சில தனியாகப் பேசப்படுவதையும் சில சேர்த்துப் பேசப்படுவதையும் அறிந்துகொள்ளலாம். அவ்வாறு சொற்களை சேர்த்துப்பேசுவது எதற்காகவென்பதை ஆய்ந்துபார்த்தால், அது ஒருவர் சொல்லவரும் பொருளை சரியாகச் சொல்வதற்காகவே அவ்வாறு சேர்த்துச்சொல்கிறாரென்பதை அறிந்துகொள்ளலாம். அதாவது, சேர்த்துச் சொல்லவேண்டிய சொற்களை சேர்த்துச் சொல்லாமல், அவற்றை தனிச்சொற்களாய்ச் சொல்லிவிட்டால், சொல்லவந்த பொருள் வேறாகிவிடும். வேறாய்ச் சொல்வதானால், சொற்களை சேர்த்துச்சொல்லும்போது என்னபொருள்வருமோ அந்தப் பொருளானது, அவற்றை பிரித்துச்சொல்லும்போது வராது! ஆகையால், சேர்த்துச் சொல்லவேண்டிய தருணத்தில் சேர்த்துச்சொல்வதும், பிரித்துச்சொல்லும்போது பிரித்துச்சொல்வதும் தேவையானதாகும்.

நம்மைப் போலவே குழந்தைகளும் சிறுவர்களுங்கூட பேச்சில் இதை சரியாகச் செய்வரென்பதை அவர்களது பேச்சை கவனித்துப்பார்த்தால் எவரும் அறிந்து கொள்ளலாம். இது எதனால் இவ்வாறு நடக்கிறதென்றால், நம் மொழியை பேசத்தொடங்கும்போதே, அது சொல்லும் பொருள் என்னவென்பதை நாம் அறிந்து

கொள்வதனாலேதான். ஒரு குழந்தை 'அத்தைவீடு' எனச்சொல்கிறதென்றால், அந்த குழந்தைக்கு அது 'அத்தையினுடையவீடு' என்னும் பொருள் புரிந்திருக்கிறதென்பது பொருள். இதை சொல்லும்போது, 'அத்தை வீடு' என இரண்டு சொற்களாக அந்த குழந்தை பிரித்துச் சொல்லாதென்பதை எண்ணிப் பாருங்கள். அதேகுழந்தை, 'அத்தை வீடுவரைந்தார்' எனச்சொல்வதானால், 'அத்தை 'வீடு' ஆகியசொற்களுக்கிடையில் இடம் விட்டுப் பேசும். இங்கே 'அத்தை வீடுவரைந்தார்' என்று சேர்த்துச்சொல்வது பொருந்தாதென்பதை அந்தக் குழந்தை அறியும். அதேநேரத்தில், 'வீடுவரைந்தார்' என்பதில், 'வீடு' 'வரைந்தார்' ஆகிய இவையிரண்டும் சேர்த்துச்சொல்லப்படுவதைப்பாருங்கள்.

'அத்தைவீடு' 'வீடுவரைந்தார்' ஆகியவற்றில் இரண்டுசொற்கள் சேர்த்துச் சொல்லப்பட்டதால், இவை தொடர்மொழிகள். 'வீடு' என்றசொல்லானது, முதலில் 'அத்தை' என்றசொல்லுடன் சேர்ந்தும், பிறகு 'வரைந்தார்' என்றசொல்லுடன் சேர்ந்து தொடர்மொழியானது. 'அத்தைவீடு' என்பதில், இது 'அத்தை' என்னும் சொல்லுக்கு பின்னால் வந்து சேர்ந்தது. 'வீடுவரைந்தார்' என்பதிலோ முன்னாலேநின்று, 'வரைந்தார்' என்னுஞ்சொல்லை தன்னையடுத்து சேர்த்துக்கொண்டது. இப்படியாக, பேசப்படுவதை வரிவடிவத்தில் எழுதப்படும் போதும் துல்லியத்தைக் கட்டமைக்கவும், பொருட்சிதைவு நேர்வதைத் தடுக்கவும் புணர்ச்சி என்பது தமிழ்மொழியில் இன்றியமையாததாக இடம் பிடித்திருக்கின்றது.

“உலகத் தமிழ் ஆராய்ச்சி மாநாடு”, “உலகத் தமிழாராய்ச்சி மாநாடு”, ஆகிய இரு தொடர்மொழிகளுக்கிடையேயும் வேறுபாடுகள் உண்டு. முதலாவதில் தமிழ் என்பது உலகோடு புணர்ந்திருக்கின்றது. நுண்ணியத்தோடு அணுகும் போது, நாம் பேசுவதைத் துல்லியமாய் அது வரிவடிவத்தில் கட்டமைக்கவில்லை. ஒலிப்புச்சிதைவுக்கு ஆட்படுத்துகின்றது. மேலும், தமிழ் மொழியிலே உலகத்தமிழ் என்றோர் பகுப்பு இருந்து, அதற்கான ஆராய்ச்சி மாநாடு எனும் பொருளையும் கட்டமைக்கின்றது. ஆனால் இரண்டாம் தொடர்மொழியை நோக்குங்கால், ஒலிப்புச்சிதைவுக்கோ பொருட்சிதைவுக்கோ இடமில்லை. தமிழாராய்ச்சிக்கான மாநாடு, அது உலகளாவிய அளவிலே இடம்பெறுகின்றது என்பதை உறுதி செய்கின்றது.

செம்மொழி, நுண்ணியமொழி(sensitive language) என்கின்ற பதங்களெல்லாம் ஏன் இடம் பிடிக்கின்றன? மனத்தில் எண்ணுவதை, சிதைவின்றி வெளிப்படுத்தவல்ல மொழிகளெல்லாம் நுண்ணிய மொழிகளாகக் கருதப்படுகின்றன. ”பாடல்களுக்கு, கீர்த்தனைகளுக்கு உருது, தெலுங்கு பாவிக்கின்றனர், ஏனென்றால் அவை நுண்ணிய மொழிகள்” எனச் சொல்வோர் உண்டு. அஃதாவது, வெளிப்படுத்த எண்ணியதைக் குறைவான சொற்களில் ஐயம்

திரிபுக்கு அப்பாற்பட்டு வெளிப்படுத்த ஏதுவான மொழி என்பது அதன் பொருளாகும். அத்தகைய வல்லமை ஒரு மொழிக்கு எப்படிக் கிடைக்கும்? இப்படியான பிழைகளை, சிதைவுகளைப் பாவனையில் கொள்ளாத போது கிடைக்கும். அறிவார்ந்தவர்களே, பொறுப்புக்கிடமானவர்களே இப்படியானவற்றைச் செய்யத் தலைப்படும் போது மொழி வலுவிழந்து சிதைந்தே தீரும்.

தொடர்பு: பழமைபேசி (pazamaipesi@gmail.com)

# 19. நாளை மலரும் முல்லைகளே

*– முனைவர் ச. கண்மணி கணேசன்*

**இளமையே வளமைக்கு வழிகாட்டி**

"இளமையே வளமைக்கு வழிகாட்டி" இதைத்தான் விளையும் பயிர் முளையிலே" என்று முன்னோர் கூறினர்.

முளைவிடும் பயிரின் வேகத்தையும், வீரியத்தையும் கண்டு போற்றிப் பாதுகாத்தால்; விளைச்சலின் அளவும் தரமும் மேம்படும். ஆரோக்கியமாக முளைவிடும் பயிருக்குத் தேவையான நீரும், காற்றும், சூரிய ஒளியும், மணிச்சத்தும், தழைச்சத்தும் கொடுத்தால் தான் அது தக்க பலனைக் கொடுக்கும். ஒரு போகம் முடிந்து அடுத்த போகத்திற்குத் தேவையான விதைகளும் கிடைக்கும். இதற்கிடையில் களைகள் நீக்கப்பட வேண்டும். இந்தப் பயிர்ப் பாதுகாப்பு நடைமுறை உண்மை மனித வாழ்க்கைக்கும் பொருந்தும்.

இரண்டு வயது முதல் பன்னிரண்டு வயதிற்குள் முழு வளர்ச்சி அடையும் மூளையின் வேகத்திற்குள்; எத்தனை மொழிகளைக் கற்றுக் கொள்கிறோமோ அத்தனையளவு எதிர்காலத்தில் முன்னேறும் வழிவகைகள் மிகுதியாகும்.

பிள்ளைப்பருவம் என்று சொல்லப்படுகின்ற இக்கால கட்டத்தின் உணவுமுறை ஒரு மனிதனின் தேக ஆரோக்கியத்தை நிர்ணயிக்கும். இளமையில் தாய் நமக்குப் பழக்கப்படுத்தும் நாக்குருசி; அதாவது உணவுமுறை வளமான வாழ்விற்கு பிள்ளையார் சுழி ஆகும்.

குழந்தைப் பருவத்தில் பின்பற்றும் ஒழுக்க முறைகளே வாலிபப் பருவத்தின் வாழ்க்கையை வடிவமைக்கும். அதனால்தான் 'தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும்' என்று சுருங்கச் சொல்லி விளங்க வைத்தனர் நம் முன்னோர்.

இளமையில் பெற்றோர் வரையறுக்கும் பழக்க வழக்கங்களே பின்னாளில் போட்டி மிகுந்த உலகில் எதிர்நோக்க வேண்டிய பிரச்சினைகளைச் சமாளிக்க உதவுகின்றன.

இளமையில் தாத்தாவும் பாட்டியும் கொடுக்கும் உலகாயத உண்மை அறிவே வளரிளம் பருவத்துப் பேதை மனதின் சலனங்களைச் சமாளித்து எதிர்கொள்ள ஏதுவாகும்.

இளமையில் கிடைக்கும் நட்புவட்டாரம் தான் வயோதிகத்தை அர்த்தமுள்ளதாக்கி இன்பத்தை அசைபோட வைக்கும்.

ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையுமா என்று கேள்வி கேட்டு இளமை வாழ்வின் முக்கியத்துவத்தை உணர்த்தினார்கள் நம் முன்னோர்.

இளமை நடவடிக்கைகள்தாம் வளர்ந்தபின் நம் வெற்றிக்குரிய படிக்கட்டுகளாய் அமையும்.

இன்று குளத்தைத் தூர் வாரி வைத்தால் நாளை மழைவெள்ளத்தின் போது தேக்கிவைக்க உதவும்; நிலத்தடி நீர் பெருகும்.
இன்று தென்னை பயிரிட்டால் இறப்பிற்குள் தேங்காயும், இளநீரும் உண்ண வழியுண்டு.
இன்று பனை வைத்தால் அடுத்த சந்ததிக்கு பலன் கிடைப்பதை உறுதி செய்து விடலாம்.
இன்று களை எடுத்தால் நாளை மகசூல் மிகுதியாகும்.
இன்று சுற்றுச்சூழலைப் பாதுகாத்தால் நாளை நம்வாழ்க்கை மட்டுமின்றி அடுத்தடுத்த தலைமுறையும் நன்மை அடையும்.
இன்று படித்தால் நாளை தேர்வைப் பயமின்றி எதிர்கொள்ளலாம்.
இன்று சோம்பேறித்தனத்தை விட்டால் நாளை நாம் மட்டுமின்றி நம் சமுதாயமே பயனடையும்.

"எட்டு எட்டா மனுஷ வாழ்வைப் பிரிச்சுக்கோ;
நீ எந்த எட்டில் இருக்கிறேனு புரிஞ்சுக்கோ
முதல் எட்டில் ஆடாதது விளையாட்டல்ல;
நீ ரெண்டாம் எட்டில் கல்லாதது கல்வியுமல்ல"
என்ற திரையிசைப் பாட்டு ஒரு மனிதன் இளமையிலேயே தேகஆரோக்கியத்திற்கும், கல்விக்கும் கொடுக்க வேண்டிய முக்கியத்துவத்தைச் சுட்டுகிறது.

ஒன்று செய்; நன்றே செய்; இன்றே செய் என்ற வழிகாட்டல் வளமைக்குரியது; இளமைக்குரியது

கட்டுமான உறுதிக்கு அடித்தளம் அடிப்படையாய் அமைவது போல; வளமான வாழ்விற்கு இளமை அடிப்படை ஆகிறது.

---

**காலம் அறிதல்**

விலைமதிக்க முடியாத பொருள்;
ஒருமுறை தொலைத்தால் திருப்பிக் கிடைக்காத பொருள்;
யாருக்காகவும் காத்து நிற்காத பொருள்;
அது தான் காலம். இதை உலகமக்கள் அனைவரும் ஒப்பவே உணர்ந்து இருக்கின்றனர்.

காலம் பொன் போன்றது; என்ற பழமொழி தமிழில் வழங்குவது. ஆங்கிலத்திலும் காலத்தின் மகிமை போற்றும் பழமொழி உண்டு.
Time And Tide Wait For No Man

உதவி செய்யும்போது கூட வள்ளுவர் காலமறிந்து தான் செய்ய வேண்டும் என்கிறார்.
"காலத்தினாற் செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது"
என்ற குறள் காலம் செய்யும் மாயம் பற்றிப் பேசுகிறது. சிறிய உதவியை உலகைக் காட்டிலும் பெரிதாக்குவது தக்க காலம். 'காலமறிதல்' என்று ஒரு தனி அதிகாரமும் வகுத்துள்ளார் வள்ளுவர். அவரது காலத்தில் தகுந்த காலம் பற்றிய அறிவுரை அரசர்களுக்குத் தேவைப்பட்டது. ஆம்; அவர் பொருட்பாலின் அரசியல் பற்றிய பகுதியில் தான் காலமறிதல் பற்றிப் பேசுகிறார்.
"பகல்வெல்லும் கூகையைக் காக்கை இகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது"
என்கிறார். பகற்பொழுதாக இருந்தால் காக்கை கூகையை வென்றுவிடும் அது காக்கைக்கு உகந்த காலம். கூகைக்குக் காலையில் கண் தெரியாது. அதுபோல் பகைவெல்ல நினைக்கும் மன்னன் காலமறிந்து செயல்பட வேண்டும் என்பது அவரது அறிவுரை.

'ஓடுமீன் ஓட உறுமீன் வரும்வரை' காத்திருக்கும் கொக்கு தகுந்த காலம் கருதியே காத்திருக்கும். அஃறிணை உயிர்களே தகுந்த காலத்திற்காகக் காத்திருக்கும் போது ஆறறிவு கொண்ட மனிதன் காலம்கருத வேண்டாமா என்ன?!

இன்றைய அவசர உலகில்;
ஒரு கிராமமாகி விட்ட உலகில்;
போட்டி நிறைந்த உலகில்;
காலமறிந்து கடமையாற்ற வேண்டியவர் அரசு அதிகாரத்தில் இருப்பவர் மட்டுமல்ல. சிறுவர் முதல் முதியோர் வரை சரியான நேரத்தைக் கடைபிடிக்க வேண்டிய கட்டாயம் உள்ளது.
சரியான நேரத்திற்குள் பள்ளிப்பேருந்தைப் பிடிக்க வேண்டும்; இல்லையெனில் பிள்ளைக்கும் சிரமம்; பெற்றோர்க்கும் சிரமம்.
சரியான நேரத்திற்குள் சென்று அலுவலக வருகைப் பதிவேட்டில் கையெழுத்திட வேண்டும்; இல்லையேல் மேலாண்மையாளரின் ஒழுங்கு நடவடிக்கைக்கு ஆளாக நேரிடும்.
சரியான நேரத்திற்குள் சென்றால் தான் தனியார் பேருந்தில் அமர இடம் கிடைக்கும்; இல்லையேல் நின்று கொண்டே பயணிக்க வேண்டும்.
சரியான நேரத்திற்குள் சென்றால் தான் தொடர்வண்டியில் ஜன்னலோர இருக்கை கிடைக்கும்; இல்லையேல் பயணம் முழுமையும் பச்சைபூமியும், நீலவானமும் பார்த்து ரசிக்க இயலாது.

அதிகாலையில் எழுவதிலிருந்து இரவு தூங்கச் செல்லும் வரை நமது அன்றாடச் செயல்களும் கூட உரிய காலத்தில் செய்ய வேண்டியவையே.

எட்டு எட்டாக அடிவைத்து முன்னேறும் ஒவ்வொருவரும் எந்த எட்டில் என்ன செய்ய வேண்டுமோ; அதைக் காலம் கடத்தாமல் செய்து முடிக்க வேண்டும்.

சராசரி மனிதனும்;
வாழ்க்கையில் முன்னேறத் துடிக்கும் சாமானியனும்;
தேடிச் சோறு நிதம் தின்று; பல சின்னஞ்சிறு கதைகள் பேசி; நரைகூடிக் கிழப்பருவம் எய்தினும்; ஓடி உயர நினைக்கும் மனிதக்கூட்டத்தின் கூறானவனும் காலம் கருதியே செயல்பட வேண்டும்.

உண்ணும் போதும்;
உடுத்தும் போதும்;
இயற்கையின் புதிர்களை அவிழ்க்கும் போதும்;
இன்பம் எங்கே எங்கே என்று தேடும் போதும்;
தேடிக் கிடைத்த இன்பத்தை அனுபவிக்கும் போதும் காலம் கருதியே செயலாற்றுவது அவசியம்.

இன்று காலம் அறியாமல் வாழ்ந்தால் இளமை இனிமையாகத் தோன்றும்; ஆனால் முதுமை கசக்கும். எனவே

காலமறிந்து செயல்படுவோம்; வெற்றியை நோக்கி முன்னேறுவோம்.

---

## எண்ணித் துணிக

"எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
எண்ணுவம் என்பது இழுக்கு"

ஆம். எண்ணியே துணிய வேண்டும்; எண்ணாது;
அதாவது சிந்திக்காது
ஆலோசிக்காது
திட்டமிடாது
யோசிக்காது
செயல்படத் துணிந்தால்; செயலில் எப்படி வெற்றி கிட்டும்?
வெற்றியின் முதல் படியே சிந்தனை தான் - எண்ணம் தான்.

எந்தச் செயலையும் செய்யும் முன்; எப்படிச் செய்ய வேண்டும்?
எம்முறையில் தொடங்க வேண்டும்?
யாரை அணுக வேண்டும்?
என்பவற்றையெல்லாம் திட்டமிட்டு; பின்பே அதைத் தொடங்க வேண்டும். அதுவே செயல் ஆற்றும் முறை.

எண்ணித்துணிதல் என்பது பெரிய பெரிய அரசு அலுவல்களுக்கு மட்டும் தான் தேவை என்று எண்ண வேண்டாம். நமக்குத் தகுந்தாற்போல் நம் வீட்டுக் காரியங்களுக்கும், நம் வாழ்க்கைக் கடமைகளுக்கும், முடிக்க வேண்டிய கருமங்களுக்கும் எண்ணியே- திட்டமிட்டே செயல்பட வேண்டும்.

மாணவப் பருவத்தை எடுத்துக் கொள்வோம்; தேர்வு முறையை நோக்குவோம். பாடங்களை எப்படிக் கூறுகளாக்கிக் கொள்ள வேண்டும்? எந்தெந்தக் கால அளவையில் எந்தெந்தக் கூறினை எந்த அளவிற்குக் கற்பிக்க வேண்டும்? என்று ஆசிரியப் பெருமக்கள் எண்ணித் துணிந்தே செயல்படுகின்றனர்.

மாணவருலகம் திட்டமிட்டுப் படித்தால்; திட்டமிட்டுப் பயிற்சி செய்தால் போட்டித் தேர்வுகளை எல்லாம் கூட நடுங்காமல் எதிர்கொள்ள முடியும்.

சமுதாயப் பிரச்சினைகளானாலும் எண்ணியே செயலாற்றத் துணிய வேண்டும். பாரத நாட்டின் விடுதலை வரலாற்றைத் திரும்பிப் பாருங்கள்...படைபலமும், பணபலமும் கொண்ட வெள்ளையனை வெளியேற்ற அகிம்சையே சிறந்த ஆயுதம் என்று சொன்ன காந்தியடிகளின் கூற்று; அவரது எண்ணித் துணிந்த செயலுக்கு ஏற்ற எடுத்துக்காட்டு. வீணாக வன்முறையில் ஈடுபட்டு நாட்டுமக்களைப் பெருமளவில் உயிரிழக்க வைக்கக் கூடாது என்ற அவரது தீர்க்கமான சிந்தனையின் விளைவே நமது விடுதலை.

சுதந்திர இந்தியா எத்தனை ஐந்தாண்டுத் திட்டங்களைத் தீட்டியுள்ளது?
அத்திட்டங்களின் பயனாக எத்தனை அணைகளைக் கட்டியுள்ளோம்?
எத்தனை தொழிற்சாலைகளை நிறுவியுள்ளோம்?
பசுமைப்புரட்சியின் பலனுக்குரிய திட்டம் என்ன?
வெண்மைப் புரட்சியில் வெளுத்து வாங்கினோமா?
உணவுப் பிரச்சினையில் தன்னிறைவு பெற்றதாகக் கூறுகிறார்களே?
காரணம் என்ன? என்றெல்லாம் சிந்தித்துப் பார்த்தால் அந்நடைமுறைக்குப் பின்னால் இருக்கும் ஆழமான சிந்தனையும், திட்டவரைவும் புலப்படும்.

அரசு செயல்பாடுகளிலிருந்து, அன்றாட இல்லக் கடமைகள் வரை அனைத்து நிலைகளிலும் எண்ணித் துணிவதே இலக்கை அடைய வழி வகுக்கும். அவ்வாறன்றி எண்ணாது செயலில் இறங்கிவிட்டுப் பின் எவ்வாறு இதனை முடிப்பது? என்று திணறுவது செயல்திறன் குறைபாடு.

ஆழத்தை அறியாது ஆற்றில் இறங்கிவிட்டுப் பின்பு எப்படிக் கடப்பது என்று நிதானிக்க முடியுமா? ஆற்றோடு போக வேண்டியது தான்.

எண்ணித்துணிந்த பெற்றோரே இல்லறத்தில் வெற்றி அடைகின்றனர்.
எண்ணித்துணிந்த மாணவனே தேர்வில் வெற்றி அடைகிறான்
எண்ணித்துணிந்த அரசியல்வாதியே பொதுவாழ்வில் வெற்றி அடைகிறான்.

நாமும் எண்ணித்துணிந்து செயல்பட்டு எல்லாவற்றிலும் வெற்றி அடைவோம்.

---

## வாய்மையே வெல்லும்

தலைப்பைக் கேட்டவுடன் என்றோ ரசித்த திரைப்படப் பாடலின் ஒலி மனதுக்குள் அலறுகிறது.

"வாய்மையே வெல்லுமடா- அதன்
வழியே நாமும் செல்வோமடா"...

இவ்வடிகள் உச்சத்தொனியில் உலகை அழைத்து ஒரு செய்தியைக் கூறுகின்றன. அது எந்த அளவுக்கு உண்மை என்பது மேலும் ஆய்தற்குரியது.

வாய்மை என்றால் என்ன?

வள்ளுவரைக் கேட்டுப் பார்ப்போம். வரையாது கருத்துக்களை வாரி வழங்கும் வள்ளல் கூறுகிறார்.

"வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
தீமை இலாத சொலல்"

எந்த ஒரு தீமையும் விளைவிக்காத சொற்களைப் பேசுவது வாய்மை என்று பொருள் தொனிக்கிறது.

அப்படிப்பட்ட சொற்களை எப்படி இனம் காண்பது? அதற்கும் வள்ளுவரே வழிகாட்டுகிறார்.

“தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்”

வாய்மை இல்லாத சொற்களையும் செயல்களையும் முறையே - பேசினால்; செய்தால்- நம் நெஞ்சே நம்மைச் சுடும். எது வாய்மை? எது பொய்மை? என்பது அவரவர் நெஞ்சம் அறிந்து செய்யும் முடிவு.

உலக வரலாற்றில் எத்தனை எத்தனையோ மனிதர்கள் வெற்றிப் படிகளில் ஏறி உலா வந்துள்ளனர். இந்த வெற்றிகளுக்கெல்லாம் அடிப்படையாய் அமைந்தது வாய்மை.

உதாரணமாக;

இருநூறு ஆண்டுகளாக அந்நியரிடம் அடிமைப்பட்டுக் கிடந்த பாரதம் சுதந்திரப் போரில் வெற்றி பெற்றதன் அடிப்படை என்ன?

"கத்தியின்றி இரத்தமின்றி யுத்தமொன்று வருகுது
சத்தியத்தின் நித்தியத்தை நம்பும் யாரும் சேருவீர்"

என்று நாமக்கல்லார் பாடிய பாடலின் முதலடி அகிம்சை போர் பற்றிப் பேசுகிறது. இரண்டாமடி வாய்மை நிலைபெறும் என்று கருத்துரைக்கிறது.

அகிம்சையும் வாய்மையும் ஒன்றா? அல்லது உடன்பிறப்புக்களா?

எப்படியிருப்பினும் பாரதத்தின் சுதந்திரப்போர் வெற்றியில் அகிம்சைக்குப் பங்குண்டு என்பது உறுதி. அகிம்சையை வலியுறுத்திய காந்தியடிகள் தன் சுயசரிதையை சத்தியசோதனை என்று தான் பெயரிட்டு அழைக்கிறார். இப்போது அகிம்சைக்கும் வாய்மைக்கும் இடையே ஒரு தொடர்பு இழையோடுவதாகத் தான் தெரிகிறது.

பாரதத்தின் பண்பாட்டுச் சின்னமாம் இராமாயணம் கூறுகிறது:
"அறம் வெல்லும்; பாவம் தோற்கும்" என்று. அதுதான் பாவிகம், அக்காப்பியம் நமக்குக் கூறும் தலைமைக் கருத்து இது.
அறங்களுள் தலையாயது வாய்மை.
அறம் வெல்லும் = வாய்மை வெல்லும்

அந்த வாய்மையின் சின்னமாக; அஹிம்சாமூர்த்தியாகக் காட்சி அளிக்கிறான் இராமன். காப்பிய முடிவில் இராமனின் வெற்றி- அறத்தின் வெற்றியை; வாய்மையின் வெற்றியையே பறைசாற்றுகிறது.

மகாபாரதப் போரில் பொய்மையும் வாய்மையாகி வெற்றி பெறும் விந்தையைக் காண்கிறோம். துரோணரை வீழ்த்த தருமன் செய்யும் சூழ்ச்சி- "அஸ்வத்தாம ஹத குஞ்சர" என்ற தொடரின் சொற் பிரயோகத்தில் அவன் காட்டிய தொனி பேதம்- துரோணரைத் தன் மகன் அசுவத்தாமன் இறந்து விட்டான் என்று ஒரு பொய்யை நம்பவைத்தது. அவரது இறப்புக்கு வழி வகுத்தது. பாண்டவர்களின் பொறுமைக்கும், எளிமைக்கும், நற்பண்புக்கும், நல்லுணர்வுக்கும் வெற்றி கிட்ட ஏதுவாய் நின்ற கண்ணன் காட்டிய அறவழி இது.

புரை தீர்ந்த = குற்றமற்ற

குற்றமில்லாத நன்மை கிடைக்குமானால் பொய்யையும் மெய்யாக்கி மதிக்கலாம் என்று வழிகாட்டுகிறது மகாபாரதம்.

வழிகாட்டிய கண்ணன் வஞ்சகனாக நம் கண்களுக்குக் காட்சி அளிக்கிறான். ஆனால் திருவள்ளுவர் நடப்பியல் அனுபவத்தோடு அதை மனப்பூர்வமாக ஏற்றுக்கொள்கிறாரே.

"பொய்மையும் வாய்மையிடத்த புரை தீர்ந்த

நன்மை பயக்கும் எனின்"

என்று வாய்மைக்கு இலக்கணம் வகுத்துள்ளார். இதனால் தான் வாய்மை என்பது யாது என்பதை நம் மனசாட்சியைக் கேட்டு முடிவு செய்ய வேண்டும் என்று பெரியோர் கூறுகின்றனர்.

மனசைத் தொட்டுச் சொல்லுங்கள்; வாய்மை வெல்லும் அல்லவா?!

வாய்மையே வெல்லும்.

---

**சினம் என்னும் சேர்ந்தாரைக் கொல்லி**

பிறவிகளுள் உயர்ந்தது மனிதப் பிறவி.

'அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது' என்று பாடினார் ஔவைப்பிராட்டி. மனிதராய்ப் பிறந்த நாம் இப்பிறவியின் மேன்மையை அறிந்து புரிந்து வாழ்கின்றோமா? இல்லை. மனிதப் பண்புகளையும், மேன்மையையும் மறந்து வாழ்கின்றோம். இக்கேட்டிற்குத் துணையாகும் கருவிகளுள் ஒன்று சினம்.

சினம் ஏற்படும் பொழுது மனிதனின் மென்மைப் பண்புகளும், மேன்மைப் பண்புகளும் அழிகின்றன. இதனால் தான் வள்ளுவர் 'தன்னையே கொல்லும் சினம்' என்கிறார். வள்ளுவர் நோக்கில் சினம் கொலைக்குப் பயன்படும் ஆயுதம் ஆகிறது.

விலங்குகளுக்குச் சினம் ஏற்பட்டால் சுற்றியுள்ள அனைத்துப் பொருட்களும் அழிகின்றன. யானையின் சினம் அன்பு கொண்டோரையும் வாழ விடவில்லை. பாரதியார் ஒவ்வொரு நாளும் கோயில் யானைக்கு உண்ணக் கொடுத்தார். ஆனால் ஒரு நாள் மதம் பிடித்துச் சினம் கொண்ட யானை தனக்கு உணவளித்தவர் என்றும் பாராது அவரைத் துதிக்கையால் வளைத்துக் கீழே தள்ளியது. இச்சம்பவம் பாரதியாரின் இறப்புக்குக் காரணமாய் அமைந்தது.

பாண்டியன் நெடுஞ்செழியன் கோவலனைக் கள்வன் என்று எண்ணிய போது 'கொன்றச் சிலம்பு கொணர்க' என்று ஆராயாமல் கூறியதற்கு அடிப்படையானது சினம். தன் தேவியின் சிலம்பைத் திருடியவன் மேல் கொண்ட சினம்- தன் தேவி தன் மேல் கொண்ட சினத்தைத் தணிக்க மேற்கொண்ட

அவசரம்- அனைத்தும் சேர்ந்து ஒரு பத்தினியைப் பதைத்து எழ வைத்தது; பாண்டியன் அழிவுக்குக் காரணம் ஆனது; அவன் மனைவி உயிருக்கும் உலை வைத்தது; ஒரு மாநகரின் அழிவுக்கு அடிப்படை ஆனது; மாறாத பழியைப் பாண்டியன் குலத்திற்கு ஏற்படுத்தியது.

கம்பராமாயணத்தில் மாபெரும் வலிமை பெற்றவன் எனப் புகழ் பெற்றவன் இராவணன். தங்கை துர்ப்போதனையால் சீதையைக் கவர்ந்தான். தன்னை இடித்துரைத்தோர் அத்தனை பேரிடமும் சீற்றம் கொண்டான். தம்பியர் கூறிய அறிவுரையைச் சினத்துடன் மறுத்தான். விளைவு? இலங்கை அழிந்தது; அரக்கர் குலம் அழிந்தது; இராவணன் தானழிந்து; தன் சுற்றம் முழுவதும் அழியவும் காரணமாகி விட்டான். அதனால்தான் வள்ளுவர்,

"சினம் என்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனம் என்னும்
ஏமப் புணையைச் சுடும்." என்று பாடியுள்ளார்.

இன்றைய நாகரிக உலகில் குடும்பப் பிளவுகளுக்குக் காரணமாவது சினம். குடும்பத் தலைவனோ, அன்றித் தலைவியோ, அல்லது பிற பெரியோரோ; ஆழமாகச் சிந்திக்காமல் செயல்படுவதும்; சினத்தால் அழிவான செயல்பாடுகளை மேற்கொள்வதும்; குடும்பத்தை அழித்துத் தம்மையும் அழிக்கிறது.

சினம் பொறாமைக்குக் காரணமாய் அமைகிறது; பேராசையைப் பெருக்குகிறது; அறிவிழக்கச் செய்யும் அவசர புத்தியைக் கொடுக்கிறது. இவ்வாறு சினம் விளைவிக்கும் கேடுகளை எங்கு நோக்கினும் வரலாற்றிலும், இலக்கியங்களிலும், கதைகளிலும் காணலாம்.

---

## தன்னையே கொல்லும் சினம்

சிந்திக்க வைக்கும் தலைப்பு; வள்ளுவரின் வாய்மொழியை எடுத்துக்காட்டி; அதுபற்றி ஆராய்வதும் ஒரு விறுவிறுப்பான, அறிவுப்பூர்வமான பொழுதுபோக்கு தான்.

"தன்னைத் தான் காக்கின் சினம் காக்க காவாக்கால்
தன்னையே கொல்லும் சினம்"

ஒருவன் தன்னைக் காத்துக்கொள்ள வேண்டும் என்று நினைத்தால் தனக்குச் சினம் ஏற்படாதவாறு பொறுமையைக் கடைப்பிடிக்க வேண்டும். இல்லையேல் தன் சினத்தாலேயே அவன் அழிவான்.

வள்ளுவர் கொள்கைக்குப் புராணக் கதைகளைத் துணைக்கு அழைத்துப் பார்ப்போம். 'ஆதியந்தம் இல்லா அருள்ஜோதி' என்று அழைக்கப்படும் சிவபெருமான் சினம் கொள்கிறார்; தக்கன் யாகத்தின் போது........ விளைவு? தக்கன் அழிகிறான்; சந்திரன் தேய்கிறது; பிரம்மனின் தலை கிள்ளியெறியப் படுகிறது. சிவன் சினம் கொண்டதால் அழியவில்லையே!

இங்கே சிவன் முழுமுதற் பொருள் எனப்படுவதால் அவனைப் பற்றி மனிதன் கட்டிய கதையை விட்டு விடலாம்.

கண்ணனாக அவதரித்தார் பெருமாள்; அகிம்சையை ஆதரித்தார். பொறாமையால் அசூயை கொண்ட சிசுபாலனின் ஏச்சும், பேச்சும் எல்லை மீறியபோது சினம் கொண்டார். அவரது சக்கரப்படை சிசுபாலனின் தலையைத் துண்டித்தது. கண்ணன் கொண்ட சினமும் கொண்டவனைக் கொல்லவில்லை. அகிம்சைக்கும் எல்லை உண்டு என்று காட்டுகிறது வைணவம்.

அதர்மம் தலையெடுத்து ஓங்கி வளர்ந்துவிட தர்மத்தை நிலைநாட்ட முனையும் போதெல்லாம் அவதாரம் எடுக்கிறான் ஆண்டவன். நரசிம்மமாகி வந்து இரணியனின் குடலைக் குதறிக் குலைக்கும் போது சினத்தின் உச்சக் கட்டத்தைப் பார்க்கிறோம். இங்கும் தன்னையே கொல்லும் சினம் என்ற வாக்கின் பெறுமதி புரியவில்லை.

சினம் என்றவுடன் நினைவுக்கு வருகிறார் துர்வாசமுனிவர். அவரது சினத்தால் வாழ்வில் சாபத்திற்குள்ளாகி அல்லல்படுபவள் சகுந்தலை தான். துர்வாசரை அவரது சினம் துன்புறுத்தியதாகக் கதைகள் இல்லை. அப்படியாயின் தன்னையே கொல்லும் சினம் என்ற வள்ளுவர் வாக்கு அர்த்தமற்றது தானா?

எங்கு திரும்பினாலும் புராணங்கள் நம்மைக் கைவிட்டு விடுகின்றன. இலக்கியங்களுக்கு வருவோம். கண்ணகி சினம் கொள்கிறாள்; மதுரை தான் அழிகிறது. அவளை தேவலோகத்திலிருந்து புஷ்பக விமானம் வந்தல்லவா அழைத்துச் செல்கிறது. தமிழின் முதன்மைக் காப்பியமே நமது தலைப்புக்குப் பெரிய முட்டுக்கட்டை போடுகிறது.

அப்படியானால் வள்ளுவர் ஏன் அப்படிக் கூறினார்?
தமிழகத்தின் ஒப்பற்ற நீதிநூலாசிரியர் கூற்று எப்படித் தவறாகும்?

நாம் இதுவரை பார்த்த கதைகளில்;
சிவபெருமான் செருக்கை எதிர்த்துச் சினம் கொண்டார்.
திருமால் சிசுபாலனின் பொறாமையை எதிர்த்துச் சினம் கொண்டார்.
நரசிம்மம் அகந்தையை எதிர்த்துச் சினம் கொண்டது.
துர்வாசர் கடமை தவறிய அலட்சியத்தை நோக்கிச் சினம் கொண்டார்.
கண்ணகி அநீதியை எதிர்த்துச் சினம் கொண்டாள்.
இவர்களில் யாருமே தம்மைக் காத்துக் கொள்வதற்காகச் சினம் கொண்டவர் இல்லை. வள்ளுவரின் இக்குறளுக்குப் பொருள் காணும் கோணத்தை மாற்றிப் பார்ப்போம். வான்புகழ் வள்ளுவர் குறளின் சரியான பொருள் எது?

'தனக்கு ஆதாயம் வேண்டும் என்பதற்காக; தன்னலத்திற்காகச் சினம் கொள்பவன்; அச்சினத்தாலேயே அழிவான்; அவன் உய்ய வழியில்லை'.

தலைப்புக் குறளின் ஆழமான பொருள் இது தான்.

ஆகையால் அவையோரே, சுயநலம் நோக்கிச் சினம் கொள்ளாதீர்கள்.

---

**அகநக நட்பது நட்பு**

நட்பு- இது அன்பின் பலமுகங்களில் ஒன்று. முகம் மட்டும் மலர்ந்தால் அது உண்மையில் நட்பன்று. மனதை மலரவைக்கும் நட்பே உண்மையான நட்பு.

தூயநட்பு துன்பக்காலத்தில் துணைக்கரம் நீட்டும்;
இழப்புக் காலத்தில் ஈடுகட்ட முற்படும்;
எதிர்பார்க்கும் காலத்தில் எண்ணியதை முடிக்க உதவும்.

இத்தகு பெருமைமிகு நட்புக்கு வரலாற்றில் சான்றுகள் உள்ளன.
இலக்கியங்களிலும் எடுத்துக்காட்டுகள் உள்ளன.
வாழ்க்கையில் ஆங்காங்கே வளமார் உதாரணங்களும் உள்ளன.

"காவினம் கலனே சுருக்கினம் கலப்பை
எத்திசைச் செலினும் அத்திசைச் சோறே"
என்று வீறாப்புப் பேசிய ஔவையார் அதியமானிடம் கொண்ட அன்பு நெருக்கமான நட்பாகவே மலர்ந்தது. அந்த நட்பை அரிதாகப் போற்றிய அதியமான்

கிடைத்தற்கரிய நெல்லிக்கனியை ஔவைக்கே கொடுத்து மகிழ்ந்தான். ஔவை தன் பாணர் குழுவுடன் அதியனின் அரண்மனையிலேயே தங்கியிருந்தாள். அதியனின் மகன் பிறந்தபோது அந்த மகிழ்ச்சியில் திளைத்தாள். அதியனின் நாட்டைப் போர்மேகம் சூழ்ந்தபோது அவனுக்காகத் தூது சென்றாள். துன்பக் காலத்தில் துயர் துடைத்த இச்செய்கை அவர் கொண்ட நட்பின் அடையாளமாக அமைந்தது. அவன் இறந்தபோது அவள் கையற்று ஏங்கி அழுத கண்ணீர் இன்றும் அவளது பாடலை ஈரமாக்கி நனைத்துக் கொண்டு இருக்கிறது.

தந்தை பாரியைப் பறிகொடுத்த பெண்மக்கள் நிலவைப் பார்த்து அழுதனர். மலையைப் பார்த்து மலைத்தனர். ஆதரவில்லாது தவித்த அவர்கட்கு பாரியின் நண்பர் கபிலர் தன் 'புலனழுக்கற்ற அந்தணாள'த் தன்மையுடன் உற்ற துணையானார். ஒவ்வொரு மன்னனையும் நாடிச் சென்று அவர்கட்கு வரன் வேண்டி நின்றார். பெற்ற பெண்ணுக்குத் தந்தை மணமுடிப்பதே பேரிடரான விஷயம். உற்ற தோழன் உயிர் போன பின்னால்; அவன் பெற்ற மகளிர் இருவரும் கலங்குவது கண்டார்; தான் கலங்கினார்; மூவேந்தரின் பகையையும் பொருட்படுத்தவில்லை. துணிவுடைய செந்நாப்புலவரல்லவா? ஓயவில்லை. தயங்கிப் பின்வாங்கிய மன்னர்கள் ஒவ்வொருவரையும் தாண்டித் துணிவுடைய மணமகனைக் கண்டுபிடித்தார். தன் கடமையை முடித்தார். அவர் அகநகக் கொண்ட நட்பு; அந்நண்பனை இழந்த பின்னரும் அவனது சந்ததியின் துயர் துடைத்தது.

கோப்பெருஞ்சோழனுக்கும் பிசிராந்தையார்க்கும் இடையிலிருந்த நட்பு அன்றைய தமிழ்ச் சமுதாயத்தை வியப்பில் ஆழ்த்தியது. வயோதிகக் கோளாறோ? தலைமுறை இடைவெளியோ? தான் பெற்ற பிள்ளைகளுடன் மனமாறுபாடு அடைந்தான் கோப்பெருஞ்சோழன். அன்றைய சமுதாயத்தில் அவனுக்கு அது பெருத்த அவமானமாகத் தோன்றியது. (இன்றைய சமுதாயத்தில் தான் இருக்கவே இருக்கிறது முதியோர் இல்லம். அன்றைய சமுதாயத்தில் அப்படி எதுவும் இல்லை.) அதனால் கோப்பெருஞ்சோழன் தன் உயிரை மாய்த்துக் கொள்ள வடக்கிருந்தான்; அதாவது உண்ணாநோன்பு இருந்து உயிரை விட்டான். தானமர்ந்த இடத்தினருகே தன் நண்பர்- தனக்காக- தன்னைப்போல் வடக்கிருக்க வருவார் என்ற நம்பிக்கையுடன் இடம் ஒதுக்க வைத்தார். அவரது எதிர்பார்ப்பின் படியே பிசிராந்தையாரும் வந்தார்; வடக்கிருந்து உயிரை விட்டார். இது பண்டைத் தமிழகம் கண்ட அகநக நட்ட அன்பின் வரலாறு .

இன்றைய சூழலில் மனிதர்க்கிடையில் ஏற்படும் நட்பைவிட நாடுகட்கு இடையே ஏற்படும் நட்பு முக்கியத்துவம் வாய்ந்தது. இன்னொரு உலகமகா யுத்தத்தைத் தவிர்க்க நாடுகட்கு இடையிலான நட்புறவு மட்டுமே வழிகோலும்.

இந்த நட்பை வளர்க்கத்தான் விளையாட்டுப் போட்டிகளும், கலாச்சார விழாக்களும், நடைபெறுகின்றன. தூதுக்குழுக்கள் இயங்குகின்றன. இந்நட்பும் அகநக நட்பதாக இருந்தால் மட்டுமே அமைதி விளையும்.

---

## சிறு குடும்பம்

அளவான குடும்பத்தை தோட்டம் போன்றது எனலாம். தோட்டத்திலுள்ள மலர்கள், நிழல், மணம், குளிர்ச்சி முதலியவை இன்பம் பயக்கும். ஆனால் காட்டில் நிழலும் குளிர்ச்சியும் இருந்தாலும் உடன் விலங்குகள், இருள் முதலிய அச்சத்திற்குரிய ஏதுக்களும் இருக்கும். இதனாலேயே இன்பத்திற்குரிய ஆதாரமாகத் தோட்டத்தை அரசு குறிக்கிறது; “சிறு  குடும்பம் சிங்காரத் தோட்டம்" என்கிறது. குடும்பத்தின் அளவு பெரிதாகும் பொழுது அது காட்டைப்போல் சில துன்பங்களையும் கொண்டிருக்கும்.

அளவான குடும்பம் இன்பம் பயக்கும் என்ற எண்ணம் மனிதனின் மனதில் எப்போது தோன்றியது என்பதை இலக்கியங்களின் வாயிலாக நாம் அறிய முடியும். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழ் இலக்கியங்களில் சிறு குடும்பமே போற்றப்படுகிறது. பண்டைத் தமிழகத்தில் மனிதன் சிறுகுடும்பத்தைப் பற்றி அறிவுபூர்வமாகச் சிந்தித்து எழுதவில்லை. எனினும் உணர்வுபூர்வமாக சிறுகுடும்பத்தின் நன்மைகளை அவன் அறிந்து இருந்தான் என்பதற்குச் சங்க இலக்கியங்கள் சான்றாகின்றன. காதல்பாடல்கள் தலைவனுக்கோ தலைவிக்கோ இருந்த உடன்பிறப்புகள்  பற்றிப் பேசுவதே இல்லை.

திருமணம் முடிந்த தம்பதியர் வாழ்வில் ஒரு குழந்தையோடு மகிழ்ந்திருக்கும் காட்சியே சித்தரிக்கப்படுகிறது. ஒன்றுக்கு மேற்பட்ட குழந்தைகள் நடைமுறையில் காணப்பட்டாலும் கவிதையழகு, இன்பம், இனிமை கருதி கவிதையில் அது சுட்டப்படவில்லை. இதனால் இன்பத்திற்கும், இனிமைக்கும், அழகிற்கும் ஆதாரமாக அமைவது ஒரு குழந்தையே. அந்த எண்ணிக்கைக்கு மேற்பட்டுச் சென்றால் கவிதைக்களம் மறுதலையான பயனைத் தரும் என்பதை இலக்கியவாதிகள் உணர்ந்துள்ளனர்.

நற்றிணையில் இடம் பெறும் குழந்தைக்காட்சி: தேன்கலந்த பால் சோற்றினை உண்ண மறுக்கும் பெண் குழந்தையைப் பூங்கொம்பு கொண்டு ஒறுத்து ஓச்சும் தாயின் செயலாக  அமைந்துள்ளது. இது பெருஞ்சித்திரனாரின்

அளவுக்கதிகமான பெரிய குடும்பச் சூழலுடன் ஒப்பிட்டு நோக்கற்குரியது. பாலின்றித் தவிக்கும் கைக்குழந்தைக்கு நிலவு காட்டி ஏமாற்றும் தாய் ஒருபுறமிருக்க; வளர்ந்த குழந்தை கஞ்சிக் கலயத்தையும், கூழ் பானையையும் திறந்து பார்த்து முகம் வாடித் திரும்பும் காட்சி ஒருபுறம்; குப்பைக் கீரையை உப்பின்றி வேகவைத்து பிறர் காணாவண்ணம் கதவடைத்து உண்ணும் காட்சி முதலியவற்றை நெஞ்சைத் தொடும் வகையில் பாடியுள்ளார். பாடலில் பெருஞ்சித்திரனாரின் துன்பம் இடம்பெறுங்கால் அளவுக்கு மீறிய பெருத்த சுற்றத்தினரும் காட்டப்படுகின்றனர்.

இன்பத்தைச் சுட்டும் பொழுதெல்லாம் தமிழ்க் கவிதை சிறுகுடும்பத்தை; ஒரு குழந்தையைச் சித்தரிக்கிறது. துன்பத்தைச் சுட்டும் பொழுதெல்லாம் தமிழ்க் கவிதை பெருஞ் சுற்றத்தையே காட்டுகிறது. உடுக்க நல்ல உடையின்றி; உண்ண உணவின்றி வாடும் பாடினி, விறலி, சிறுபாணன், பெரும்பாணன், கூத்தர், பொருநர் அனைவரும்; வறுமை, துன்பம், பெருஞ் சுற்றம் முதலியவற்றுடன் சேர்த்தே விளக்கம் பெறுகின்றனர்.

புராணங்கள் கூறும் குசேலர் வாழ்வில் மிகவும் துன்பம் அடைபவராக; மிகப்பெரிய சுற்றத்துடன்; பல குழந்தைகளுடன் காட்டப்படுகிறார்.

நாட்டார் வழக்காறு கூறும் நல்லதங்காள் கதை அவளை ஏழு குழந்தைகளுடன் துன்புறுபவளாகக் காட்டுகிறது. அதிகமான குழந்தைகளுடன் புனைந்த கதைகள் அனைத்தும் துன்பத்தையே சித்தரிக்கின்றன.

மனிதன் தன் கற்பனையில் தோன்றிய உன்னதக் குடும்பத்தையே; அளவான குடும்பத்தையே இறைவனுக்கும் உரியதாகப் படைத்திருக்கிறான். சிவபெருமான் இரண்டு குழந்தைகள் உடையவராகவே போற்றப்படுகிறார்.

இதிகாசம் இரண்டிற்கு மேற்பட்ட குழந்தைக் கூட்டங்களுக்கிடையே போரும், பூசலும் மிகுதியாவதைக் காட்டுவது தான் மகாபாரதம். அர்ச்சுனன் பல மனைவியரை உடையவனாகக் காட்டப்பட்டாலும்; அபிமன்யு, பரிக்ஷித் என்ற இரண்டு மகன்களை உடையவனாகவே காட்டப்படுகிறான்.

இலக்கியங்கள், புராணங்கள், இதிகாசங்கள், நாட்டார் கதைகள் அனைத்தும் மனித மனத்தின் கண்ணாடிகள். சிறு குடும்பத்தின் சீர்மையைத் தொடர்ந்து குறிப்பாகப் புலப்படுத்தி உள்ளன.

---

**பெண்கள் நாட்டின் கண்கள்**

"மங்கையராய்ப் பிறப்பதற்கே நல்ல மாதவம் செய்திட வேண்டுமம்மா

பங்கயக் கைந்நலம் பார்த்தலவோ பாரில் அறங்கள் வளருமம்மா"

என்று பெண் பிறவியின் மேன்மையைப் பாடியுள்ளார் கவிமணி. உலகில் அறம் நிலைக்க பெண்கள் துணை தேவை என்று இருக்கும் போது பெண்களை நாட்டின் கண்கள் என்று மட்டும் கூறுவானேன்?! அவர்கள் உலகின் கண்கள்.

'தொட்டிலை ஆட்டும் கை தொல்லுலகை ஆட்டும் கை' என்பது தானே தொன்றுதொட்டு வழங்கும் பழமொழி.

சரித்திரத்தின் ஏடுகளைப் பின்னோக்கிப் புரட்டினால் அங்கே மறையாத புகழ்நிலைத்த பெண்கள் பலரது பெயர்களை அடுக்கிக் கொண்டே போகலாம்.

புலமைப் பேற்றிற்கு ஒரு ஔவையார்;
போர்க்களத்தில் வீரத்திற்கு ஒரு ஜான்ஸிராணி;
விஞ்ஞானத் துறையில் மேதை க்யூரி அம்மையார்;
தன்னிகரில்லாத் தாதி ஃப்ளாரென்ஸ் நைட்டிங்கேல்;
விடுதலைப் போராட்டத்தில் வீராங்கனை சரோஜினி தேவியார்;
சமுதாயத் தொண்டில் இணையற்ற தாய் தெரஸா;
உலக அரங்கில் பெருமை பெற்ற அரசியல் தலைவி இந்திராகாந்தி;
காவல்துறையில் களமிறங்கி மாவட்ட ஆளுநராகக் கலக்கும் கிரண்பேடி;

என்று எத்துறை நோக்கினாலும் ஒரு வெற்றிப் பெண்மணியைப் பார்க்க இயலும்.

குடும்பத்தைப் பொறுப்புடன் கட்டிக் காப்பவள் பெண். அந்தக் கடமையை நிறைவேற்ற சுயநலம் துறக்கத் தயங்காதவள் பெண். சூழ்நிலைகளால் ஏற்படும் சோர்விலும் கொண்ட கொள்கை மாறாத மனத்திட்பம் உடையவள் பெண்.

கல்விக் கூடங்கள், தொழில் நிறுவனங்கள், பணிமனைகள், அரசு அலுவலகங்கள் ஆகியவற்றைத் திறம்பட நிர்வகிக்கிறாள் பெண். அரசு இயந்திரத்தையே இயக்கும் பெண்மணிகளைப் பாரதம் பார்த்து விட்டது; இன்றும் பார்த்துக் கொண்டிருக்கிறது.

பொறுப்பற்ற கணவனின் குறைகளைப் பொருட்படுத்தாமல் மக்களைப் பேணுபவள் பெண். குடும்பப் பொருளாதாரம் சீர்குலைந்தால் தானும் உழைத்து உயர்த்துபவள் பெண். தன்னையும் தன் குழந்தைகளையும் காத்து; சமயத்தில் கணவனையும் காக்க சளைக்காதவள் பெண்.

எத்துறையாயினும் தம் கடமையை ஆற்றி; முத்திரை பதிக்கும் முதன்மைப் பெண்கள் பலர் உளர்.

"அடுப்பூதும் பெண்களுக்குப் படிப்பெதற்கு" என்று கேட்ட சென்ற நூற்றாண்டின் மனப்போக்கு மண்ணோடு மடிந்து விட்டது.

"பட்டங்கள் ஆள்வதும் சட்டங்கள் செய்வதும் பாரினில்" இன்று நடத்த வந்து விட்டனர் பெண்கள். அன்று மாட்டுவண்டியை ஓட்டிய நிலைமாறி; இன்று கனரக வாகனங்களையும் ஓட்டத் திறம் பெற்றுள்ளனர். பெண்ணின் பெருமையை உணர்த்த வள்ளுவர்,

"பெண்ணிற் பெருந்தக்க யாவுள?!" என்று வியப்போடு நம்மைக் கேள்வி கேட்கிறார். பெண்ணுக்குரிய இலக்கணத்தையும் வரையறுக்கிறார்.

"தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலா"தவளாகப் பெண் நிமிர வேண்டும் என்ற எதிர்பார்ப்புடன் இருக்கும் ஆண்வர்க்கத்தின் மனக்கிடக்கைப்படி; பெண்கள் உலகமுழுமைக்கும் கண்ணாக, மனித சமூகத்தின் மேம்பாட்டிற்கு உதவும் மனத்திறன் கொண்டவராக இன்றும் இருக்கிறார்கள்; அன்றும் இருந்தார்கள்; என்றும் இருப்பார்கள்.

---

## அறிவுடையார் எல்லாம் உடையார்

பூமியில் உயிரினங்கள் கோடானுகோடி வகையினவாய் உள்ளன

அவற்றுள் ஆறாம் அறிவைப் பெற்றவன் மனிதன்.
இந்த அறிவால் நிலவை அடைந்தான்;
செவ்வாய்க்கோளை ஆராய்கிறான்;
ஆழ்கடலின் அதிசயங்களை வெளிக்கொணர்கிறான்;
திசைகளை அளந்து திக்கெட்டும் பறக்கிறான்.

இத்தகு அறிவைப் பெற்றதால் மனிதன் எல்லாம் பெற்றவன் ஆகி விட்டானா? கொக்கி போட்டுப் பதிலை இழுத்துப் பார்ப்போம்.

என்னிடத்தில் இல்லாத பொருளே இல்லையென்று எண்ண இயல்பவன் எவனோ அவனே எல்லாம் உடையவன்.
தன் தேவைகள் அனைத்தும் நிறையப் பெற்று மனதில் திருப்தி கொள்பவனே எல்லாம் உடையவன்.
இல்லை என்ற ஏழ்மை எண்ணம் இல்லாத பெருமனம் எவனிடம் உள்ளதோ அவனே எல்லாம் உடையவன்.

சரித்திரப் பாடத்தின் சாரமெல்லாம் சத்தோடு புரிந்து கொள்வது அறிவு எனப்படுமா?
பூகோளத்தில் பூட்டிக் கிடக்கும் உண்மைகளைப் புதிது புதிதாக வெளிக் கொணர்வது அறிவாகுமா?
அறிவியல் பாடங்கள் அன்றாடம் அளிக்கும் ஆழ்ந்த உண்மைகள் தான் அறிவா?
இலக்கியம் பயின்று இன்பவுலகில் மிதந்து வாழ்க்கை உன்னதங்களை உன்னிப்பாகப் புரிந்து கொள்வது உண்மை அறிவா?
கணிதச் சிக்கல்களைச் சீராக விடுவித்துக் காண்பவர் வியக்கும் வண்ணம் கணக்குப் போட்டு காசினியில் மேன்மை பெறுவதை அறிவு என்று சொல்லலாமா?

இத்தனை துறைகள் கலை உலகில் நாளுக்கு நாள் புற்றீசல் போல் பல்கிப் பெருகிப் புதுமைகள் படைக்கின்றனவே! இவற்றுள் எந்த அறிவு நம்மை 'எல்லாம் உடையவராக' மாற்றும் அறிவு?

பெயருக்குப் பின்னால் பல பட்டங்களை நீட்டிப் பெரியவன் என்று புகழ் படைத்தவுடன் மனதில் எல்லாம் இருக்கிறது என்ற திருப்தி ஏற்படுகிறதா?
இல்லை.
அணுவைத் துளைத்தாலும் மனதில் திருப்தி தோன்றுவதற்கு வேறொரு அறிவு வேண்டும்.
உயர உயரப் பறந்தாலும் உள்ளம் நிறைவடைய வேறொரு அறிவு வேண்டும்.

மாளிகை வாசமும், மதி மயக்கும் இன்பமும் நிலையற்றவை என்ற மெய்யறிவு யாரிடம் உள்ளதோ அவரே போதுமென்ற பொன்மனம் உடையவராகிறார். இருப்பதைக் கொண்டு சிறப்புடன் வாழும் வழிவகை அவருக்கே கைகூடுகிறது.

ஓடும், செம்பொன்னும் ஒக்கவே நோக்கிய நாயன்மார் போதும் என்ற பொன்மனம் பெற்றவர். மக்களும் அவரை எல்லாம் உடையவராக மதித்தனர். ஆகவே அறிவு என்பது கலையறிவோ; நூலறிவோ; அறிவியலறிவோ; இலக்கிய அறிவோ; பட்டறிவோ அன்று. அது இறையை உணரும் மெய்யறிவு ஆகும். மெய்யறிவுடையார் தாம் எல்லாம் உடையார்.

---

தொடர்பு: **முனைவர் ச. கண்மணி கணேசன்** (kanmanitamilskc@gmail.com)

# 20. உலகமயமாக்கல் சூழலில் தமிழில் வணிகச்சொற்கள்

*– முனைவர். வீ. ரேணுகாதேவி*

உலகமயமாக்கல் ஒரு நாட்டின் பொருளாதாரத்தை மட்டுமல்லாது அந்நாட்டு மக்களின் வாழ்வியல் நெறிமுறைகள், பேசும் மொழி ஆகியவற்றிலும் மிகப் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளது. எனவே உலகமயமாக்கல் பற்றிய எந்த விவாதத்திலும் விவரணையிலும் பொருளாதார விவகாரங்களை விவாதித்தல் மிக முக்கியமான பகுதியாக உள்ளது. உலகமயமாக்கலின் மாறுதலுண்டாக்கும் சக்திகள் தற்காலச் சமூக வாழ்க்கையின் பொருளாதார, அரசியல், பண்பாடு, தொழில்நுட்பம், சுற்றுச்சூழல், மொழி என்னும் பரிமாணங்களுக்குள் ஆழமாக ஊடுருவிச் செல்கின்றன.

தொழில்நுட்பத்தின் மீதும், அதன் விளைவாக உற்பத்தியாகும் வெகுஜனச் சந்தைப் பொருட்களின் மீதும் தீராத வெறி கொண்ட நிலை இன்று காணப்படுகின்றது. உலகமயமாக்கலின் காரணமாக வணிக நிறுவனங்களும், வணிகப் பொருட்களும் ஆங்கிலம் சார்ந்தே காணப்படுவதைப் பரவலாகப் பார்க்க முடிகின்றது.

மதுரையிலிருந்து திண்டுக்கல்லை நோக்கிப் பயணம் மேற்கொண்டபோது இரு பக்கங்களிலும் கடந்து சென்ற கடைகளின் பெயர்களைப் பார்த்துக்கொண்டே செல்ல நேரிட்டது. அக்கடைகளில் காணப்பட்டப் பெயர்கள் 90 விழுக்காடு ஆங்கிலப் பெயர்களே.

ஆட்டோ கன்சல்டிங், டூவீலர் வாங்க விற்க, வர்ஷா டெய்லரிங், பேக்கரி ரூ ஸ்வீட்ஸ், கீர்த்தி செராமிக்ஸ், எக்ஸ்பிரஸ் கார் வாஷ், கண்ணா காபி பார், இன்ஜினியரிங் ஒர்க்ஸ், சாய் கிரானைட், அம்மன் சிமெண்ட் ஒர்க்ஸ், சரஸ்வதி மெஸ், ஹேர் ஸ்பெசாலிட்டி, சூப்பர் சிக்கன், ஜான்சிராணி காம்பிளக்ஸ், ராம்கோ சூப்பர் ஆப்டிக்கல்ஸ், ட்ரைவாஸ் எனப் பெயர்கள் ஆங்கிலத்திலும், ஒலிபெயர்ப்பிலும் எழுதப்பட்டிருந்தன.

இன்று ஆங்கிலம் வணிகம் சார்ந்த இடங்களில்தான் மிக அதிகமாக இடம் பெற்றுள்ளது. திரைப்படங்கள் நடிகர்களுக்கு அளிக்கப்படும் பட்டங்கள், திரைத்துறையில் பயன்படுத்தப்படும் சொற்கள், தெருவில் காணப்படும் நிறுவனப் பெயர்கள் என அனைத்து இடங்களிலும் ஆங்கிலமே நீக்கமற நிறைந்துள்ளது.

திரைப்படப் பெயர்கள்:

மம்மி, டாடி, யங் இந்தியா, ஜென்டில்மேன், ஒன்ஸ்மோர், பீட்சா, டூயட், லவ்பேர்ட்ஸ், மும்பை எக்ஸ்பிரஸ், பிரண்ட்ஸ் என இந்தப் பட்டியல் நீண்டு கொண்டே செல்கின்றது. தமிழக அரசு திரைப்படங்களுக்குத் தமிழில் பெயர் வைத்தல், வரிவிலக்கு அளிக்கப்படும் என அறிவித்துள்ள போதும் இந்நிலைத் தொடரத்தான் செய்கின்றது.

திரையுலகில்:

டைரக்டர், ஹீரோ, ஹீரோயின், வில்லன், டச் அப் மேன், டச் அப் வுமன், ஆர்ட் டைரக்டர், சினிமாட்டோகிராபர், சூட்டிங், ஸ்டோரி, டயலாக், ஸ்டார்ட், கட், மேக்கப், பிலிம், அவுட்டோர் யூனிட், என அனைத்தும் ஆங்கில மயமே.

நடிகர்களுக்குக் கொடுக்கப்படுகின்ற பட்டங்கள்:

சூப்பர் ஸ்டார் ரஜினி, சூப்பர் ஆக்டர் கமல், ஆக்சன் கிங் அர்ஜுன், காமெடி கிங், எஸ்.வி.சேகர்

தெருவில் காணப்பெறும் நிறுவனப் பெயர்கள்:

லாண்டரி, ஓட்டல், எலக்ட்ரிக்கல்ஸ், டைலர்ஸ், கம்பெனி, சாமில், ஷூமார்ட், டெக்ஸ்டைல்ஸ், ஜுவல்லர்ஸ், புக் ஸ்டால், பேங்க், பைனான்சியர்ஸ், ஷாப், ஸ்டோர், சூப்பர் மார்க்கெட், லெண்டிங் லைப்ரரி என ஏராளம்.

தமிழ் பத்திரிகைகளின் பெயர்கள்:

ஜுனியர் போஸ்ட், இந்தியா டுடே, விசிட்டர், ஹெல்த், சஸ்பென்ஸ், போலீஸ் ரிப்போட்டர், சினிமா எக்ஸ்பிரஸ், குமுதம் ரிப்போட்டர், ஜுனியர் விகடன்.

உணவகங்களிலும் இல்லங்களிலும் பரிமாறப்படும் உணவு வகைகளின் பெயர்கள்:

புல் மீல்ஸ், கேக், கூல்டிரிங்ஸ், ஜுஸ், ஐஸ் க்ரீம், ஸுவீட், காபி, பப்ஸ், பிரட், பட்டர், ஜாம், பிஸ்கெட்.

பணியிடங்களில்:

பாண்ட், சர்ட், ஜுன்ஸ், ஜாக்கட், பிளவுஸ், டைட் பேண்ட், டைட் சர்ட், பெல்பாட்டம், புல்ஹேண்ட், ரெடிமேட், சாரி, சுடிதார்.

அலுவலகங்களில்:

டைரக்டர், டீன், மேனேஜர், கிளார்க், டெலிபோன் ஆபரேட்டர், பியூன், அட்டண்டர், வாட்ச்மேன், அசிஸ்டெண்ட், லாக்கர், டிராயர், பைல், பேப்பர், கம்ப்யூட்டர், ஜெனரல் மேனேஜர், சூப்பிரண்டெண்ட், சூப்பர்வைசர், காண்ட்ராக்டர், ஆடிட்டர், ஆபீசர்.

கல்வி நிலையங்களில்:

பல்கலைக்கழகம், காலேஜ், ரெஜிஸ்டார், வைஸ்-சான்சலர், புரொபஸர், லெக்சரர், பிரின்ஸிபால், டீச்சர், ஸ்டூடண்ட், பஸ்ட் இயர், பைனல் இயர், டெஸ்ட், அசைன்மெண்ட், ரிசல்ட், பாஸ், பெயில்.

தொழிலகங்களில்:

அப்ளிகேஷன், அட்வைர்டைஸ்மெண்ட், இன்டர்வியூ செலக்சன், அப்பாயின்ட்மெண்ட், பிரமோசன், கிரேட்.

விளையாட்டுகள்:

கிரிக்கெட், பேஸ்பால், புட்பால், டென்னிஸ், ஹாக்கி, செஸ், பாக்ஸிங்.

நோய் வரின்:

பீவர், டாக்டர், நர்ஸ், சிஸ்டர், இன்ஞ்செக்ஷன், டிரிப், ஆபரேசன், ஹார்ட் அட்டாக், குளுகோஸ், டிரிப்ஸ்.

பேருந்துகளில்:

ஸ்டாப், ஹோல்டான், ரைட், டிக்கெட், டிரைவர், பஸ்ஸ்டாண்ட், செக்கிங், கண்டக்டர், இன்ஸ்பெக்டர், மார்க்கெட், ஜங்சன், ஏர்போர்ட், பஜார், மெயின் ஸ்டிரீட்.

என எங்கெங்கு காணினும் ஆங்கிலம், பல சொற்களுக்கு இணையான தமிழ்ச் சொற்கள் இருப்பினும் ஆங்கில மோகத்தின் காரணமாக ஆங்கிலச் சொற்களின் பயன்பாடு எங்கும் காணப்படுகின்றது. நல்ல தமிழில் பேச வேண்டும், எழுத வேண்டும், பெயரிடப்பட வேண்டும். இல்லையெனில் பாரதியின் தமிழன்னை கூறுவது போல்

மெல்லத் தமிழினிச் சாகும் - அந்த
மேற்கு மொழிகள் புவிமிசை யோங்கும்
என்றந்தப் பேதை உரைத்தான் - ஆ
இந்த வசையெனக் கெய்திடாலோ?

என்பது உண்மையாகும்.

எனவே நாம் தான் நல்ல நல்ல மொழி பெயர்ப்புகளையும், கலைச் சொற்களையும் ஆக்கித் தரவேண்டும்.

# 21. ராகுல சாங்கிருத்தியாயன் பார்வையில் ‘ஆரியர் வருகை’

***– தேமொழி***




‘வால்காவிலிருந்து கங்கை வரை’ என்ற தலைப்பில், ராகுல சாங்கிருத்யாயனால் இந்தியில் ‘வால்கா சே கங்கா’ என்று எழுதப்பட்ட இந்த நூல் மானுடவியல் சான்றுகளை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்ட செவ்வியல் இலக்கியம் என்ற தகுதி பெற்றது. இந்த வரலாற்றுப் புனைவில் 20 கதைகளில் மனித சமுதாயத்தின் வளர்ச்சி தொகுக்கப்படுகிறது. இந்நூல் 1943 இல் வெளியிடப்பட்டு பின்னர் பலமொழிகளிலும் மொழிபெயர்க்கப்பட்டது. ராகுல சாங்கிருத்தியாயன் பிரிட்டிஷ் ஆதிக்கத்தை எதிர்த்து எழுதியதற்காக மூன்றாண்டுக் காலம் சிறையில் அடைக்கப்பட்டிருந்தார். அப்பொழுது சிறையில் உருவான நூல் இது. இந்நூலை எழுதியதற்காக சமயப் பழமைவாதிகளால் வசை பாடப்பட்டார். இருப்பினும் மறு ஆண்டே அடுத்த பதிப்பு வெளிவரும் அளவிற்கு நூல் விற்பனையானது. தமிழில் கண. முத்தையா மொழிபெயர்ப்பில் இந்நூல் முன்னரே 1949ல் வெளிவந்து முப்பதுக்கும் மேற்பட்ட பதிப்புகளைக் கண்ட சிறப்புடையது. நூலின் மொழிபெயர்ப்பும் கண. முத்தையா வால் சிறையில்தான் எழுதப்பட்டது. கால்நூற்றாண்டிற்கும் மேல் இந்திப் பேராசிரியராகப் பணியாற்றிய டாக்டர் என். ஸ்ரீதரன் சமீபத்தில் இந்தியிலிருந்து தமிழாக்கம் செய்துள்ளார். அது 2016 இல் கவிதா பப்ளிகேசஷன்ஸ் வெளியீட்டில் முதல் பதிப்பாக வெளிவந்துள்ளது. என்.

ஸ்ரீதரன் பல குறிப்புகளையும் தேடிக்கொடுத்து வாசிப்பை விரிவாக்க உதவியுள்ளார்.

ராகுல சாங்கிருத்தியாயன், கேதார்நாத் பாண்டே என்ற பெயருடன் உத்தரப்பிரதேச குக்கிராமம் ஒன்றில் ஒரு பிராமண குடும்பத்தில் பிறந்தவர். துவக்கப்பள்ளி வரை மட்டுமே முறையான கல்வி கற்றாலும் தானே கற்று 30க்கும் மேற்பட்ட மொழிகள் அறிந்த பன்மொழி அறிஞராகவும், பலதுறை வல்லுநராகவும் 70 வயதுவரை வாழ்ந்து 1963 இல் மறைந்தவர். இவர் 'மகா பண்டிதர்' என்ற பட்டமும் பெற்றவர். தமிழகத்தில் இவர் வாழ்ந்த காலத்தில் தமிழும் அறிந்து கொண்டார். ராகுல சாங்கிருத்தியாயன் இந்துவாகப் பிறந்து இந்து சமயத் தத்துவங்களை அறிந்தவர். ஆரிய சமாஜத்தின் சுவாமி தயானந்த சரஸ்வதியின் மேல் பற்று கொண்டவர். இலங்கையில் புத்த மதத்தைத் தழுவி புத்த பிக்குவாகவும் தீட்சை பெற்று ராகுல சாங்கிருத்தியாயன் என்று மாறியவர். பௌத்த தத்துவங்களிலும் பாலி மொழியிலும் வல்லுநர். கடவுளை மறுத்தவர், இறப்பிற்குப் பின், மறுபிறவி ஆகியவற்றில் சற்றே நம்பிக்கை கொண்டிருந்து பின்னர் அதையும் துறந்து மார்க்சிய கொள்கையில் ஈடுபாடுகொண்ட பொதுவுடமைவாதியாக இறுதியில் மாறியவர். ரஷ்ய லெனின்கிராட் பல்கலைக்கழகம் இவரை இந்தியவியல் பேராசிரியராகவும், வித்யாலங்கார இலங்கைப் பல்கலைக்கழகம் இவரைப் பேராசிரியராகவும் பணியாற்றவைத்து தங்களைப் பெருமைப்படுத்திக் கொண்டன. வாழ்நாளின் பெரும்பகுதியைப் பலநாடுகளுக்கும் இந்தியாவில் பல இடங்களுக்கும் பயணம் செய்வதில் கழித்தவர். 'இந்தி பயண இலக்கியங்களின் தந்தை'யாக அறியப்பட்டு பயணநூலுக்காகச் சாகித்திய அக்காதமி விருதும் (1958), பத்மபூஷன் (1963) விருதும் பெற்றார். பலமொழிகள் அறிந்திருந்தும், அவரது தாய்மொழி போஜ்புரியாக இருந்தும் இந்தியை மட்டுமே தான் அதிகம் எழுதும் மொழியாக வைத்துக் கொண்டவர். நூற்றுக்கும் மேலான நூல்களை எழுதியவர். அவருக்கு இந்திப் பல்கலைக் கழகங்களில் ஒரு இருக்கைகூட அமைக்கவில்லை என்றும் கூறப்படுகிறது.

இந்தோ-ஐரோப்பியச் சமூகத்தினர் அல்லது ஆரியர் என அறியப்படுவோர் இந்தியாவிற்கு வருகை தந்த வரலாறுதான் இந்த நூலின் பொருண்மை. எகிப்திய, மெசபட்டோமிய, சிந்துசமவெளி நாகரிக மக்கள் இந்த ஆரியர் என்ற இனப் பிரிவுக்கும் முன்னரே நன்கு நாகரிகமடைந்தவர். இருப்பினும் இந்தியாவை நோக்கிப் பயணித்த ஆரிய இனத்தின் பரவல் இந்திய வரலாற்றில் ஏற்படுத்திய தாக்கத்தை விளக்கும் நோக்கில் இவர்களை மட்டும் முதன்மைப்படுத்தி இந்நூல் எழுதப்பட்டுள்ளது. ஆரியரின் இப்பயணம் யுரேசிய ஸ்டெப்பி புல்வெளியில், ரஷ்யாவின் தாய் ஆறு என்று அழைக்கப்படும் வால்கா

ஆற்றின் கரையில் துவங்கி, இந்தியர்கள் தாய் எனப்போற்றும் கங்கை ஆற்றின் கரையில் நிலை கொள்கிறது. ஐரோப்பியக் கண்டத்திலிருந்து 10,000 கிலோமீட்டர் இடைவெளியைக் கடந்து இந்தியாவில் குடியேறிய இவர்களது வரலாறு தனித்தனியான 20 சிறுகதைகளாக, காலக் கோட்டில் கிமு 6000 முதற்கொண்டு 20 ஆம் நூற்றாண்டுவரை ஒரு 8,000 ஆண்டு காலகட்டத்தை உள்ளடக்கும் வகையில், தொடர்ச்சியாக ஒன்றன்பின் ஒன்றாக அமைத்து, கால எந்திரத்தில் பயணிப்பது போலக் காட்சிகளாக நூல் கட்டமைக்கப்பட்டுள்ளது.

காலம், இடம் ஆகியவற்றின் அடிப்படையில் கதை மாந்தர் உரையாடல் வழியாக ஒரு வரலாற்று நிகழ்வு கதை வடிவில் உருவெடுக்கிறது. வரலாற்றில் திருப்புமுனையாக அமைந்த மாற்றங்கள் கதைவடிவில் உருவெடுத்துள்ளன எனலாம். ஒவ்வொரு கதையும் அக்கால மக்களின் நடை, உடை, வாழ்வியல்முறை ஆகியவற்றைக் கண்முன் நிறுத்தும் விதமாகவும், சமுதாய, அரசியல், பொருளாதார, பண்பாட்டின் பரிணாம வளர்ச்சி மாற்றங்கள் அக்கால வரலாற்று நிகழ்வுகளுடன் பின்னிப்பிணைந்தும் உருவாக்கப்பட்டுள்ளது. அதனால் சமூகவியல், மானுடவியல், வரலாறு, புவியியல், இலக்கியம் எனப் பல துறைகளையும் நூலின் கரு தொட்டுச் செல்கிறது. ஒரு தலைமுறை என்பது 22-25 ஆண்டுகள் என்ற அடிப்படையில் இத்தனை தலைமுறைக்கு முன்னர் என ஆசிரியர் கதைகளின் துவக்கத்தில் சில இடங்களில் குறிப்பிடுகிறார். குறிப்பாக முதல் கதை சுமார் 361 தலைமுறைகளுக்கு முன்னர் எனக் குறிப்பிடுகிறார். நூல் இரு பாகங்களாகவும், ஒவ்வொரு பாகமும் 10 அத்தியாயங்களும் கொண்டுள்ளது. இரண்டாம் பாகத்திற்குப் பிறகு இன்றைய இந்தியாவில் நாம் படித்த வரலாற்றுச் செய்திகள் கதைகளாக உருமாறியுள்ளன.

முதல் பாகம்:

1. நிஷா (கி.மு.6000)
2. திவா (கி.மு.3500)
3. அமிர்தாஸ்வன் (கி.மு.3000)
4. புருகூதன் (கி.மு.2500)
5. புருதானன் (கி.மு.2000)
6. அங்கிரா (கி.மு.1800)
7. சுதாஸ் (கி.மு.1500)
8. பிரவாஹணன் (கி.மு.700)
9. பந்துல மல்லன் (கி.மு.490)
10. நாகதத்தன் (கி.மு.335)

இரண்டாம் பாகம்:

11. பிரபா (கி.பி.50)
12. சுபர்ண யௌதேயன் (கி.பி.420)
13. துர்முகன் (கி.பி.630)
14. சக்ரபாணி (கி.பி.1200)
15. பாபா நூர்தீன் (கி.பி.1300)
16. சுரையா (கி.பி.1600)
17. ரேக்கா பகத் (கி.பி.1800)
18. மங்கள சிங் (கி.பி.1857)
19. ஸஃப்தர் (கி.பி.1922)
20. சுமேர் (கி.பி.1942)

காந்தியின் 1942ஆம் ஆண்டின் வெள்ளையனே வெளியேறு போராட்டத்துடனும் இரண்டாம் உலகப்போர் (1939-1945) நடந்துகொண்டிருக்கும் காலத்தில் நூல் முடிவடைகிறது. நூல் வெளியான காலத்தில் ஹிட்லர், முசோலினி ஆகியோர் அச்சு நாடுகள் என்ற ஒரு கூட்டாக ஜப்பானுடன் இணைந்து இன்னமும் போரில் ஈடுபட்டு நேச நாடுகளுடன் போர் தொடர்ந்து கொண்டிருக்கும் காலம். பெர்ல் ஹார்பர் தாக்குதல் காரணமாக அமெரிக்காவும் போர்க்களத்தில் இறங்கிவிட்ட நேரம் அது. ஆனால், நாகசாகி ஹிரோஷிமா மீது அணுகுண்டு தாக்குதல் நிகழ்த்தப்பட்டு இரண்டாம் உலகப் போர் இன்னமும் முடிவுக்கு வராத காலகட்டத்தில் வெளியான வரலாற்றுப் புனைவு நூல்.

நூலின் கருத்துகளிலும், பாத்திரங்களின் உரையாடல்களாக வெளிவரும் கருத்துகளிலும் ராகுல சாங்கிருத்யாயனின் கோணங்கள் வெளிப்படுகின்றன. ஆரியர் வருகையால் வந்த வர்ணாசிரம தர்மம், சாதிப்பிரிவினைகள், தீண்டாமை ஆகியவை குறித்து அவருக்குள்ள வருத்தம்; புரோகிதர்களும் அரசர்களும் இணைந்து கூட்டாக தங்களுக்குள் ஒருவர் நலனுக்காக ஒருவர் உதவிக்கொண்டு உழைக்கும் எளிய மக்களைச் சுரண்டும் கட்டமைப்பின் மேல் அவருக்குள்ள வெறுப்பு, வேதங்கள், புராணங்கள், உபநிடதங்கள் போன்றவற்றின் துணைகொண்டு வைதீக சமயம் எளியோர் மீது ஆதிக்கத்தைக் கட்டமைத்த அறமற்ற செயல்முறை மீது குமுறல், வணிகம் என்ற போர்வையில் நாட்டு மக்களின், நாட்டின் செல்வ வளத்தை தங்களுக்குள் பங்கிட்டுக்கொள்ளும் தன்னலவாதிகளான வணிகர்கள் மீதும், அயல்நாட்டின் வணிக அமைப்புகள் மேலும் கொண்ட கசப்புணர்வு, பெண்களை அடிமைகளாகவும், விடுதலையற்ற நிலையிலும், உடன்கட்டை போன்ற உயிரையும் பறிக்கும் பல்வேறு கட்டுப்பாடுகள் அவர்கள் மீது திணிக்கப்பட்டிருந்த பெண்ணடிமை அதிகார முறையில் அவர் காட்டிய எதிர்ப்பு எனவும் பல கருத்துக்களை இந்நூல் வழியாக அறிய முடிகிறது.

அவ்வாறே ராகுல சாங்கிருத்யாயனின் சமய நல்லிணக்க ஆதரவு எண்ணமும், புத்தரின் கொள்கையில் கொண்ட ஈடுபாடும், பொதுவுடைமை கொள்கைக்கு அவருடைய ஆதரவும் கதாபாத்திரங்கள் வழி தெரிவிக்கப்படுகிறது. காந்தி விடுதலைப் போராட்டத்தை மக்களிடம் கொண்டு சென்றதை மதிப்பவராக இருந்தாலும், ஆதிதிராவிடர்களுக்கான தனி வாக்காளர் தொகுதி தேர்தல் இடவொதுக்கீட்டை எதிர்த்து காந்தி உண்ணாவிரதம் இருந்து அம்பேத்கருக்கு நெருக்கடி கொடுத்தது, இராட்டையில் நூல் நூற்றல் போன்றவை அறிவியல் காலத்திற்கு ஒவ்வாத பிற்போக்கு நிலை என்றும் கருதியதும் வெளிப்படுகிறது. பாகிஸ்தான் தனிநாடு என மக்கள் பிரிய விரும்பினால் அவர்கள் கருத்து மதிக்கப்பட வேண்டும் என்ற நிலைப்பாட்டையும் கொண்டிருந்திருக்கிறார் ராகுல சாங்கிருத்தியாயன்.

வரலாற்றைப் பாடமாகப் படிக்காமல், நிகழ்வுகளின் பின்னணியில் கதைகளாகப் படிக்கும் பொழுது வரலாற்றின் தொன்மையும் அதன் தொடர்ச்சியும் தெளிவாகப் புரிகின்றது, போராட்ட நிகழ்வுகளின் காரணங்களும் விளங்குகிறது. இது வரலாறா அல்லது புனைவுக்கதையா என்று வேறுபடுத்திக் காண இயலாத அளவு நூலை எழுதியுள்ள முறை ஆசிரியரின் திறமைக்குச் சான்று. இது ஒரு மொழிபெயர்ப்பு நூல் என்ற எண்ணம் தோன்றாவண்ணம் மொழியாக்கம் செய்தவரும் தனது திறமையை வெளிப்படுத்தியுள்ளார். இது இந்தியர் அனைவரும் வாழ்வில் ஒருமுறையேனும் படித்திருக்க வேண்டிய நூல். "ஒவ்வொரு தமிழனும் கட்டாயம் படிக்க வேண்டிய நூல்" என சி.என். அண்ணாதுரை பரிந்துரைத்த நூல். இந்நூலைப் படித்து முடித்த பின்னர், இதனை நாம் இத்தனைக்காலம் படிக்காமல் விட்டுள்ளோமே என்று வருந்தவும் வைத்தது என்பதும் உண்மை. எத்தனைமுறை வேண்டுமானாலும் படிக்கலாம்.

நூல்:வால்காவிலிருந்து கங்கை வரை
இந்தியில் – ராகுல சாங்கிருத்தியாயன் (1943)
தமிழில் மொழியாக்கம் – என்.ஸ்ரீதரன் (2016)
கவிதா வெளியீடு, முதல் பதிப்பு
Rs. 400

நன்றி - சிறகு: http://siragu.com/ராகுல-சாங்கிருத்தியாயன்/
தொடர்பு: தேமொழி (jsthemozhi@gmail.com)

## 22. ஐயனார்

***– முனைவர். ப. தேவி அறிவு செல்வம்***




இந்நூலின் ஆசிரியர் தமிழகத்தில் கிராமங்களின் ஏரி, குளம், ஆறு ஆகிய நீர்நிலைகளின் கரைகளில் கோயில் கொண்டுள்ள, பல பிரிவு மக்களின் காவல் தெய்வமாகவும், குல தெய்வமாகவும் வழிபட்டு வரும் ஐயனார் யார், அவரின் பிரிவுகள், இருப்பிடங்கள் போன்றவற்றை மேற்கோள்காட்டி இப்புத்தகத்தை வெளியிட்டுள்ளார்.

ஆசீவகம் சமயத்தை உருவாக்கிய மற்கலி கோசாலர் என்பவரே சாத்தன் என்ற முதல் ஐயனார் என்றும் இவர் சங்கப் புலவர் ஆக விளங்கியுள்ளார் என்ற விடயத்துடன் நூல் ஆரம்பமாகிறது.

இரண்டாவது ஐயனாராக நந்தவாச்சா என்ற சின்ன ஐயனார், பெருமுக்கல் செல்லும் பாதையில் மலைக்கு முன்பாக இவர் வீற்றிருப்பதாகவும் குறிப்பிடுகிறார்.

முத்தியாலீசுவரர் என்ற மூன்றாம் ஐயனாராக பெருமுக்கல் மலையின் தென்புறச் சரிவில் வேல், ஈட்டி என கோயில் கொண்டுள்ளதாகத் தெரிவிக்கிறார்.

மேலும் ஐயனார் வகுத்த ஒன்பது கதிர் என்பது வானியல், கோளியல் பற்றிய அறிவியலாக இருந்துள்ளது. ஆசீவக கொள்கையான ஊழ் கொள்கை மற்றும் கருப்பு, நீலம், சிவப்பு, மஞ்சள், வெண்மை, மிக வெண்மை என்ற ஆறு சாதிகளை மேற்கோள் காட்டியுள்ளார் .

பாண்டி என்ற சொல் வெள்ளை என்றும் ஐயனாரே என்றும், ஆசீவகத்தில் வெள்ளை பிறப்பு நிலையை அடைந்த துறவியரைக் குறிப்பதாகவும், மதுரை பாண்டி முனி கோயிலே இதற்குச் சிறந்த உதாரணமாகச் சுட்டிக்காட்டுகிறார்.

திருப்பத்தூர் ஐயனார் கோயில் கல்வெட்டுகளில் ஐயனாரைத் திருமண் தவமுடைய ஐயனார் என பாண்டியர்கள் குறித்துள்ளார்கள் என்றும், திருமறைக்காடு சிவன் கோயிலில் ஆசீவகத்திற்குரிய அறப் பெயர் சாத்தன், பூரணம், பொற்கலை யோடு உள்ள பூரண காயபர், பார்கவ நாதர் ஆகியோரைக் கொண்ட ஆசீவக கோவில்களாகக் காட்டுகிறார்.

பெரியபுராணத்தில் சுந்தரரின் வாழ்க்கையைத் தெய்வலோகத்தில் தொடங்கும் சேக்கிழார், திருப்பிடவூர் ஐயனார் கோயிலில் முடிக்கிறார். மேலும் அந்த சருக்கத்திற்கு வெள்ளானைச் சருக்கம் எனவும் வெள்ளை யானை அறப்பெயர் சாத்தனுக்கு உரியது என்றும் தெரியப்படுத்துகிறார்.

சித்தன்னவாசல் மலை அடிவாரத்தில் மூன்று ஐயனார் கோயில்கள் உள்ளன. அங்கு உள்ள குகை ஓவியத்தில் உள்ள மாங்காய் கொத்து, சாத்தனோடு தொடர்பு உடையது என்றும் அழகர் மலை குகைத்தளம், திருச்சி மலைக்கோட்டை ஐயனார், கஞ்சமலை கலியபெருமாள் ஐயனார், பெரும பெட்டி 5 இலவ மரத்து ஐயனார் போன்ற கோயில்கள் ஆசீவகத்தைச் சேர்ந்தவை என்று விளக்கியுள்ளார்.

ஐயனாரின் பிரிவுகள், கரந்தமலை ஐயனார், ஆகாச ஐயனார், பரம ஐயனார், அடைக்கலம் காத்த ஐயனார் என்று பல்வேறு பெயர்களுடன் வழங்கப்பட்டு வருவதாகக் குறிப்பிடுகிறார்.

மேலும் சான்றுகளாக, பள்ளன் கோயில் செப்பேடு, சிங்கம்புணரி கோயில், இலக்கியங்களில் பத்துப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, சிலப்பதிகாரம், மணிமேகலை, நீலகேசி, புறநானூறு, பெரிய புராணம், சினேந்திர மாலை மற்றும் ஐயனார் பிள்ளைத்தமிழ் போன்றவற்றை மேற்கோள் காட்டி

ஆசீவகம் என்னும் சமயத்தைத் தோற்றுவித்தவர் ஐயனார் என்பதை வரலாற்றுச் சான்றுகளாக இந்நூலில் பதிவு செய்திருக்கிறார்.

நூலின் ஆசிரியர் - திரு பொன். சந்திரன்
அய்யனார் பதிப்பகம் சென்னை
வெளியீடு 2017

தொடர்பு:
முனைவர். ப. தேவி அறிவு செல்வம்,
மருந்தாக்கவியல் பேராசிரியை மதுரை.
https://www.facebook.com/devipharm

## 23. விளக்குமாறாகும் தாவரங்கள்

*– பேராசிரியர். ஆ.சிவசுப்பிரமணியன்*

தான் வாழும் இருப்பிடத்தை தூய்மையாக வைத்திருப்பது மனித குலத்தின் இயல்பு. வசிக்கும் இடத்தின் தரையில் படியும் தூசி, தண்ணீர், உண்ணும்போது சிதறிய உணவுத் துண்டுகள் ஆகியனவற்றை அகற்றும் பணியை அவன் மேற்கொண்டு வாழ்ந்துள்ளான். இது உயிரினங்களின் இறைச்சியை உண்டு குகைகளில் வாழ்ந்த காலத்திலேயே தோன்றிவிட்டது எனலாம். தான் வேட்டையாடி உணவாகக் கொண்ட உயிரினங்களின் இறைச்சித் துணுக்குகளையும், எலும்புத் துண்டுகளையும் தான் வசித்த குகைக்குள் அவன் போடவில்லை. அவற்றையெல்லாம் குகைக்கு வெளியில்தான் குவித்து வைத்துள்ளான். இக்குவியலை 'அடிசிலறைக் கழிவுகள்' (கிச்சன் மிட்டன்ஸ்) என்று மானிடவியலார் குறிப்பிடுகின்றனர். இப்பணியை மேற்கொள்ள ஏதேனும் ஒரு கருவியை உருவாக்கி அவன் பயன்படுத்தியிருக்கும் வாய்ப்பு உள்ளது.

தன் இருப்பிடத்தைத் தூய்மையாக வைத்திருக்க அவன் உருவாக்கிப் பயன்டுத்திய கருவி, அவனது பொருள்சார் பண்பாட்டியல் (மெட்டீரியல் கல்சர்) வரலாற்றில் ஓர் இடத்தைப் பெறுகிறது.தமிழரது பொருள்சார் பண்பாட்டு வரலாற்றில், இருப்பிடத்தை தூய்மைப்படுத்தப் பயன்பட்ட கருவி ‘விளக்குமாறு’ என்று பொதுவாக அறியப்படுகிறது. இது தவிர ‘துடைப்பம்’, ‘வாரியல்’, ‘பெருக்குமாறு’ என்று வட்டாரத் தன்மை கொண்ட பெயர்களாலும் விளக்குமாறு அழைக்கப்படுகிறது. தமிழ் நிகண்டு நூல்களிலும் விளக்குமாறைக் குறிக்கும் சொற்கள் சில இடம் பெற்றுள்ளன.

கி.பி. எட்டாவது அல்லது பத்தாவது நூற்றாண்டைச் சார்ந்ததாகக் கருதப்படும் பிங்கல நிகண்டு (6:587) ‘துடைப்பம், சோதனி மாறு, அலகு வாருகோல்’ என்ற பெயர்களால் துடைப்பத்தைக் குறிப்பிடுகிறது. கி.பி. எட்டாவது நூற்றாண்டைச் சேர்ந்ததாகக் கருதப்படும் திவாகர நிகண்டு (6:199) ‘சோதினி, மாறு துடைப்பம்’ ஆகும் என்கிறது. இவ்விரு நிகண்டுகளுக்கும் காலத்தால் பிந்தைய சூடாமணி நிகண்டு (7:57) ‘சோதனி, மாறு’ என்ற சொற்களைப் பயன்படுத்துகிறது. இவற்றுள் அலகு என்ற சொல் கல்வெட்டுகளில் இடம்பெறுவதுடன் கோவில் பணிகளுடன் தொடர்புடையதாகக் கல்வெட்டுகளில் இடம் பெற்றுள்ளது. அலகு என்ற பெயருடைய விளக்குமாறால் கோவிலைத் தூய்மை செய்வதை அலகிடல்

என்று குறிப்பிடும் இடைக்காலக் கல்வெட்டுக்கள், இப்பணி மேற்கொள்வோரை அலகிடுவார் என்றழைக்கின்றன.

இறைப்பணியின் ஓர் அங்கமாக அலகிடல் இருந்துள்ளது. சைவ சமயத்தில், சரியை, கிரியை, யோகம், ஞானம் என நான்கு வகையான நெறிகள் உண்டு. இவற்றுள் சரியை என்பது, 'உடம்பின் தொழில்களாக நிகழ்வது' என்று வெள்ளைவாரணார் (2002:724) விளக்கம் தருவார். இதற்கு எடுத்துக் காட்டாக, திருநாவுக்கரசரின் தேவாரப் பதிகம் (631:3) ஒன்றைக் குறிப்பிடுகிறார். (மேலது, 725). அப்பதிகத்தில் '...எம்பிரானுடைய கோயில் புக்கும், புலர்வதன் முன் அலகிட்டு மெழுக்கும் இட்டு' என்ற தொடர் இடம் பெற்றுள்ளது. பொழுது புலரும் முன் கோயிலை அலகிடல் என்பது, அலகு என்றழைக்கப்படும் துடைப்பத்தால் கோயிலைப் பெருக்கி தூய்மைப்படுத்துவதைக் குறிப்பிடுகிறது.

கோவிலுடன் தொடர்புடைய நிகழ்வுகளையும் பொருட்களையும் 'திரு' என்ற அடைமொழியிட்டு அழைப்பது மரபு. இதன் அடிப்படையில் அலகு என்பதை திரு அலகு என்று குறிப்பிடும் மரபும் உண்டு. பெருக்குமாறால் (துடைப்பத்தால்) ஒருவனை அடி என்பதை 'திரு அலகு எடுத்து திருச்சாத்து சாத்து' என்று பகடியாகக் கூறுவது இம்மரபை அடிப்படையாகக் கொண்டதுதான். மூத்த பெண் தெய்வம் என்ற பொருளில் ஜோஸ்டாதேவி (சேட்டை) என்று வடமொழியில் குறிப்பிடப்படும் பெண் தெய்வம் ஒன்றுண்டு. மூத்ததேவி என்பதே மூதேவி என்றாயிற்று என்பர். தொடக்கத்தில் வழிபாட்டிற்குரிய தெய்வமாக இருந்து பின்னர் தூக்கம் சோம்பல் என்பனவற்றுடன் தொடர்புபடுத்தப்பட்டு இழிவான தெய்வமாக இதுமாற்றப்பட்டுள்ளது. மூத்தவள் என்ற பொருளைத்தரும் 'தவ்வை' என்ற சொல்லால் திருக்குறள் (167;2) இத்தெய்வத்தைக் குறிப்பிடும். தமிழ்நாட்டின் பழமையான கோயில்கள் சிலவற்றில் இத்தெய்வத்தின் சிலை இடம் பெற்றுள்ளது. இத்தெய்வத்தின் படைக்கலனாக, பெருக்குமாறு அமைந்துள்ளது. 'வன்படை துடைப்பம்' என்று பிங்கல நிகண்டு (2:97) குறிப்பிடுகிறது.

இழிவு:

இப்படித் தொன்மையான எழுத்துப் பதிவுகள் இருப்பினும் இழிவான அடையாளமே விளக்குமாறுக்கு வழங்கப்பட்டுள்ளது. வாய்மொழி வழக்காறுகளிலும், மக்களிடையே வழக்கிலுள்ள நம்பிக்கைகளிலும் இது பதிவாகியுள்ளது. தகுதியற்ற ஒருவனுக்குச் செய்யப்படும் சிறப்பைக் குறிப்பிடும்போது 'வாரியக்(ல்) கொண்டைக்குப் பட்டுக் குஞ்சலம் கட்டிய மாதிரி' என்ற சொலவடையைப் பயன்படுத்துவதுண்டு. வாய்ச்சண்டையின்போது 'உன்னை வாரியலால அடிப்பேன்' என்று சூளுரைப்பதுண்டு. சிலர் வாரியல் என்ற சொல்லுக்கு முன்பாக 'பழ' என்ற அடைமொழியைப் பயன்படுத்துவதுண்டு. இங்கு

பழ என்ற சொல் 'பயன்படுத்திய' என்ற பொருளை வெளிப்படுத்தும். ஆங்கிலக்காலனிய ஆட்சியின்போது அரசு அலுவலங்களைக் கச்சேரி என்ற சொல்லால் குறிக்கும் வழக்கம் இருந்தது. இவ்வகையில் காவல்நிலையமும் கச்சேரி எனப்பட்டது. காவல்நிலையத்தின் அழைப்பாணையின் பேரில் வாக்குமூலம் கொடுப்பதற்காக அங்குசெல்பவன் படும்பாட்டை

கச்சேரிக்குப் போவானேன்கையக்கட்டி நிற்பானேன்
வாக்குமூலம் கொடுப்பானேன் / சொல்வானேன்
வாரியப்(ல்) பூசை படுவானேன்

என்று சிறுவர் விளையாட்டுப் பாடல் ஒன்று குறிப்பிடுகிறுது. இப்பாடல் பாடப்பட்ட காலத்தின் சமூக நடப்பியலை இதன் வாயிலாக அறியமுடிகிறது.விளக்குமாறைத் தொட்ட கையைக் கழுவாமல் குழந்தைகளைத் தொடக்கூடாது என்ற நம்பிக்கையும் உள்ளது. அப்படித் தொட்டால் குழந்தையின் உடல்நலம் பாதிக்கப்படும் என்று நம்புகிறார்கள். இதன் அடிப்படையில் விளக்குமாறைப் பயன்படுத்திய பின்னர் கையைக் கழுவிவிட்டே குழந்தையைத் தொடுவர். அடைமழைக் காலங்களில் விடாது மழை பெய்து, மக்கள் தொல்லைக்கு ஆளாகும்போது மழையை நிறுத்தும் வழிமுறையாக விளக்குமாறை எடுத்து வந்து வானத்தை நோக்கி காட்டுவர். அதுபோல, முருங்கை, மா போன்ற மரங்களில் கண்ணேறு படுவதைத் தடுக்கும் வழிமுறையாகச் செருப்புடன் விளக்குமாறையும் கட்டித் தொங்கவிடுவதுண்டு.

விளக்குமாறு என்ற சொல்லை மையமாகக் கொண்டு தமிழ் ஆசிரியர்களிடம் வாய்மொழி வழக்காறு ஒன்று வழக்கிலுள்ளது. அது வருமாறு:

'பரிதிமாற் கலைஞர்' என்று அழைக்கப்படும் வி.கோ. சூரியநாராயண சாஸ்திரியார் மாணர்வகளுக்கு தமிழ் யாப்பிலக்கணம் கற்றுக்கொடுத்துக் கொண்டிருந்தார். யாப்பு (செய்யுள்) உறுப்புக்களாக எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை எனக் கூறிமுடித்தார். உடனே குறும்புக்கார மாணவன் ஒருவன் எழுந்து மிக அடக்கத்துடன், 'அய்யா தொடைக்கு மேல் என்னவோ?' என்று வினவினான். அதற்கு 'விளக்குமாற்றால் விளக்குதும்' என்று அவர் விடையிறுத்தாராம். இவ்விடையானது, 'விளக்கும் முறையில் விளக்குவோம்' என்றும், 'விளக்குமாறு என்ற வீடு பெருக்கும் கருவியால் அடித்து விளக்குவோம்' என்றும் இருபொருள் தருவதாய் அமைந்து நகைப்பை ஏற்படுத்தியது. இந்நிகழ்வின் உண்மைத் தன்மை குறித்த ஆய்வு ஒருபுறமிருக்க, விளக்குமாறால் அடிப்பதன் இழிவு குறித்த நம்பிக்கையை இது வெளிப்படுத்தி நிற்கிறது.

காணிக்கைப்பொருள்:

இப்படி இழிவின் அடையாளமாகக் குறிப்பிடப்படும் விளக்குமாறு வழிபாட்டுக்குரிய ஆலயங்களில் காணிக்கைப் பொருளாகவும் இடம் பெறுகிறது. தமிழ்நாட்டின் சைவ வைணவக் கோவில்களில் இவ்வழக்கம் இருக்கிறதா என்பது தெரியவில்லை. ஆனால் வடஇந்தியாவில் ஆக்ரா நகரின் நெடுஞ் சாலையில் உள்ள பாடலேஸ்வரர் சிவன்கோவிலில், விளக்குமாறைக் காணிக்கைப் பொருளாக வழங்கும் வழக்கம் நிலவுகிறது. 150 ஆண்டுகள் பழமையான இக்கோவிலில் சிவலிங்கத்திற்கு காணிக்கையாக, விளக்குமாறு வழங்கும் வழக்கம் நடைமுறையில் உள்ளது. இது தொடர்பாகப் பின்வரும் புராணக்கதை கூறப்படுகிறது:

இக்கோயிலுக்கு அருகில் உள்ள கிராமம் ஒன்றில் பிக்காரி தாஸ் என்ற வணிகர் வாழ்ந்து வந்தார். செல்வவளம் மிக்க இவர் தோல் நோயால் பாதிக்கப் பட்டார். அவர் உடல் முழுவதும் கரும்புள்ளிகள் தோன்றி உடல்நோவைத் தந்தன. இந்நோய்க்கு சிகிச்சை பெற ஆயுர்வேத மருத்துவர் ஒருவரைக் காணச் சென்றார். அவ்வாறு செல்லும்போது தாகம் மீதுற, அதைப் போக்கிக் கொள்ள வழியில் உள்ள ஆசிரமத்திற்குள் சென்றார். அவர் நுழைந்தபோது அங்கிருந்த துறவி ஒருவர் விளக்குமாறால் தரையைப் பெருக்கிக் கொண்டிருந்தார். அவர் பயன்படுத்திக் கொண்டிருந்த விளக்குமாறானது தவறுதலாக வணிகரின் மீதுபட்டுவிட்டது. உடனே வணிகரின் தோல்நோயும் உடல் வலியும் மறைந்து போயின. இதனால் ஆச்சரியமுற்ற வணிகர் இதற்கான காரணத்தை அவரிடம் வினவினார். தான் தீவிரமான சிவனடியார் என்றும் அவருடைய அருளால் இது நிகழ்ந்திருக்கும் என்றும் அவர் விடையிறுக்க, தங்கக்காசுகள் நிரம்பிய பையொன்றை அவருக்கு வழங்க வணிகர் முன்வந்தார். ஆனால் அந்த எளிய துறவி அதை ஏற்க மறுத்து, அதற்கு மாறாக சிவன்கோவில் ஒன்றைக் கட்டித் தரும்படி வேண்டினார். அதை ஏற்று சிவன் கோவில் ஒன்றை வணிகர் கட்டித் தந்தார்.

துறவியின் துடைப்பம் பட்டு அவரது தோல் நோய் குணமானது என்ற நம்பிக்கையின் அடிப்படையில் காணிக்கைப் பொருளாக துடைப்பத்தை வழங்கும் வழக்கம் உருவாகி இன்று வரை அது தொடர்கிறது. தோல் நோயாளிகள் அதைப் போக்கும் வழிமுறையாக இக்காணிக்கை வழங்கலை மேற்கொள்கிறார்கள். (விக்கிப்பீடியா).

இவ்வழக்கம் தமிழ்நாட்டில் வழக்கில் உள்ளதா என்பது தெரியவில்லை. இது இருந்திருக்க வேண்டும் என்று கருதும் வகையில் தமிழ்நாட்டுக் கத்தோலிக்கத் தேவாலயங்கள் சிலவற்றில் காணிக்கைப் பொருளாக துடைப்பத்தை வழங்கும் வழக்கம் நிகழ்கிறது. தேனி மாவட்டத்தில் உள்ள பெரியகுளம் என்ற நகரமானது, வடகரை, தென்கரை என இரண்டு பிரிவுகளாக

உள்ளது. இதில் வடகரையில் உள்ள 'பத்திரிசையார்' (புனித பேட்ரிக்) தேவாலயத்துடன் இணைந்த துணைக்கோவிலாக, புனிதவனத்து அந்தோணியார் ஆலயம் தென்கரைப் பகுதியில் உள்ளது. 1920- இல் கட்டப்பட்டு அகஸ்தினார் என்ற ஆயரால் திருநிலைப்படுத்தப்பட்ட இவ்வாலயத்தின் திருவிழா தை மாதம் நிகழும். உடலில் தோன்றும், பாலுண்ணி மரு, கட்டி என்பனவற்றைக் குணப்படுத்தும் மந்திர சிகிச்சை முறையாக, துடைப்பத்தைக் காணிக்கையாக வழங்கும் வழக்கம் இங்கு நிலவுகிறது.

குறிப்பிட்ட வகைத் துடைப்பம் என்றில்லாமல் அனைத்து வகையான துடைப்பங்களும் காணிக்கையாக வழங்கப்படுகின்றன. காணிக்கைப் பொருளாகப் புதிய துடைப்பத்துடன் வந்து, கோவில் நுழைவாயில் கதவின் அருகில் அதை வைத்துவிட்டு: அந்தோணியாரை வணங்கிச் செல்வர். வீட்டுத் தேவைக்காகத் துடைப்பம் தேவைப்படும்போது, காணிக்கையாக வைக்கப்பட்ட துடைப்பத்தை எடுத்துச்செல்வோரும் உண்டு. இவ்வாறு எடுத்துச் செல்வோர் உரிய விலையைத் தாமாகவே முன்வந்து கோவில் உண்டியலில் போடுவர். சிலர் சந்தை விலையைவிடக் கூடுதலான தொகையைப் போடுவதும் உண்டு. (வின்செண்ட் டிபால், எஃபி, பாஸ்டின், நெல்சன் பெரியகுளம்).

திண்டுக்கல் அருகில் உள்ள சிறுநாயக்கன்பட்டி பங்கைச் சேர்ந்த தாமஸ்புரம் தேவாலயத்தில் ஏப்ரலில் நிகழும் தோமையார் திருவிழாவின்போது நீண்ட வரிசையில் நின்று காணிக்கைப் பொருளாக துடைப்பத்தை வழங்குகிறார்கள். சமய வேறுபாடின்றி நிகழும் இந்நிகழ்வில் இக்கோவிலைச் சுற்றியுள்ள பேகம்பூர், நத்தம், குட்டியாம்பட்டி, பித்தளைப்பட்டி, மரியநாதபுரம், ஏ.வெள்ளோடு ஆகிய ஊர்களில் இருந்து திரளான மக்கள் இதில் பங்கேற்கிறார்கள். தரையில் உள்ள குப்பையை விளக்குமாறு பெருக்கித் தள்ளுவது போன்று மனிதர்களின் உள்ளத்தையும், உடலையும் தூய்மைப்படுத்த இக்காணிக்கை உதவும் என்ற நம்பிக்கை இங்கு வருவோரிடம் உள்ளது. (பணி. ர.ஜார்ஜ், சே.ச.,) தமிழகத்தில் கத்தோலிக்கம் பரவத் தொடங்கியபோது இங்குள்ள சமயம் சார்ந்த சடங்குகளையும், நம்பிக்கைகளையும் தழுவிக்கொண்டது. தேர் இழுத்தல், சப்பரம் தூக்குதல், முளைப்பாரி வளர்த்தல், உப்பும் மிளகும் கலந்து காணிக்கைப் பொருளாக வைத்தல், உலோகம் அல்லது மரத்தால் செய்யப்பட்ட உடல் உறுப்புக்களைக் காணிக்கையாக வழங்கி குறிப்பிட்ட உடல் உறுப்பில் ஏற்பட்ட நோயைப் போக்கிக் கொள்ளலாம் என்று நம்புதல், தென்னை மரக்கன்றைக் காணிக்கையாக வழங்கல், கால்நடையாகக் குறிப்பிட்ட தலங்களுக்குப் பயணித்தல் என அவர்கள் மேற்கொள்ளும் செயல்கள் அவர்களது பழைய சமயவாழ்வின் தாக்கத்திற்கு ஆட்பட்டவைதாம். இவ்வாறு பண்பாட்டு வாழ்வில் இருவேறு பண்பாடுகள் இணைவதை பண்பாடு ஏற்றல் (Inpulpration) என்று மானிடவியலாளர்

குறிப்பர். தமிழ்நாட்டுக் கத்தோலிக்கத் தேவாலயங்கள் சிலவற்றில் தோல் நோயைப் போக்கிக் கொள்ளும் வழிமுறையாக, துடைப்பத்தைக் காணிக்கையாக வழங்கும் செயலானது, தம் முந்தைய சமய வாழ்வின் எச்சமாக இப்பண்பாடு ஏற்றலை அவர்கள் பின்பற்றி வருவதாகக் கருத இடம் தருகிறது.

விளக்குமாறு வகைகள்:




இருப்பிடத்தைத் தூய்மைப்படுத்த உதவும் கருவியான விளக்குமாறு ஒரே தன்மைத்தது அல்ல, பயன்படும் வட்டாரத்திற்கு ஏற்ப இதில் வேறுபாடுகள் உண்டு. இது நாட்டார் தொழில்நுட்பத்தின் பொதுக்கூறு. இவ்வேறுபாடு ஒருபக்கம் இருக்க, விளக்குமாறுகள் பலவகையாய் அமைவதன் அடிப்படைக் காரணங்களாகப் பின்வருவனவற்றைக் குறிப்பிடலாம்:

1. தூய்மைப்படுத்த வேண்டிய இடத்தின் இயல்பு
2. அதன் துணையுடன் அப்புறப்படுத்த வேண்டிய பொருட்களின் இயல்பு
3. அப்பகுதியில் பரவலாகக் கிடைக்கும் தாவரம்.

திருநெல்வேலி, தூத்துக்குடி ஆகிய இரு மாவட்டங்களில் இக்காரணங்களின் அடிப்படையில் பயன் படுத்தப்படும் துடைப்பங்கள் தாவரங்களைக் கொண்டே உருவாக்கப்படுகின்றன. இத்தாவரங்களை

இயற்கையாகக் கிடைக்கும் தாவரங்கள், மனிதர்கள் பயிர்செய்து வளர்க்கும் தாவரங்கள் என இருவகையாகப் பகுக்கலாம். இயற்கையாகக் கிடைக்கும் தாவரங்களில் இருந்து புல்லுவாரியல், ஒட்டுப்புல் வாரியல் என இரு துடைப்பங்கள் உருவாக்கப்படுகின்றன. மனிதர்கள் பேணி வளர்க்கும் தென்னை மரத்தின் ஓலையில் காணப்படும் தென்னை ஈர்க்கு, பனைமரத்தின் குருத்தோலையுடன் இணைந்து காணப்படும், பனை ஈர்க்கு, பனையின் உச்சிப்பகுதியில் இடம் பெற்றுள்ள பீலி என்னும் உறுப்பு ஆகியனவற்றால் துடைப்பங்கள் உருவாக்கப்படுகின்றன. பயன்பாடு முடிந்த பருத்திச் செடியின் தண்டுப்பகுதி, கத்தரிச் செடியின் தண்டுப்பகுதி, மஞ்சணத்தி (நுணா) மரத்தின் சிறிய கிளைகள் என்பன விற்பனை நோக்கில் இன்றி பயன்பாட்டு நோக்கில் அவ்வப்போது துடைப்பங்களாக உருவாக்கப்படுகின்றன.

புல்லுவாரியல்:

புல்லுமாறு என்றும் இதைக் கூறுவர். கரிசல் நிலப்பகுதியில் அறுகம் புல்லைப் போன்று தரையில் படரும் களைச் செடியைப் பிடுங்கிச் செய்யப்படுவதால் இது புல்லுவாரியல் எனப் பெயர் பெற்றுள்ளது. இப்புல்லை வாரியப்புல் என்றும் கூறுவர். போக்குவரத்து இல்லாத காலத்தில் நிலமற்ற வேளாண் தொழிலாளர்கள் இப்புல்லைச் சேகரித்துத் துடைப்பமாக ஆக்குவர். சிறார் முதல் முதியோர் வரை இதன் உருவாக்கத்தில் பங்கு பெறுவர். கரிசல் நிலப்பகுதியில் விளையும், கம்பு கேழ்வரகு, சாமை, சோளம், வரகு ஆகிய தானியங்களுக்குப் பண்டமாற்றாக இதை வழங்குவர். மண் தரைகளாலான வீடுகளில் பயன்படுத்த இது உதவும் தன்மையது. இதைப் பயன்படுத்தி தரையைக் கூட்டும்போது சாணியால் மெழுகப்பட்ட மண் தரை கிளறப்படுவதில்லை. உணவருந்தும்போது சிதறிய உணவுப் பொருட்கள் நைந்துபோய், தரையுடன் ஒட்டிக்கொள்வதில்லை. தண்ணீர் தேங்கியுள்ள செங்கல் தரைகளில் இதைப் பயன்படுத்துவது கிடையாது.

ஒட்டுப்புல் துடைப்பம்:

மூன்று அல்லது நான்கடி உயரத்திற்கு மெல்லிய தண்டுடன் குப்பைமேடுகளிலும், ஊருக்கு வெளிப் பகுதியிலும் வளரும் புல்வகை ஒன்றுண்டு. இதன் மேல் பகுதியில் குத்தும் தன்மை கொண்ட மெல்லிய மலர் போன்ற ஒரு உறுப்பு உண்டு. இது மனிதர்களின் ஆடையிலும் உயிரினங்களின் தோலிலும் ஒட்டிக்கொண்டு குத்தும் தன்மையது. சீலைப்புல் என்றும் இப்புல்லை அழைப்பர். இது காற்றில் பரவி இப்புல்லின் இனப்பெருக்கம் நிகழ்கிறது. இப்புல்லை அறுத்துக் காயவைத்து துடைப்பம் உருவாக்கப்படுகிறது. இப்புல்லின் அடிப்பகுதி துடைப்பத்தின் அடிப்பகுதியாக அமைய உச்சிப்பகுதி துடைப்பத்தின் நுனிப்பகுதியாக அமையும். நுனிப்பகுதி மென்மையாக இருப்பதால் செங்கல்

பதிக்கப்பட்ட தரைகளிலும், சிமெண்ட் பூசப்பட்ட தரைகளிலும் படியும் தூசியை நன்கு அப்புறப்படுத்தும் தன்மையது. இதைப் பயன்படுத்தத் தொடங்கும்போது உச்சிப்பகுதியில் உள்ள மலர் போன்ற அமைப்பு தரையில் உதிர்வதுடன், மனிதர்களின் ஆடையில் ஒட்டிக்கொண்டு குத்தி வருத்தும். சற்றுப் பயன்படுத்திய பின்னரே இத்தொல்லையில் இருந்து விடுபட முடியும். ஈரம் படிந்த தரையில் இதைப் பயன்படுத்த முடியாது. தூசியை அப்புறப்படுத்த இது நன்கு உதவும்.

தென்னை ஈர்க்குத் துடைப்பம்:

தென்னை ஓலையின் நடுவில் உள்ள சிறுகுச்சி போன்ற பகுதி ஈர்க்கு எனப்படும் ஈர்க்கினால் இது உருவாக்கப்படுகிறது. சொரசொரப்பான கல் பதிக்கப்பட்ட தரைகளைப் பெருக்குவதற்கு இது நன்கு உதவும். கல்தரைகளிலும், சிமெண்ட் பூசப்பட்ட தளங்களிலும், குப்பையை அகற்ற மட்டுமின்றி தண்ணீர் ஊற்றித் தேய்த்துக் கழுவவும் மரப்பொருட்களைத் தண்ணீர் ஊற்றிக் கழுவவும் இது நன்கு பயன்படும். விறகு அடுப்புகள் பயன்பாடு மிகுந்திருந்த பழைய காலத்தில் அடுப்பங்கரைச் சுவர்களும், புகைக்கூண்டின் உட்பகுதியும் புகைபடிந்து கருநிறமாகக் காட்சியளிக்கும். இதன் மீது நீரை ஊற்றி இத்துடைப்பத்தால் அழுத்தித் தேய்த்து கருநிறத்தைப் போக்குவர். ஈரம் காய்ந்த பின்னரே வெள்ளையடிப்பு நிகழும். வீடுகளின் சுவர்களில் இடம்பெறும் ஒட்டடை, சிலந்திப்பூச்சிகளின் வலை இவற்றை அகற்றவும், இதன் பயன்பாடு தவிர்க்க இயலாத ஒன்று. அதிக உயரத்தில் இதைப் பயன்படுத்த நீண்ட கம்பின் நுனியில் இதை இறுக்கிக்கட்டி ஒட்டடை குச்சியாகப் பயன்படுத்துவதுண்டு. இன்றும் கூட இது வழக்கில் உள்ளது.

பனை ஈர்க்குத் துடைப்பம்:

பனையின் உச்சிப்பகுதியில் உருவாகும் வெண் நிறமான குருத்தோலை வளர்ச்சியுற்று பச்சை நிற ஓலையாக மாறும். இந்நிலையில் அதைச் சாரோலை என்பர். தென்னை ஓலையைப் போன்று சாரோலை நடுப்பகுதியில் ஈர்க்கு உருவாகும். சாரேலையின் அகலத் தன்மையைக் குறைத்து ஓலையையும் ஈர்க்கையும் பிரிக்காது துடைப்பம் செய்வர். இதனால் இதில் ஓலையும் ஈர்க்கும் இணைந்து காணப்படும். ஒட்டுப்புல் துடைப்பத்தைப் போன்று தூசி அகற்ற இது பயன்படும். ஆனால் அதைவிட ஓரளவுக்கு ஈரத்தரையில் பயன்படுத்தலாம். என்றாலும் தென்னை ஈர்க்குத் துடைப்பம் போன்று ஈரத்தரையில் பயன்படுத்த முடியாது.

பீலித் துடைப்பம்:

ஆண் பனையின் உச்சியில் மட்டைகளுக்கு இடையில் பாளை என்ற உறுப்பு உருவாகும். இதைச் சீவியே கள்/பதநீர் எடுப்பர். பாளையின் பாதுகாப்பக்

கவசம் போன்று பீலி என்றழைக்கப்படும் ஓர் உறுப்பு உண்டு. இதைக் கொண்டும் துடைப்பம் செய்வர் ‘வாரியப் புல்’ துடைப்பம் போன்று இதன் பயன்பாடு அமையும்.

பிற துடைப்பங்கள்:

சரளைக்கற்கள் உள்ள நிலப்பகுதியிலும் மாட்டுத்தொழுவங்களிலும் பயன்படுத்த மேற்கூறிய துடைப்பங்கள் பயன்படாது. இந்நிலையில் பருத்தி, கத்திரி ஆகிய செடிகளின் பயன்பாடு முடிந்த நிலையில் அவற்றைப் பிடுங்கி வெயிலில் காயவைத்து, வைக்கோலைப் போன்று சேகரித்து வைப்பர். இவை உயிரினங்களுக்கும் உணவாகப் பயன்படாது. எரிபொருளாக மட்டுமே பயன்படும். இவற்றைக் கொண்டு துடைப்பம் போல் உருவாக்கி சரளைக்கற்களை அகற்றவும் மாட்டுத் தொழுவங்களில் சேரும் சாணம், தீவனக் கழிவுகளை அகற்றவும் பயன்படுத்துவர். இதே பணிகளுக்காக, சோளத்தட்டை, மஞ்சணத்தி (நுணா) மரத்தின் கிளைகள், நொச்சி செடியின் கிளைகள் ஆகியனவற்றைப் பயன்படுத்துவதுண்டு. நீர்வளம் மிக்க பகுதிகளில் வளரும் சிலவகையான நீர்க்கோரைகளை அறுத்துக் காயவைத்து துடைப்பம் செய்வதும் உண்டு.

மொத்தத்தில் தாவரங்களைக் கொண்டு உருவாக்கப்படும் துடைப்பங்கள், பயன்படுத்தும் தளம், அகற்றப்பட வேண்டிய கழிவுகள் அவ்வப்பகுதிக்குரிய தாவரங்கள் என்பனவற்றை மையமாகக் கொண்டு வட்டாரத் தன்மையுடன் உருவாக்கப்படுகின்றன. அத்துடன் பயன்பாடு முடிந்த பின்னர், மண்ணில் மக்கி உரமாகி மண்ணுக்கு வளம் சேர்க்கின்றன. சுற்றுப்புறச் சூழலைச் சீர்குலைப்பதில்லை.

நன்றி:
உயிர் - மார்ச்-ஏப்ரல் 2019
நாட்டார் வழக்காறு

ஒளிப்படங்கள்:
சோ.தர்மன், முனைவர் ராமர் ரபெல் மத்வெட், பா.வெங்கடேசன், சு.உமாசங்கர், விக்கிபீடியா

## 24. எம்.ஜி.ஆர். என்றொரு தேவதூதன்

***– கதிரவன்***

1987-88 ம் வருடம், நான் 8 ஆம் வகுப்பு படித்துக்கொண்டிருந்தேன். இயல்பாகவே ஓவியம் வரைவதில் அதிக நாட்டம் காட்டியதால் வகுப்பு ஆசிரியர்கள் அனைவராலும் கவனிக்கப்பட்டு உற்சாகப்படுத்தப்பட்டேன், "மெட்ராசுல ஓவியக்கல்லூரி இருக்கு, அங்க போயி படிச்சா பெரிய ஆர்ட்டிஸ்ட் ஆயிடுவ " என்று உசுப்பேற்றி விட்டனர்,

அதன் பிறகு வேறு எதிலும் கவனம் செல்லவில்லை, ஓவியக்கல்லூரி கனவிலேயே வாழ்ந்துகொண்டிருந்தேன். வீட்டில் சூழ்நிலையே வேறு,பெரிய படிப்பாளி குடும்பம், அப்பா தமிழாசிரியர், திராவிட இயக்கங்களில் தீவிரமாக இயங்கிக்கொண்டிருந்தவர், அக்காவும் தம்பியும் புத்தகப்புழுக்கள், கணக்குப்புலிகள்! வீட்டில் நான் எப்பொழுதுமே குற்றவாளிக் கூண்டில்தான் !
“அவங்களைப்பாரு! எல்லா பாடத்துலயும் 85 % மதிப்பெண்கள்! ஆனா நீ?!" என்ற சாட்சிகளில்லாத விசாரணைக்குப்பின் பிரம்படி தண்டனை என்பது வழக்கமான ஒன்று !

எனது இலட்சியத்தை அடைய உதவும் ஒரு "divine intervention" க்காக அனுதினமும் வேண்டிக்கொண்டிருந்த காலம் அது!

இந்த சூழ்நிலையில், எங்கள் தெருவில் ஒரு அண்ணா பெயர்ப்பலகைகள் எழுதும் கடை வைத்திருந்தார். எனக்கு அந்த கடை தான் தப்பிக்கும் புகலிடம். அந்த அண்ணா என்னை நிறைய வரையச் சொல்லி ஊக்கப்படுத்துவார் ! அதற்காக அப்பாவால் கண்டிக்கப்பட்டும் அதை அவர் பொருட்படுத்தவில்லை.

அரையாண்டு தேர்வு விடுமுறையில் நான் ஏறக்குறைய அந்த கடையின் ஊழியனாகவே மாறிவிட்டேன்.

அந்த சமயத்தில் கோவையில் அதிமுக சொந்த கட்டிடம் வாங்கி அதிமுக மாவட்ட தலைமையகம் திறக்க ஏற்பாடுகள் நடந்துகொண்டிருந்தன. அந்த கட்டிடத்தில் சுவரோவியம் மற்றும் பேனர்கள் வரையும் பணியை அந்த அண்ணா பெற்றிருந்தார், கட்டிடத்தைத் திரு. எம்.ஜி.ஆர். அவர்கள் திறப்பதாக

ஏற்பாடு, அப்பொழுது அவர் முதலமைச்சர், அமெரிக்காவில் சிகிச்சை முடிந்து திரும்பியிருந்தார்.

விழாவிற்குக் கடைசி மூன்று நாட்கள் நாங்கள் இரவு பகலாக வேலை செய்துகொண்டிருந்தோம், விழாவிற்கு முதல் நாள் மாலை, எம்.ஜி.ஆர் அவர்கள் விழா ஏற்பாடுகளைப் பார்வையிட அந்த கட்டிடத்திற்கு வருவதாக அறிவிக்கப்பட்டது. ஒரே பரபரப்பு, பெரிய கூட்டம் கூடிவிட்டது, எங்களுக்கு விரைந்து வேலையே முடிக்கச்சொல்லி நெருக்கடி.

இரவு சுமார் ஒன்பது மணியளவில் எம்.ஜி.ஆர். அவர்களும் ஜானகி அம்மா அவர்களும் பெரிய மந்திரிமார் படையுடன் விழா கட்டிடத்திற்கு வந்தார்கள். எம்.ஜி.ஆர் அவர்கள் விழா ஏற்பாடுகளைப் பார்வையிட்டுக்கொண்டே மெதுவாக நடந்து வந்தார், சிகிச்சைக்குப்பின் உடல் தளர்ந்திருந்தது.

நான் திரு அண்ணாதுரை அவர்களின் படத்தை வரைந்துகொண்டிருந்தேன். என் அருகே வந்ததும் சற்று நின்றார், நான் வரைவதை விட்டுவிட்டு "ஆ" வென அவரையே பார்த்துக்கொண்டிருந்தேன். திரையில் பார்த்த அந்த உருவம் நேரில் அதுவும் மிக அருகில் நிற்பதை என்னால் நம்ப முடியவில்லை, கனவு போல இருந்தது! ,

அப்பொழுது, விழா ஏற்பாடுகளுக்குப் பொறுப்பான ஒருவர் என்னைக்காட்டி, “இந்த பையன் ஸ்கூல் படிச்சிட்டே வேலையும் செய்யிறான்! நல்ல வரையிறான் " என்று அறிமுகப்படுத்தினார்,

எம்.ஜி.ஆர். அவர்கள் என் தோளைத்தட்டி, கைகளை ஆட்டி ஏதோ சைகை செய்தார். பேச்சு வரவில்லை, எனக்கு ஒன்றும் புரியவில்லை, ஆனால் அறையிலிருந்த அனைவரும் என்னைப் பார்த்து "என்ன வேணுமுன்னு கேக்கறார் ! சொல்லு" என்று கத்தினார்கள்! உடனே நான் சுதாரித்துக்கொண்டு “மெட்ராசுல ஓவியக்கல்லூரியில் படிக்கணும்" என்றேன். சிரித்தபடி தட்டிக்கொடுத்துவிட்டு ஜிப்பா பாக்கட்டில் கையை விட்டு சில நூறு ரூபாய்த் தாள்களை எடுத்துச் சுருட்டி என் கையில் வைத்து அழுத்தினார். பணத்தைக் கொடுத்ததும் அருகில் நின்றிருந்த தனது தனிச்செயலரை (திரு.பரமசிவம் ஐ.ஏ.எஸ்.) அழைத்து சைகையில் ஏதோ சொல்லிவிட்டு நகர்ந்து சென்றுவிட்டார்! தனிச்செயலர் என்னை அழைத்து எனது பெயர், முகவரி ஆகியவற்றைக் கேட்டுக் குறித்துக்கொண்டார். நடந்ததெல்லாம் ஏதோ பிரமை போல இருந்தது எனக்கு!

ஒரு வாரம் கழித்து வீட்டுக்கு ஒரு கடிதம் வந்தது. சென்னை ஓவியக்கல்லூரி முதல்வரிடமிருந்து, "உடனே வந்து முதல்வரைச் சந்திக்கவும்"

என்று குறிப்பிட்டிருந்தது. அப்பா தன் சக்தியையும் மீறி ஏதோ நடக்கிறது என்று எண்ணி மௌனமாக இருந்துவிட்டார். நான் அவரிடம் காசு கூட கேட்கவில்லை, எம்.ஜி.ஆர். அவர்கள் கொடுத்த காசு என்னிடம் இருந்தது. அம்மா சென்னையிலிருந்த ஒரு மாமாவுக்குத் தகவல் அனுப்பிவிட்டார்கள். நான் தனியாக ரயிலேறி சென்னை சென்று நேரே ஓவியக்கல்லூரி அலுவலகத்திற்குச் சென்றுவிட்டேன். கோவையிலிருந்து நான் வந்திருக்கிறேன் என்று கூறி கடிதத்தைக் காண்பித்தேன். அங்கேயும் பரபரப்பு, அப்பொழுது கல்லூரி முதல்வர் திரு.சந்தானராஜ் அவர்கள், அவரும் பிற ஆசிரியர்களும் அலுவலகத்தில் கூடிவிட்டனர். என்னை உள்ளே அழைத்தனர். முதல்வர் என்னைப் பார்த்து "தம்பி முதல்வர் ஆபிசிலிருந்து எங்களுக்கு ஒரு லெட்டர் வந்திருக்கு, உனக்கு உடனே காலேஜில ஒரு சீட் கொடுக்கச்சொல்லி கேட்டிருக்காங்க, முதல்வரே கையெழுத்து போட்டிருக்காரு! யாரப்பா நீ? என்ன நடந்தது " என்று கேட்டார்.

நான் நடந்ததைக் கூறினேன், வியப்புடன் அனைத்தையும் கேட்டுவிட்டு, "சரி, சர்டிபிகேட் எல்லாம் சப்மிட் பண்ணிடு, நீ இன்னைக்கே காலேஜில சேர்ந்துக்கலாம், உனக்கு எண்ட்ரன்ஸ் எக்ஸாம் எல்லாம் கிடையாது" என்று கூறினார். நான் மெதுவாக "சார் சர்டிபிகேட் எல்லாம் ஸ்கூல்ல இருக்கு, நான் 8ம் வகுப்பு படிச்சிட்டிருக்கேன்" என்று கூறினேன்! அவர்களுக்கு அதிர்ச்சி! " என்னது இப்பதான் 8 ஆவது படிக்கிறாயா" என்று கேட்டார்கள் (ஓவியக்கல்லூரி பட்டப்படிப்பு, பத்தாவது முடித்தபின் ஐந்து வருடங்கள்) "ஆமாம் சார்" என்று தலையாட்டினேன்! சற்று நேரம் ஒருவரை ஒருவர் பார்த்துவிட்டு "சரி தம்பி கொஞ்சம் வெளியில் நில்லு , மறுபடியும் கூப்பிடறோம்" என்றார்கள், சற்று நேரம் கழித்து மீண்டும் உள்ளே அழைத்தார்கள். முதல்வர் பேசினார் "தம்பி உனக்கு சீட் கன்பார்ம், ஆன எப்படியாவது பத்தாவது முடிச்சிட்டு வந்துடு" என்று கூறினார்!

அதன் பின் எல்லாம் புயல் வேகத்தில் நடந்தது;
கோவை திரும்பி நடந்ததைக் கூறியதும் அப்பா வருத்தத்துடன் தலையாட்டிவிட்டார். நேரே பள்ளி சென்றேன். தலைமையாசிரியரிடம் விஷயத்தைக் கூறியதும் மிகுந்த மகிழ்ச்சியுடன் வேண்டியதைச் செய்வதாகக் கூறினார், மார்ச் மாதம் நடக்கும் பத்தாம் வகுப்பு பொதுத்தேர்வில் தனித்தேர்வராக எழுதத் தயாரிக்கத்துவங்கிவிட்டேன். மார்ச் மாத தேர்வில் அனைத்து பாடங்களிலும் தேர்ச்சி பெற்றுவிட்டேன்! ( வழக்கம் போல ஜஸ்ட் பாஸ்!) ஜூன் மாதத்தில் கல்லூரியிலும் சேர்ந்துவிட்டேன்!

டிசம்பர் மாதத்தில் எம்.ஜி.ஆர். இறந்துவிட்டார். நான் அப்பொழுது கல்லூரியில் முதலாம் ஆண்டு படித்துக்கொண்டிருந்தேன். பள்ளி நாட்களிலேயே அப்பாவின் திராவிட இயக்க செயல்பாடுகளைக் கவனித்து வளர்ந்ததாலும்

அப்பொழுதே சில புத்தகங்கள் படிக்கத் துவங்கியிருந்ததாலும், எம்.ஜி.ஆர் அவர்களின் மேல் அவருடைய திரை சாகசங்களை ரசித்ததைத் தவிரப் பெரிய ஈடுபாடு இருந்தது கிடையாது. ஆனால் அவருடைய வள்ளல் தன்மையும், வேண்டி வருவோர்க்கு இல்லையெனாது வழங்கும் குணத்தையும் எதிர்க்கருத்து கொண்டவர்களே பாராட்டிப்பேசவும் கேட்டிருக்கிறேன்.

தமிழ் நாட்டின் எங்கோ ஒரு மூலையில் இருந்துகொண்டு, ஆசைப்பட்ட ஒரு இலக்கை எண்ணி கனவு மட்டும் கண்டுகொண்டிருந்த ஒரு சிறுவனுக்கு, அது கைகூடச் சாத்தியமில்லாத சூழ்நிலையிலும், அவன் முன் திடீரென ஒரு தேவதைபோல தோன்றி, அவனுடைய நியாயமான ஆசையை நிறைவேற்றிக் கொடுத்த திரு எம்.ஜி.ஆர். அவர்கள் என்னைப் பொறுத்தவரையில் ஒரு தேவதூதன் தான் !

---

கதிரவன் கோவையைச் சேர்ந்தவர். சென்னை ஓவியக்கல்லூரியில் "வடிவமைப்பு மற்றும் காட்சிவழித்தொடர்பு " (Design & visual communication) பட்டப்படிப்பு முடித்தவர். கல்லூரி முடித்தபின் அனிமேஷன் துறையில் 10 ஆண்டுகள் பணியும், இந்தியாவில் தயாரித்த அணைத்து அனிமேஷன் திரைப்படங்களிலும் பணியாற்றி இருக்கிறார். அதன் தொடர்ச்சியாக அடுத்த 10 ஆண்டுகள் பொழுது போக்கு பூங்காக்கள் வடிவமைத்தல் மற்றும் கட்டமைத்தல் (designing and Developing Theme parks and amusement parks) துறையில் பணியாற்றுகிறார். தற்பொழுது, தனி நிறுவனம் துவக்கி (www.mustudios.net), அந்தமான் - நிக்கோபார் தீவுகளிலும் , லட்சத் தீவுகளிலும் அரசின் சுற்றுலா வளர்ச்சி பணிகளின் ஆலோசகராக (Consultant) பணியாற்றி வருகிறார். மலைப் பகுதிகள் மற்றும் கடற்கரைப் பகுதிகள் போன்ற சூழல் உணர்திறன் மண்டல (Eco Sensitive Zones) சுற்றுலா வளர்ச்சி திட்டங்களின் ஆலோசகராகவும் இருந்து வருகிறார்.

## 25. என்னைக் கவர்ந்த பாரதியின் கவிதை

*– முனைவர் ச. கண்மணி கணேசன்*

பாரதியார்- பெயரைச் சொன்னாலே உள்ளத்தில் உணர்ச்சி வெள்ளம் பெருக்கெடுக்கும். எளிய சொல், எளிய நடை, எளிய சந்தம் இவற்றுக்கெல்லாம் மேல் புதிய உத்தி, புதிய செய்தி அடங்கிய சோதி மிக்க நவகவிதை தந்தவர் பாரதியார். அவரது படைப்புகள்-

தூங்கிக் கிடக்கும் மனங்களைத் துடிப்போடு துள்ளி எழ வைக்கும்.
சோர்ந்து கிடக்கும் மனங்களைச் சுறுசுறுப்பாக்கித் துயர் கெடுக்கும்.
வாடிக் கிடக்கும் மனங்களை வலிவாக்கி ஒளி கொடுக்கும்.

தேடிப் பார்க்கத் தேவை இல்லை; ஒரு சான்று சொல்கிறேன்; கேட்டுப் பாருங்கள்.

"நல்லதோர் வீணை செய்தே அதை நலங்கெடப் புழுதியில் எறிவதுண்டோ
சொல்லடி சிவசக்தி என்னைச் சுடர்மிகும் அறிவுடன் படைத்து விட்டாய்
வல்லமை தாராயோ இந்த மாநிலம் பயனுற வாழ்வதற்கே
சொல்லடி சிவசக்தி நிலச்சுமையென வாழ்ந்திடப் புரிகுவையோ"

இறைவன் மனிதனைப் படைக்கிறான். எப்படிப் படைக்கிறான்?

அழகிய வீணையெனப் படைக்கிறான்.
வீணையினின்று எழுவது இனிய நாதம்; இன்ப வெள்ளம்!
ஆனால் உலகில் நடப்பதென்ன?

மனிதனாகிய இனிய வீணை நலங்கெடப் புழுதியில் எறியப்படுவதைப் பார்க்கின்றோம். காவியம் படித்து, நல்ஓவியம் தீட்டி, அறிவுநூல் பல கற்று விளக்கம் பெற வேண்டியவன்; சோர்வினால் சோம்பிக் கிடந்தான் சுதந்திரப் போராட்ட காலத்தில்...

நாட்டின் நலத்தில் நாட்டமில்லை;
அதன் ஏற்றத்தில் எண்ணமில்லை;
சுயநலச் சேற்றிலே சுழல்கிறான்;
இலஞ்சப் புழுதியில் புரள்கிறான்.
அதனால் தான் வினவுகிறார்-

'நல்லதோர் வீணைசெய்தே அதை நலங்கெடப் புழுதியில் எறிவதுண்டோ?' என...

இந்நிலை மாறவேண்டும். அதைத்தான் சிவசக்தியிடம் வேண்டுகிறார்... என்னவென்று?

'வல்லமை தாராயோ இம்மாநிலம் பயனுற வாழ்வதற்கே' என்று.. இங்கே தன்னலம் பேசவில்லை; பாரதியின் தாயுள்ளம் பேசுகிறது.

'சொல்லடி சிவசக்தி' என்று பராசக்தியை அவர் கேட்கும் தொனியைப் பாருங்கள். அந்தக் கேள்வியில் ஒரு உரிமை;

ஆதிசக்தியையே தன் கவிதையால் கட்டிப்போடும் நெருக்கம்;
தன் அறிவில் தான் கொண்ட நம்பிக்கை.
அந்த அறிவும் சாதாரண அறிவு அல்ல; சுடர்மிகும் அறிவு.

ஆம்;

அச்சமெனும் இருளகற்றி மக்கட்சமுதாயத்திற்கே வழிகாட்டும் அறிவு.
மூடநம்பிக்கை எனும் இருளகற்றி மனிதகுலத்திற்கே வழிகாட்டும் அறிவு.
சாதி வேறுபாடெனும் இருளகற்றி மானுடக் கூட்டத்திற்கே வழிகாட்டும் அறிவு.
பெண்ணடிமைப் பேரிருளை அகற்றி பேதையரை மேதையராக்கும் அறிவு.
'சொல்லடி சிவசக்தி' என்று உலகநாயகியையே ஆணையிடும் அறிவு.
அவள் தந்த அறிவை அவளுக்கே மீண்டும் நினைவூட்டும் அறிவு

இத்தகைய அறிவுணர்வும், நம்பிக்கையும் பெருகினால் நாடாளும் பிரதமர் முதல் நாட்கூலி வாங்கும் சாமானியன் வரை அனைவரும் மாநிலம் பயனுற வாழலாம். அதனால் அறியாமை அகலும்;

அச்சம் விலகும்; இல்லாமை நீங்கும்;
இன்பம் பெருகும்; உலகம் ஒளிபெறும்;
உத்தமர் பெருகுவர்; எல்லாருக்கும் எல்லாமும் கிடைக்கும்.

சுடர்மிகும் அறிவுடன் சக்தியை வேண்டிய பாரதியார்;

செருக்கினால் நிலைதிரியவில்லை.
ஆணவத்தால் அறிவு பிறழவில்லை.
அச்சத்தால் பின்வாங்கவும் இல்லை.

'நிலச் சுமையென வாழ்ந்திடப் புரிகுவையோ' என்று கெஞ்சும் தொனியைக் கேளுங்கள். அந்தக் கெஞ்சலில் ஒரு உருக்கம்;

உன்னுள் நான் அடக்கம்;
உன் விருப்பமே; எண்ணமே; என்செயல் என்ற அடக்கம்;
உன்னருள் இன்றேல் உன்மத்தன் ஆவேன் என்ற அடக்கம்;
பூமிக்குப் பாரமாய்ப் பொழுதைப் போக்க விடாதே என்ற ஏக்கம்.

என்ன அற்புதமான கலவை!

சுடர் மிகும் அறிவு;
அதை மாநிலத்தின் பயனுக்கு அர்ப்பணிக்கும் அறவுணர்வு;
ஆனால் அகங்காரத்தில் மூழ்கிவிடாத தெளிவு;
தன்னால் முடியுமென்ற நம்பிக்கை;

நல்லதோர் வீணையாய் மாநிலத்து உயிர்களெல்லாம் பயன்தர வேண்டும் என்ற எதிர்பார்ப்பு- இப்படி இரத்தினச் சுருக்கமாக அத்தனையும் பிழிந்து தரும் படைப்பு.

"நல்லதோர் வீணை செய்தே அதை நலங்கெடப் புழுதியில் எறிவதுண்டோ
சொல்லடி சிவசக்தி என்னைச் சுடர்மிகும் அறிவுடன் படைத்து விட்டாய்
வல்லமை தாராயோ இந்த மாநிலம் பயனுற வாழ்வதற்கே
சொல்லடி சிவசக்தி நிலச் சுமையென வாழ்ந்திடப் புரிகுவையோ"

இந்த நூற்றாண்டின் மனித இனம் முழுமைக்கும் எடுத்துக் கூறும் தகுதி பெற்ற ஏற்றம் மிகுந்த பாட்டு இது தான். பாரதியின் கவிதை என்றால் களிப்படையா உள்ளமேது? கள்வெறி கொள்ளாத மனமேது?

தொடர்பு: முனைவர் ச. கண்மணி கணேசன் (kanmanitamilskc@gmail.com)

## 26. காலக் கவிதைகள்

### *– திருத்தம் பொன். சரவணன்*

**மாலைநேரத்து மயக்கம்**

*கதிரை மாய்த்தன்று ஓங்கல்*
*கங்குல் உய்த்தன்று திங்கள்*
*கண்ணை மூய்த்தன்று கமலம்*
*வெண்பல் ஏய்த்தன்று தளவம்*
*குடம்பை சேர்ந்தன்று குறும்பூழ்*
*மன்றம் ஊர்ந்தன்று மாவும் – மெல்ல என்*
*உயிரைத் தேய்த்தன்று மாலை.*

பொருள்: கதிரவன் பெரிய மலையின் பின்னால் சென்று மறைந்துகொள்ளவும் இருளைக் கிழிப்பதுபோல் நிலவு வெளிப்படவும், நிலவைக் கண்டதும் தாமரைமலர் தனது கண்ணை மூடிக் கொள்ளவும், இதைக்கண்ட முல்லைக்கொடியானது தனது வெண்ணிறப் பற்களைக் காட்டிக் கேலியாகச் சிரிக்கவும், பறவைகள் தங்களது கூடுகளைச் சென்று அடையவும், ஆடுகளும் மாடுகளும் தங்கள் தொழுவத்திற்குத் திரும்பவும் இதோ மாலைப் பொழுது வந்தே விட்டது. என் உயிர் என்னைவிட்டு மெல்லப் பிரியத் தொடங்கி விட்டது.

**நன்றே செய்க ! இன்றே செய்க !!**

*தோன்றிய இடந்தனைக் காணலும் ஆகா*
*ஊன்றிய இடந்தனை உணர்தலும் ஆகா*
*ஞான்றிய உலகிதில் நம்மிடம் எதுவென*
*சான்றுகள் காட்டுவ நமதுநற் செயலே.*

பொருள்: நாம் உருவான இடமான கர்ப்பப்பையினை நாம் காண இயலாது. அதைப்போல நாம் இறந்த பின்னால் நம்மைப் புதைத்து ஊன்றிய இடத்தையும் நம்மால் உணர இயலாது. அந்தரத்தில் தொங்கிக் கொண்டிருக்கும் இப் பூவுலகில் நமக்கான இடம் எதுவென்று நமக்குத் தெளிவாகக் காட்டும் சான்றுகளாக இருப்பவை நாம் செய்யும் நற்செயல்கள் மட்டுமே. ஆதலால் நன்றே செய்க ! அதையும் இன்றே செய்க.!!

தொடர்பு: திருத்தம் பொன். சரவணன் vaendhan@gmail.com

## 27. உறவு

*– ப்ரீத்தி ராஜகோபால்*

பேசும் வார்த்தைகளில் அவதானமாய் இருங்கள்
வீசும் கற்களை விடப் பேசும் வார்த்தைக்கு
வலிமை அதிகம்

நரம்பில்லா நாக்கில் பிறழும் வார்த்தைகள்
ஆலகால விஷத்தை விடக் கொடியது
உயிரோடு கொல்லும்

பல வர்ணங்கள் பூசப்பட்ட பேச்சுக்கள் நம் முகத்திற்கு முன்
முதுகை காட்டி திரும்பினால் சாயம் போன புடவை போல்
உண்மை உருவம் வெளிப்படுகிறது

யோசிக்க மறந்து பேசிய வார்த்தைகள்
மாறாத வடுவாய் என்றும் நெஞ்சில்
மறந்தும் மயங்கிவிடாதே புழச்சிக்கு

ஒற்றை சொல் போதும் உறவு அறுந்துவிடும்
ஓராயிரம் முறை மண்டியிட்டாலும்
ஒட்டவைக்க இயலாது அறுத்த உறவை

தொடர்பு: ப்ரீத்தி ராஜகோபால் (rajagopalpreethi04@gmail.com)

## 28. எங்கோ ஒரு பெண்

*– பழமைபேசி*

எங்கோ ஒரு பெண்,
குடத்தை எடுத்து வருகையில்
கால் இடறிக் கீழே விழுந்து கொண்டிருக்கக்கூடும்!
எங்கோ ஒரு பெண்,
குழாயடியில் வேசிப்பட்டம் சுமந்தபடி
குடத்தைத் தூக்கித் தலையில்
வைத்துக் கொண்டிருக்கக்கூடும்!

எங்கோ ஒரு பெண்,
பனிக்குடம் உடைந்து நீரொழுக நீரொழுக
குடம் தண்ணீரைச் சுமந்தபடியே
வந்து கொண்டிருக்கக்கூடும்!
எங்கோ ஒரு பெண்
முறைவிட்டுக் கொடுக்காததில்
படுத்தெழுந்ததாய்ப் பட்டங்கள் சூட்டப்பட்டு
மகனின் முகம் பார்க்கவியலாமல்
குமைந்து குறுகிக் கொண்டிருக்கக்கூடும்!

எங்கோ ஒரு பெண்,
மணிக்கணக்கில் குடம் தூக்கியபடி இருக்க
ஊட்டமின்றிச் சுருண்டு
கீழே விழுந்து கொண்டிருக்கக்கூடும்!
எங்கோ ஒரு பெண்,
மூச்சடக்கி மூச்சடக்கிச் சுமந்ததில்
நெஞ்சுதூர்ந்து செத்துக் கொண்டிருக்கக்கூடும்!

எங்கோ ஒரு பெண்,
தண்ணீரெனக் கடன் ஒத்திப்போட்டத்தில்
நஞ்சேறிப் பிணியேறிச் செத்துக் கொண்டிருக்கக்கூடும்!
எங்கோ ஒரு பெண்,
உறக்கமின்றி எழுந்தெழுந்து எதிர்நோக்கி
குழாயும் கண்ணுமாய்ச் செத்துச் செத்து
பிழைத்துக் கொண்டிருக்கக்கூடும்!

எங்கோ ஒரு பெண்,
சிந்திய நீரில் கால்வழுக்கி
குடத்தோடு விழுந்ததில்
விலா எலும்பை முறித்துக் கொண்டிருக்கக்கூடும்!
எங்கோ ஒரு பெண்,
தண்ணீர்ப் பணியால்
கல்வி சறுக்கிக் கொண்டிருக்கக்கூடும்!

எங்கோ ஒரு பெண்,
தண்ணீர்ச் சிந்தையினால்
வேலையிடத்தில் கவனமிழந்து கொண்டிருக்கக்கூடும்!
எங்கோ ஒரு பெண்,
ஊட்டமும் சத்துமின்றி
தண்ணீர் சுமந்து
தண்ணீர் சுமந்து கொண்டிருந்ததில்
பார்வையைத் துறந்து கொண்டிருக்கக்கூடும்!

எங்கோ ஒரு பெண்,
தண்ணீர் வருமெனச் சொல்லி
உறவுக்காரர் கடைசிமுகம்
பார்க்காமற் தவித்துக் கொண்டிருக்கக்கூடும்!
எங்கோ ஒரு பெண்,
ஒரு வண்டித் தண்ணீரைக்காட்டி
அத்துமீறும் ஆடவனிடத்தில்
தன் மகளையே இழந்து கொண்டிருக்கக்கூடும்!

எங்கோ ஒரு பெண்,
ஊர்வம்பு இழுத்துட்டு வராம இருக்கமாட்டியாவென
யாருக்கு வேண்டுமெனச் சுமந்தாளோ அவனிடமே
அறைபட்டு அழுத கொண்டிருக்கக்கூடும்!
அந்தப் பெண்
உன் வீட்டவளாகவும் இருக்கலாம்!!

தொடர்பு: பழமைபேசி (pazamaipesi@gmail.com)

## 29. ஒரு யுத்த காண்டம்

***– ருத்ரா இ.பரமசிவன்***

"இன்று போய் நாளை வா"
என்றான் அந்த ராமன்.
இந்த ராமர்களோ
சத்தமில்லாமல்
நியாயத்தோடு
ஒரு யுத்த காண்டம்
இரவோடு இரவாய்
நடத்தி முடித்து
எதிர்க்கட்சி எல்லாம் எதற்கு என்று
அந்த பெட்டிக்குள்ளேயே
நடத்தி முடித்த பட்டாபிஷேகத்தோடு
அல்லவா
வெளிக்கிளம்பியிருக்கிறார்கள்.
வாழ்க ஜனநாயகம்!
அதற்கும்
நம் வாழ்த்துக்கள் உரித்தாகுக.
கணிப்பொறிக்குள் விழுந்து
காரணமாகிப்போன
அந்த கள்ளமில்லா பூச்சிகள்
கோடிக்கால் பூதங்களாகும்
காலமும் வரத்தானே போகிறது.
"பிதாவே அவர்களை மன்னியும்.
அவர்கள் என்ன செய்கிறார்கள் என்று
தெரிய இயலாத நிலையில் தான்
இன்னும் இருக்கிறார்கள்."
ஜனநாயகம் என்ற
கிரேக்க நாட்டுச் சிந்தனை
இன்னும் இந்த மண்ணில்
காலூன்றவே இல்லையோ?
எழுபது ஆண்டுகளாய்
நான்கு வர்ணம் என்ற
குறுகிய தொட்டியில் தான்
நம் மூவர்ணம் எனும் பிரம்மாண்ட
ஆலமரத்தை
"போன்சாய்" மரமாய்
குறுக்கி வெட்டிச் சிதைத்து
அழகு பார்த்துக்கொண்டிருந்தோம்.
அது இன்னும் குறுகி
மதவாதிகள் எனும் மந்திரவாதிகளின்
கைவிரல் மோதிரமாய் அல்லவா
மாறிப்போனது.
ஜனநாயகம் எனும்
எங்கள் மூவர்ணத்தாயே!
எங்கள் கண்களின்
பார்வையிலிருந்து நீ
பிடுங்கியெறியப்பட்டாலும்
எங்கள் சிந்தனை வானத்தின்
விடியல் எல்லாம்
உன் வெளிச்சம் தான்.
ஐந்தாண்டு ஒன்றும்
ஏதோ கண்ணுக்கே தெரியாமல்
ஒளிந்து கொள்ளும் ஒளியாண்டு
அல்ல.
மக்களின் உரிமைக்குரல் முழக்கம்
எல்லா மூட்டங்களையும்
தவிடு பொடியாக்கும்.
உனக்கு என்றுமே
வெற்றி வெற்றி வெற்றி தான்.
வெற்றி தவிர வேறில்லை!

தொடர்பு: ருத்ரா இ.பரமசிவன் (ruthraasivan@gmail.com)

## 30. கானடா நாடென்னும் போதினிலே

*– சி. ஜெயபாரதன்*

கானடா நாடென்னும் போதினிலே, இன்பக்
கானம்வந் தோதும் நம் காதினிலே
தேனினும் இனிய தேசமடா, இதைத்
தேடிப் புகுந்ததும் எம் யோகமடா
எங்கெங்கு காணினும் ஏரிகளே, திசை
எப்புறம் நோக்கினும் ஆறுகளே
பொங்குநீர் வீழ்ச்சிகள் மேவுமடா, பனிப்
பூக்களை வானமும் தூவுமடா

ஊசி இலைமரக் காடுகளாம், பனி
ஓங்கும் உயர்மலை மேடுகளாம்
வீசும் பனிப்புயல் வீடுகளாம், குளிரும்
வெப்பமும் மாறிடும் பருவங் களாம்.
ஈரேழு மாநிலப் பனிநாடு, சீராய்
இரட்டை மொழியாளும் தனிநாடு
நீர்வளம், நிலவளம் மிக்கதடா, பயிர்
நிறைய விளைந்திடத் தக்கதடா

முப்புறம் ஆழ்கடல் சூழுமடா, பனி
மூடும் துருவம் வடக்கிலடா
கப்பல் புகும்நீள் நீர் மார்க்கமடா, தென்
காவலாய் அமெரிக்கத் தேசமடா
மேப்பிள் சிவப்பிலைக் கொடிபறக்கும், அருள்
மேவிப் பிறர்க்குக் கொடையளிக்கும்
ஆப்பிளும் பீச்சுக்கனி பழுக்கும், பல்
ஆயிரம் தக்காளிக் காய் தழைக்கும்

தாமிர வைரத் தளங்களடா, ஆயில்
தங்கம் வெள்ளி பெறும் சுரங்கமடா
பூமியில் புதிய காண்டமடா, இதைப்
போற்றிப் புகழ்ந்திட வேண்டுமடா

தொடர்பு: சி. ஜெயபாரதன் (jayabarathans@gmail.com)

## 31. பயம்

***– ருத்ரா இ.பரமசிவன்***

ஒரு இந்து
ஒரு பயங்கரவாதி
ஒரு தீவிரவாதி
இதெல்லாம் சேர்த்து
யாரைக்கூப்பிடுவது.
"கடவுளே!"
ஆம்
அவனைத்தான்.
பின்னே என்ன?
ராம் ராம் என்று
பஜனை செய்யும்
ஒரு மனிதன் இருந்தான்.
அவனைச் சுட்டுத்தள்ள
ஒரு ராம் வந்தான்.
அவன் ஒரு கொலையாளி
அவன் ஒரு இந்து.
அவன் ஒரு பயங்கரவாதி.
அவன் ஒரு தீவிரவாதி.
ஆனாலும்
அவன் ஒரு கடவுள்
என
சுடப்பட்டவன்
"ஹே ராம்"
என்று தான் விழுந்தான்.
கடவுளுக்கு
ஈவு இரக்கம் கருணை
எல்லாம் இல்லை.
ஏனெனில் அவனிடம் "மானுடம்" இல்லை.
எல்லா வேதங்களையும்
வாந்தியெடுத்ததாகச்
சொல்லப்படும் அவனிடம்
அரிது அரிது

மானிடராகப் பிறத்தல் அரிது
என்ற வேதம் அதாவது
அறிவு மட்டும் இல்லை.
இருந்தால் எல்லோரிடமும்
"நான்" தான் இருக்கிறேன்
என்று கீதை சொல்லிவிட்டு
தன்னையே
தற்கொலை செய்வது போல்
இந்த கொலையைச் செய்திருப்பானா?
கேட்டால்
தர்மம் வென்றது என்பான்.
அதர்மமும் அவனுக்குத்
தர்மம் தான்.
கடவுளே
உன்னை "ஈஸ்வர அல்லா" என்று
கூப்பிட்டதற்கா
உன் சங்கு சக்கரங்களைத்
தூர எறிந்துவிட்டு
வெள்ளைக்காரன் கண்ட
துப்பாக்கியைத்தொட்டு
தீட்டுப்படுத்திக்கொண்டு
இந்த பயங்கரத்தைச் செய்திருப்பாய்?
கடவுளே
என்று உன்னைக் கூப்பிடக்கூட
இந்த தேசத்தில் "பயம்"தான்.
"கடவுளா"
இது என்ன மொழி?
சமஸ்கிருதம் இல்லையே
என்று இவர்களைச்சுடுவதற்கு
ஒரு அரசாங்கத்தின் உருவில்
ஒரு அவதாரம் எடுத்தாலும்
எடுத்தாலும் எடுப்பாய் நீ.
இந்தக் கடவுள்கள்
எங்களுக்கு வேண்டாம் இனி.

தொடர்பு: ருத்ரா இ.பரமசிவன் (ruthraasivan@gmail.com)

## 32. இளநீரின் பயன்

***– மலையாண்- சாய் கிரிதர்***

கோடை வன்வெயிலில் வீசுநிழல் கொடாதென்
எட்டிபழுக்கும் ஓங்குநெடு மரமது வெட்டி;
எந்தப் பயனு மில்லையென எண்ணி
வந்திப்போரே சிந்திப்பீரோ தென்னை பயன்?

சுவையுள வெண்காயுள் குலுங்கிச் சுவைதனை
மேம்படுத்தலான் நீரில்லா காயது மட்டைதானே,
தாகம் மட்டுமா தீர்க்கும் இவ்விளநீர்,
பாடல் மூலம் சொல்கின்றேன் அதன்பயன்.

வங்கிக் கணக்கில் வைத்த செல்வம்போல்
வார்த்துறி நீரதனை சுவைமிகு ஏமப்புதைத்து,
வன்வியர்வை வழிந்தோடி இழந்த பற்பல
கணிமச்சத்தை உடலூட்டும் கூற்றந்தவிர் நீரன்றோ

பிறந்தமகவிற்கு தூயதாய் பால்போல் மறவீரர்
உயிர்காத்த நீரது; பலரும் அறியாமெய்யது...
உலகப்போ ரிரண்டில் மருந்தென மறவீரர்தம்
குருதியில் நேரடியாய் செலுத்தினர் இளநீரை!

உடலதில் பித்தம் மிகுந்து கண்களின்
நிறமது மங்கல மஞ்செறி வாய்நின்றால்
துப்பாய் நிற்கும் இளநீர் அதைநாம்
துச்சமாய் எண்ணா திருப்போமே.

கணினி முன்னமர்ந்து வேலைசெயும் நண்பா,
கணிசமாய் எடைமிகுந்து அல்லல்பட; நடைபயிற்சியுடன்
ஒருவேளை உணவாய் இளநீரதை அருந்தினால்
ஓடிவிடும் மிகுஎடை நிச்சயமே.

மிகுவேலை, மனக்கவலை, எனப்பல வருத்தத்தால்
மிகுந்த குருதியழுத்ததை குறைக்கும்; உடல்

மினுமினுப்பு கூட பளபளப்பு கொடுக்க பெண்டிர்
மிகவும் விரும்பி அருந்துவர் இளநீரன்றோ!

நஞ்செனும் மதுவை நலங்கெட் டிரவில்
மஞ்சம் கொளாது அருந்திய மாக்களவர்
இளநீர் அருந்த மக்களாய் தெளிய
நயமாய் சொல்லும் புத்திமதி அவர்கேட்பர்

செரிக்கும் அமிலம் வயிற்றில் மிகுவாய்
நெரிக்கும் வலியதை மடற்றே கொல்லும்
நாள் தோரு மிளநீரை அவரருந்த கெட்ட
கல்லீரல் தானது குணமாகும்.

தொடர்பு: மலையாண்- சாய் கிரிதர் (saigiridhar.iyer@gmail.com)

## 33. த்தூ...

*– வித்யாசாகர்*

பனையோலை காலத்தைத்
தமிழாலே நெய்தோரே,
ஒரு பிடி தமிழள்ளி
உயிர்வரைக் குடித்தோரே;

பசுமாட்டு சாணந் தட்டி
பசி நெருப்பைத் தணித்தோரே,
சுரைக்காயில் சட்டிசெய்து
சம தர்மத்தை அளந்தோரே;

மரத்திலும் நதியிலும்
இறையச்சம் கண்டோரே,
கும்பிட்ட படையலையும்
நான்கு காகத்தோடு தின்றோரே;

உண்மைக்கும் வீரத்திற்கும் உயிரை
நன்றியோடு தந்தோரே,
அன்பென்றும் காதலென்றும் சொல்லி
அறத்தால் உயர்ந்தோரே;

எங்கே தொலைத்தீர்
யாரிடம் விற்றீரையா உம்மை ?
எங்கே காற்றில் போனதோ உங்கள்
மாண்பும் அறிவும் அறமும் ?

இருப்பது ஓருடல் ஓருயிர்
அதைச் சாதியால் பிரிப்பீரோ ?
மதத்தால் பிரிந்து
பின் மனிதத்தைக் கொல்வீரோ?

மானுடம் வெறுக்குதய்யா..
மனசு வலிக்குதய்யா..

ஐயோ; நெஞ்சு பதைக்குதய்யா
நித்தம் மரணம் மரணம் உயிர்கள் துடிக்குதய்யா..

எக்குலம் உன் குலம்
இன்று இரத்தக் குளம் ஆகலாமா?
எம் மொழி எவ்வினம் நீ
சாதி பார்த்துச் சாகலாமா?

ஓங்கி ஓங்கி வெட்டுகிறாய்
நீ கால காலத்தின் நீதிக்கு முப்பாட்டன் அறிவாயோ?
நீண்டு நீண்டு முடியா வரலாறு
அதை நீ ஒற்றைச் சாதிக்குள் அடைப்பாயோ?

அடித்தாலே வலிக்கிறதே; நீ அறுக்கிறாயே?
பொறுக்குமா நெஞ்சம்??
உயிரோடு புதைக்கிறாயே எரிக்கிறாயே
சகிக்குமா தாய்மை யுள்ளம் ??

ஆணென்றும் பாராமல்
பெண்ணென்றும் கூசாமல்,
குழந்தை கிழத்தைக் கூட
கொள்ளுதையா உன் சாதி;

மனிதத்தையும் மதிக்காமல்
சமயத்தையும் நினைக்காமல்
கடவுளின் பேர் சொல்லிக்
கொன்று குவிக்குதையா உம் மதம்;

சுட்டுச் சுட்டு வீழ்த்துவாய்
எல்லாம் வீழ்ந்தபின் நாளை
சுடுகாட்டில் அமர்ந்து அழுதால் -
அடங்கிவிடுமா உனது சாதி வெறி ? மத வெறி?

இருப்பவர் சிரிப்பவர் போனபின்
எஞ்சிய பிணக்காட்டில் நாளை
யாரைக்கண்டு அணைப்பாய்
எதன் வழி நாளை பிறப்பாய் ?

காறியுமிழ்கிறது உன் பிறப்பு
உன் பிணத்தின் மீதும் முகத்தின் மீதும்

த்தூ..!!!

தூக்கிக்கொண்டு ஓடு உன் கோபத்தை
நீயில்லா தெருக்களில் மீண்டும் பிறக்கட்டும்
சாதியின்றி மதமின்றி அந்த
பனையோலைக் காலத்தைத் தமிழாலே நெய்தவர்கள்!!

தொடர்பு: வித்யாசாகர் - www.vithyasagar.com; (vidhyasagar1976@gmail.com)

## 34. பல்சுவைப் பாடல்கள் - தொகுப்பு

*– தேமொழி*

"பல்சுவைப் பாடல்கள்" என்ற தலைப்பின் கீழ் இங்குத் தொகுக்கப்பட்ட பாடல்கள் யாவும் ரவிசந்திரிகா (மீ. ப. சோமசுந்தரம், வானதி பதிப்பகம், நான்காம் பதிப்பு: 1989) என்ற நூலில் மீ.ப. சோமு கதையின் இடையில், ஆங்காங்கே சூழ்நிலைக்குப் பொருத்தமாகக் குறிப்பிட்டுச் சென்ற பாடல்கள். மொத்தம் 25 பாடல்களின் இடத்திற்குப் பொருத்தமான பாடல்வரிகளைக் கொடுத்திருக்கிறார். இவை சித்தர் பாடல், நாடோடிப்பாடல், தேவாரம், திருமூலர் பாடல், பட்டினத்தார், குறவஞ்சி எனப் பற்பல வகையான பாடல்கள்.

கதையில் இடம்பெற்ற பாடல்களின் முழுவரிகளையும் அவர் கொடுத்திருந்தால் அந்தப்பாடல்களும், பாடலின் சில வரிகள் மட்டுமே கொடுக்கப்பட்டு இருந்தால் முழுப் பாடலும், அந்தப்பாடலுக்கு வெவ்வேறு வடிவங்களும் இருப்பின் அவையும் இணையத்தில் தேடி இங்குத் தொகுக்கப்பட்டுள்ளது.

1.

**கோமாளிக் கூத்துப் பாடல்:**

முதல் கோமாளி:
கோமாளி வேஷக்காரன் ராமராமா - நான்
ஏமாளி யல்லவடா ராமராமா!
ஆனையைப் பிடித்திழுப்பேன் ராமராமா - அந்தப்
பூனையைக் கண்டோடுவேண்டா ராமராமா!

புலியைப் பிடித்திழுப்பேன் ராமராமா - அந்த
எலியைக் கண்டோடுவேண்டா ராமராமா!
சிங்கத்தைப் பிடித்திழுப்பேன் ராமராமா - பெண்டாட்டித்
தங்கத்தைக் கண்டோடுவேண்டா ராமராமா!

மற்றொரு கோமாளி ...
"அப்படியானால், ஏ கோமாளி! உன்னுடைய பெண்டாட்டியைத் தான் பூனை என்றும், எலி என்றும், தங்கம் என்றும் சொன்னாயோ?" என்று வசன நடையிலே கேட்டு விட்டுக் கீழ்க் கண்டவாறு பாட ஆரம்பித்தான்:

கோடாலிக் கொண்டை போட்டு - ஏ தங்கமே தங்கம்
கோயிலுக்கு வார பெண்ணே - ஏ தங்கமே தங்கம்
கோடாலிக் கொண்டையிலே - அடியே தங்கமே தங்கம்
கொழுந்திருந்து வாடுதடி - தங்கமே தங்கம்

இப்படிக் கோமாளிகளின் உரையாடல் நடந்து கொண்டிருக்கும் போதே ஒரு பெண்கள் குழு புறப்பட்டு வந்தது.

தன்னானே என்றுதான் சொல்லுங்களேன் - உங்க
நாவுக்குச் சர்க்கரை நான் தாரேன்
தில்லாலே என்றுதான் சொல்லுங்களேன் - நீங்க
தின்னச் சர்க்கரை நான் தாரேன்

ஆனை வாரதைப் பாருங்களேன் - ஆனை
அசைஞ்சு வாரதைப் பாருங்களேன்!
ஆனைப்படலம் போலே நம்ப தேவதை
அட்டிகை மின்னலைப் பாருங்களேன்!

குதிரை வாரதைப் பாருங்களேன் - குதிரை
குதிச்சு வாரதைப் பாருங்களேன்
குதிரைப் படலம்போல நம்ப தேவதை
கொலுசு மின்னலைப் பாருங்களேன்!

இதைத் தொடர்ந்து கோமாளி பாட ஆரம்பித்தான்:
தங்கத்தாலே தாம்பாளமாம்-பெண்டுகளா

இப்படிக் கோமாளி ஆரம்பித்ததும் அடுத்த அடியைப் பெண்கள் பாடினார்கள்.
சரம் சரமாப் பூச்சரமாம் - ஏ கோமாளி!

கோமாளி ஒரு அடி பாடவும், பெண்கள் அடுத்த அடி பாடவுமாக இந்தப் பாடல் மாறி மாறி நடந்தது.

கோமாளி: தங்கத்தாலே தாம்பாளமாம் - பெண்டுகளா
பெண்கள்: சரஞ்சரமாப் பூச்சரமாம் - ஏ கோமாளி!
கோமாளி: பூச்சரத்தைக் கைப்பிடிச்சு - பெண்டுகளா
பெண்கள்: புறப்பட்டாளே மாரியம்மா - ஏ கோமாளி!
கோமாளி: வெள்ளியாலே தாம்பாளமாம் - பெண்டுகளா
பெண்கள்: விதம் விதமாப் பூச்சரமாம் - ஏ கோமாளி

கோமாளி: பூச்சரத்தைக் கைப்பிடிச்சார் - பெண்டுகளா
பெண்கள்: புறப்பட்டாரே அய்யனாரு - ஏ கோமாளி
கோமாளி: அருவிக்கரை அரசமரம் - பெண்டுகளா
பெண்கள்: ஆனைகட்டும் பூவரசாம் - ஏ கோமாளி
கோமாளி: ஆனைமேலே அம்பாரியாம் - பெண்டுகளா
பெண்கள்: அம்பாரியில் கோமாளியாம் - ஏ கோமாளி

---

2.

**குணங்குடி மஸ்தான் சாகிபு பாடல்:**

வேதம்நீ வேதவேதாந்தம்நீ எனையாளும்
வித்தகன் தானும் நீயே
மெய்ஞ்ஞான வீடுநீ வீட்டின் விளக்குநீ
விரிகதிர்ச் சுடரும் நீயே
நாதன்நீ நவநாத சித்தன்நீ முத்தன்நீ
நாதாந்த மூர்த்தி நீயே
நற்குணம் குடிகொண்ட பாதுஷாவான குரு
நாதன் முகயத்தீனே! (முஹைதீனே)

---

3.

**“மரப்பாச்சிக் கல்யாணம்”:**

சிறுவர் சிறுமியர் விளையாடும்பொழுது ...
“மரப்பாச்சிக் கல்யாணம்” விழா நடத்திப் பாடும் நையாண்டி பாடல்

தாராபுரம் சம்பந்தம் -அத்தானை
தாசில்தார் என்று சொன்னாங்க
தாராபுரம் போய்ப் பார்த்தேன்-அத்தான்
தமுக்கடிக்கக் கண்டேனே!

இலந்தக்குளம் சம்பந்தம்-அத்தானை
இஞ்சினீயர்னு சொன்னாங்க

இலந்தக்குளம் போய்ப் பார்த்தேன்-அத்தான்
இட்டிலி விற்கக் கண்டேனே!

திருச்சினாப்பள்ளி சம்பந்தம் - அத்தானை
திவான் என்று சொன்னாங்க
திருச்சினாப்பள்ளி போய்ப் பார்த்தேன் -அத்தான்
தீவட்டி பிடிக்கக் கண்டேனே!

கழுகுமலைச் சம்பந்தம்-அத்தானை
கலெக்டர் என்று சொன்னாங்க
கழுகுமலை போய்ப் பார்த்தேன்-அத்தான்
கழுதை மேய்க்கக் கண்டேனே!

வண்ணார்பேட்டை சம்பந்தம்-அத்தானை
வக்கீல் என்றும் சொன்னாங்க
வண்ணார்பேட்டை போய்ப் பார்த்தேன்-அத்தான்
வறட்டி தட்டக் கண்டேனே!

---

4.

**மருத்துவம் - சித்தர் பாடல்:**

"ஆனைக் கன்றின் ஒருபிடியும்
அரச விரோதி இளம்பிஞ்சும்
கானக் குதிரை இளந்தோலும்
கையில் கனிந்த கனிப்பருப்பும்
தாயைக் கொன்ற பூச்சாற்றில்
தானே கலக்கிக் குடுத்திடினே
மானைப் பொருதும் விழியாளே!
வடுகும் தமிழும் குணமாமே! "

[வேறு]
"ஆனைக் கன்றின் ஒருபிடியும்
அரையன் விரோதி இளம்பிஞ்சும்,
கானக் குதிரை புறத்தோலும்,
காலிற் பொடியை மாற்றினதும்,

தாயைக் கொன்றான் சாறிட்டுத்
தயவா யரைத்துக் கொள்வாரேல்,
மானைப் பொருதும் விழியாளே!
வடுகும் தமிழும் குணமாமே! "

என்பது பாடல்.

தேரையர் பாடலின் கருத்து: ஆனைக் கன்று ஒரு பிடியையும், அரையன் விரோதியின் இளம் பிஞ்சையும், கானக்குதிரையின் மேல் தோலையும், காலில் பொடியை மாற்றினதையும் தாயைக் கொன்றவனது சாற்றில் இட்டுத் தக்க முறையில் அரைத்தெடுத்து உட்கொள்வாரானால், மானை வென்ற கண்ணையுடைய பெண்ணே! வடுகும் தமிழும் குணமாகி விடும் - என்பது கருத்து.

'வடுகும் தமிழும்' என்னும் நோய் குணமாவதற்கு என்ன செய்ய வேண்டும் என்று பாடல் தெரிவிக்கிறது...
அத்தி என்னும் சொல்லுக்கு அத்திமரம், ஆனை என்னும் பொருள்கள் உண்டு. எனவே அத்திமரத்தைக் குறிப்பது ஆனை என்னும் சொல். கன்று என்பது பிஞ்சைக் குறிக்கும். ஆக, ஆனைக் கன்று என்பதற்கு அத்திப் பிஞ்சு' என்று பொருள் கொள்ள வேண்டும். ஆனைக் கன்றின் ஒரு பிடி என்பது ஒரு கைப்பிடி அத்திப் பிஞ்சாம்.

'அரையன் விரோதி இளம் பிஞ்சு' என்பது இளங் கோவைப் பிஞ்சைக் குறிக்கும். கோ என்றாலும் அரையன் என்றாலும் அரசன். வை என்றால் வையும் (திட்டும்) எதிரி. அரையன் விரோதி என்பது கோவைக் கொடி. கோவைப் பிஞ்சு ஓரளவு எடுத்துக்கொள்ள வேண்டும்.

கானக் குதிரை என்பது மாமரம். கானம்= காடு, குதிரை என்பதற்கு மாமரம் என்ற பொருளும், மா என்பதற்குக் குதிரை என்ற பொருளும் உண்டு. கானக் குதிரை என்றால் காட்டு மாமரம். புறத் தோல் என்பது மேற்பட்டை.

'காலிற் பொடியை மாற்றினது' என்பது, செருப்படை என்னும் ஒரு படர்பூடு. காலில் பொடி சுடாமல் மாற்றுவது செருப்பு ஆகும். இங்கே, செருப்பு என்பது செருப்படை என்னும் படர் பூடு வகையைக் குறிக்கிறது.
தாயைக் கொன்றான் என்பது வாழை மரம். குலை போட்டதும் தாய்மரம் கொல்லப்படுகிறது (வெட்டப் படுகிறது).

மேற் கூறியவற்றையெல்லாம் வாழைமரப் பட்டையைப் பிழிந்து கிடைத்த சாற்றிலே போட்டு நன்றாய் அரைத்து உட்கொண்டால் வடுகும் தமிழும் என்னும் நோய் குணமாகும்.

வடுகும் தமிழும்' என்ன நோய்?
வடுகும் தமிழும் குணமாம்' என்பதற்கு, 'வயிறு கடுத்துப் போகும் சகல ரத்த சீதபேதிகளும் குணமாகும்' என்று பொருள்.
'வடுகும் தமிழும்" என்பது, இரத்த - சீதபேதியை எவ்வாறு குறிக்கும்?
ரத்த சீதபேதி என்பதில் இரத்தம் வப்பானது-சீதம் வெண்மையானது. ஆக, வடுகும் தமிழும் குணமாம் என்பதற்கு, குருதியும் சிதமுமாகப் போகும் வயிற்றுக் கடுப்பு நோய் நலமாகும் என்பது பொருளாம்.

நூல்:மர இனப் பெயர்வைப்புக் கலை
ஆசிரியர்: பேரா. சுந்தரசண்முகனார்
https://ta.wikisource.org/s/7ulo
பக்கம்: 10

சுருக்கமாக: இந்த மருத்துவப் பாடலில் மறைபொருளாகச் சொல்லப்பட்ட மூலிகை விளக்கம் வருமாறு:
https://groups.google.com/d/msg/minTamil/kp6h8f3jXSU/Bph4_xeJEblJ
ஆனைக் கன்று = அத்திப் பிஞ்சு
அரசன் விரோதி = கோவைப் பிஞ்சு
கானக் குதிரைப் புறத்தோல் = மாமரத்துப் பட்டை
காலில் பொடியை மாற்றினதும் = சிரு செருப்படைப் பூண்டு
தாயைக் கொன்றான் சாறு = வாழைப்பூச்சாறு
வடுகும் தமிழும் = வயிற்றுக்கடுப்பு நோய்.
என்பதாகும்.
அத்திப் பிஞ்சு, கோவைப் பிஞ்சு, மாமரத்துப் பட்டை, சிறு செருப்படைப் பூண்டு இலைகளைச் சமமாக எடுத்து வாழைத் தண்டு அல்லது பூவின் சாறு விட்டு அரைத்துச் சாப்பிட்டால் வயிற்றுக் கடுப்பு குணமாகும்.

(வடுகு என்பது தெலுங்கில் வயிற்றுக்கு கடுபு என்று பெயர். தமிழில் உள்ள வயிறு என்ற சொல்லையும் இணைத்து "வயிற்றுக் கடுப்பு"), என்று நோயைக் கூட மறைபொருளாகக் கூறப்பட்டுள்ளது.

---

**5.**

**நாடோடிப்பாடல்:**

முள்ளு முனையிலே மூணுகுளம் வெட்டினேன்
ரெண்டு குளம் பாழு-ஒண்ணு
தண்ணியே இல்லை - ஒண்ணு
தண்ணியே இல்லை!

தண்ணிஇல்லாக் குளத்துக்கு வரிப்பணம் மூணுபணம்
ரெண்டு பணம் செம்பு-ஒண்ணு
செல்லவே இல்லை - ஒண்ணு
செல்லவே இல்லை!

செல்லாத பணத்துக்கு மண்குயவன் மூணுபேரு
ரெண்டுபேரு நொண்டி - ஒத்தன்
கையே இல்லை-ஒத்தன்
கையே இல்லை!

கையில்லாக் குயவன் செய்தது மூணுபானை
ரெண்டு பானை பச்சை-ஒண்ணு
வேகவே இல்லை-ஒண்ணு
வேகவே இல்லை!

வேகாத பானைக்கு இட்டது மூணரிசி
ரெண்டரிசி நெட்டை-ஒண்ணு
வேகவே இல்லை-ஒண்ணு
வேகவே இல்லை!

வேகாத அரிசிக்கு விருந்தாளு மூணுபேரு
ரெண்டு பேரு பட்டினி-ஒத்தன்
உண்ணவே இல்லை-ஒத்தன்
உண்ணவே இல்லை!

பாடலின் கருத்துகள் ஒவ்வொன்றிலும் மூன்று மூன்று பொருள்கள் குறிப்பிடப்பட்டு மூன்றும் எந்தவகையிலும் பயனில்லை என்பதை நேரடியாகச் சொல்லாமல், இரண்டு ஒரு விதமாகவும் மற்றொன்று வேறு விதமாகவும் சொல்லப்படுகிறது. இருப்பினும், முடிவு: எதுவுமே உருப்படி இல்லை என்பதுதான்

நிலை. குளம் பாழு என்பதும் குளத்தில் தண்ணியே இல்லையென்பதும் இரே நிலைதான். இப்பாடல் பலவேறு வகைகளில் உள்ளது. பாடுபவரின் கற்பனைக்கு ஏற்ப வரிகளும் கருத்துகளும் மாறுபடும். கீழே மேலும் இரு வகைகள்

---

[வேறு - https://ta.wikisource.org/s/3mnn]

முள்ளு முனையிலே மூணுகுளம் வெட்டினேன்
ரெண்டுகுளம் பாழு - ஒண்ணு தண்ணியே இல்லை.
தண்ணியில்லாக் குளத்துக்கு மண்ணுவெட்ட மூணுபேரு
ரெண்டுபேரு மொண்டி - ஒத்தன் கையே இல்லை.
கையில்லாத குசவன் செய்தது மூணுபானை
ரெண்டுபான பச்சை - ஒண்ணு வேகவே இல்லை.
வேகாத பானைக்குப் போட்டரிசி மூணரிசி
ரெண்டரிசி நறுக்கு - ஒண்ணு வேகவே இல்லை.
வேகாத சோற்றுக்கு விருந்துண்ண மூணுபேரு
ரெண்டுபேரு பட்னி - ஒத்தன் உண்ணவே இல்லை.
உண்ணாத கொத்தன் கட்டினது மூணுகோயில்
ரெண்டு கோயில் பாழு - ஒண்ணு சாமியே இல்லை.
சாமியில்லாத கோயிலுக்கு ஆடவந்தார் மூணுபேரு
ரெண்டுபேரு மொட்டை - ஒத்தி மயிரே இல்லை.

---

[வேறு - https://ta.wikisource.org/s/3nn9]

முள்ளு முனையிலே மூணுகுளம் வெட்டிவச்சேன்
ரெண்டுகுளம் பாழு - ஒண்னு தண்ணியே இல்லை.
தண்ணியில்லாக் குளத்துக்கு வந்த குசவர் மூணுபேரு
ரெண்டுபேரு மொண்டி - ஒத்தன் கையே இல்லை.
கையில்லாத குசவன் வனைந்தசட்டி மூணுசட்டி
ரெண்டு சட்டி பச்சை - ஒண்னு வேகவே இல்லை.
வேகாத சட்டியிலே போட்ட அரிசி மூணரிசி
ரெண்டரிசி பச்சை - ஒண்ணு வேகவே இல்லை.
வேகாத சோற்றுக்கு மோர் கொடுத்தது மூணெருமை
ரெண்டெருமை மலடு - ஒண்ணு ஈனவே இல்லை.
ஈனாத எருமைக்கு விட்டகாடு மூணுகாடு
ரெண்டு காடு சொட்டை - ஒண்ணில், புல்லே இல்லை.

புல்லில்லாக் காட்டுக்குக் கந்தாயம் மூணுபணம்
ரெண்டுபணம் கள்ளவெள்ளி - ஒண்னு செல்லவே இல்லை.
செல்லாத பணத்துக்கு நோட்டக்காரர் மூணுபேரு
ரெண்டுபேரு குருடு - ஒத்தனுக்குக் கண்ணே இல்லை.
கண்ணில்லாக் கணக்குப் பிள்ளைக்கு விட்ட ஊரு மூணு ஊரு
ரெண்டு ஊரு பாழு - ஒண்ணில் குடியே இல்லை.
குடியில்லா ஊரிலே குமரிப் பெண்கள் மூணுபேரு
ரெண்டுபேர் மொட்டை - ஒத்திக்கு மயிரே இல்லை.
மயிரில்லாப் பெண்ணுக்கு வந்த மாப்பிள்ளை மூணுபேர்
ரெண்டு பேர் பொக்கை - ஒத்தனுக்குப் பல்லே இல்லை.

நூல்: நாடோடி இலக்கியம்
ஆசிரியர்: கி. வா. ஜகந்நாதன்
பக்கம் - 75

---

6.

**நாட்டுப் பாடல்**

"எருக்கிலைக்குப் பாத்தி கட்டி
எத்தனை பூப் பூத்தாலும்
மருக்கொழுந்தின் வாசமுண்டோ
மலைப் பழநி வேலவனே!"

பழநி வட்டாரத்து நாட்டுப் பாடல்

[வேறு]

"எருக்கிலைக்குத் தண்ணீர் கட்டி
எத்தனைப் பூப் பூத்தாலும்
மருக் கொழுந்து வாசமுண்டோ
மலைப் பழநி வேலவனே"

https://ta.wikisource.org/s/3cui

நூல்: காட்டு வழிதனிலே, ஆசிரியர்: கவிஞர் பெரியசாமித்தூரன், பக்கம்: 36

---

**7.**

**"சுண்டெலிக் கண்ணே!"**

சிறுவர்களும் சிறுமிகளும் பாடி ஆடி விளையாடுகையில் பாடும் பாடல்.

ஆக்க வேணாம் அரைக்க வேணாம் சுண்டெலிக் கண்ணே - நீ
அருகிருந்தால் போதுமடி சுண்டெலிக் கண்ணே!
தூக்க வேணாம் வைக்க வேணாம் சுண்டெலிக் கண்ணே-நீ
சுத்தி நின்னாப் போதுமடி சுண்டெலிக் கண்ணே!

ஆறும் வேணாம் குளமும் வேணாம் சுண்டெலிக் கண்ணே-நீ
அணைஞ்சிருந்தால் போதுமடி சுண்டெலிக் கண்ணே!
சோறு வேணாம் தண்ணி வேணாம் சுண்டெலிக் கண்ணே-உன்
சுகமிருந்தால் போதுமடி சுண்டெலிக் கண்ணே!

அடுப்பு வேணாம் துடுப்பு வேணாம் சுண்டெலிக் கண்ணே-உன்
அன்பிருந்தாப் போதுமடி சுண்டெலிக் கண்ணே!
நடக்க வேணாம் அலுக்க வேணாம் சுண்டெலிக் கண்ணே-நீ
நாலு வார்த்தை சொன்னாப் போதும் சுண்டெலிக் கண்ணே!

---

**8.**

**குறவஞ்சி பாடல்:**

"அருள் இலஞ்சி வேலர் தமக்கு
ஒரு பெண்ணைக் கொடுத்தோம்
ஆதீனத்து மலைகள் எல்லாம்
சீதனமாய்க் கொடுத்தோம்!"

என்று குற்றாலத்துக் குறவஞ்சி, இலஞ்சி முருகனோடு சம்பந்த முறை கொண்டாடிப் பாடும் பாடல்.

- திருக்குற்றாலக் குறவஞ்சி

---

9.

**தினைப்புனக் காதல்:**

வண்டாடும் சோலையிலே-நீ
வந்து புனம் காக்கையிலே
மாடப் புறாவென்று என் கண்ணம்மா
மதிமயங்கிப் போனேண்டி!

மலர் பூக்கும் சோலையிலே-நீ
வந்து புனம் காக்கையிலே
மயிலோ குயிலோண்ணு- என் கண்ணம்மா
மதிமயங்கிப் போனேண்டி!

வாழைப் பழமே-என்
வைகாசி மாங்கனியே!
நீலக் கருங்குயிலே-என் கண்ணம்மா
நிலைமயங்கிப் போனேண்டி!

நூல்: தமிழ்நாட்டுப் பாமரர் பாடல்கள், ஆசிரியர் : நா. வானமாமலை
பக்கம்: 92
https://ta.wikisource.org/s/7mii
(சேகரித்தவர். ஆர். கே. நல்ல கண்ணு)

---

10.

**பழநி நடைப்பயணம் செய்யும் பண்டாரங்கள் பாடும் பாடல்:**

மலைக்குள் மலை நடுவே
மலையாள தேசமப்பா
மலையாள தேசம் விட்டு
மயிலேறி வருவாயிப்போ
அரகரா அரகரா அரோகரா!

ஏறாத மலை ஏறி
எருது ரெண்டும் தத்தளிக்க

பாராமல் கை கொடுப்பாய்
பழநி மலை வேலவனே
அரகரா அரகரா அரோகரா!

[வேறு]

பாசி படர்ந்த மலை முருகையா
பங்குனித்தேர் ஓடும் மலை முருகையா
ஊசி படர்ந்த மலை முருகையா
உருத்திராட்சம் காய்க்கும் மலை முருகையா

மலைக்குள் மலை நடுவே முருகையா
மலையாள தேசமப்பா முருகையா
மலையாள தேசம் விட்டு முருகையா
மயிலேறி வருவாயிப்போ முருகையா

அந்த மலைக்குயர்ந்த மலை முருகையா
ஆகும் பழநி மலை முருகையா
எந்த மலையைக் கண்டு முருகையா
ஏறுவேன் சன்னிதி முன் முருகையா

ஏறாமல் மலை தனிலே முருகையா
ஏறி நின்று தத்தளிக்க முருகையா
பாராமல் கைகொடுப்பாய் முருகையா
பழநி மலை வேலவனே முருகையா

வேலெடுத்து கச்சை கட்டி முருகையா
விதவிதமாய் மயிலேறி முருகையா
கோலா கலத்துடனே முருகையா
குழந்தை வடிவேலவனே முருகையா

உச்சியில் சடையிருக்க முருகையா
உள்ளங்கை வேலிருக்க முருகையா
நெற்றியில் நீறிருக்க முருகையா
நித்தமய்யா சங்கநாதம் முருகையா

தேரப்பா தைப்பூசம் முருகையா
தேசத்தார் கொண்டாட முருகையா

இடும்பன் ஒரு புறமாம் முருகையா
இருபுறமும் காவடியாம் முருகையா

ஆற்காட்டுத் தேசத்திலே முருகையா
ஆறு லட்சம் காவடிகள் முருகையா
தென்னாட்டுச் சீமையிலே முருகையா
தேசமெங்கும் காவடிகள் முருகையா

கடம்ப வனங்கண்டு முருகையா
காட்சிதர வருவாயிப்போ முருகையா
பாவி நான் என்றுசொல்லி முருகையா
பாராமலிருக்கிறாயோ முருகையா

பழநி நான் வருகிறேனே முருகையா
பார்த்து வரம் தந்திடுவாய் முருகையா

source: http://pathayathirai.org/murugan_songs.html

---

**11.**

**பார வண்டி ஓட்டுநர் பாடும் பாடல்:**

பருப்பு பிடிக்கும் வண்டி - இது
பட்டணந்தான் போகும் வண்டி
பருப்பு விலை ஏறட்டுண்டி - தங்கரத்தினமே
பதக்கம் பண்ணிப் போடுறேண்டி - பொன்னுரத்தினமே

அரிசி பிடிக்கும் வண்டி - இது
அவினாசி போகும் வண்டி
அரிசிவிலை ஏறட்டுண்டி - தங்கரத்தினமே
அட்டி பண்ணிப் போடுறேண்டி - பொன்னுரத்தினமே

கொள்ளு பிடிக்கும் வண்டி - இது
கோட்டை தாண்டிப் போகும் வண்டி
கொள்ளுவிலை ஏறட்டுண்டி - தங்கரத்தினமே
கொலுசு பண்ணிப் போடுறேண்டி - பொன்னுரத்தினமே

வாழப் பிறந்த வண்டி - இது
வாழவகைசெய்யும் வண்டி
மாளாப் பிறவியல்லலோ - தங்கரத்தினமே
மனுசப் பிறவியடி! - பொன்னுரத்தினமே

[வேறு]

மஞ்ச புடிச்ச வண்டி, மாயவரம் போற வண்டி
மஞ்ச வெல ஆகட்டுண்டி - நான்
மாலை செஞ்சிப் போடுறேண்டி

பருப்பு புடிச்ச வண்டி, பட்டணந்தான் போற வண்டி
பருப்பு வெல ஆகட்டுண்டி - நான்
பதக்கம் செஞ்சி போடுறேண்டி

கடலை புடிச்ச வண்டி, கடலூருக்குப் போற வண்டி
கடலை வெல ஆகட்டுண்டி - நான்
கம்மல் செஞ்சிப் போடுறேண்டி

அரிசி புடிச்ச வண்டி, அசலூருப் போற வண்டி
அரிசி வெல ஆகட்டுண்டி - நான்
அட்டி செஞ்சி போடுறேண்டி

வாழப் புடிச்ச வண்டி, வடக்குப் பக்கம் போற வண்டி
வாழ வெல ஆகட்டுண்டி - நான்
வளையல் செஞ்சி போடுறேண்டி

மங்கா புடிச்ச வண்டி, மதுரப்பக்கம் போற வண்டி
மாங்கா வெல ஆகட்டுண்டி - நான்
மாட்டல் செஞ்சி போடுறேண்டி

சரக்குப் புடிச்ச வண்டி, சந்தைக்குத்தான் போற வண்டி
சரக்கு வெல ஆகட்டுண்டி - நான்
சங்கிலி பண்ணி போடுறேண்டி

தேங்காப் புடிச்ச வண்டி, தெக்குப் பக்கம் போற வண்டி
தேங்கா வெல ஆகட்டுண்டி - நான்
தோடு செஞ்சிப் போடுறேண்டி

(புஷ்பவனம் குப்புசாமி-1990)

http://shodhganga.inflibnet.ac.in/bitstream/10603/193858/4/chapter%202.pdf#page=29

---

**12.**

**பூபாள ராகத்தில் ஒரு பாடல் ...**

"பொழுது விடிந்தது பொற்கோழி கூவிற்று
பொய்கையில் தாமரை பூத்து மலர்ந்தது!"

[வேறு]

சண்முகர் வருகை:

வாரும் வாரும் தெய் வடிவேல் முருகரே
வள்ளி மணாளரே வாரும்
புள்ளி மயிலோரே வாரும்.

சங்கம் ஒலித்தது தாழ்கடல் விம்மிற்று
சண்முக நாதரே வாரும்
உண்மை வினோதரே வாரும்.

பொழுது விடிந்தது பொற்கோழி கூவிற்று
பொன்னான வேலரே வாரும்
மின்னார்முந் நூலரே வாரும்.

காகம் கரைந்தது காலையும் ஆயிற்று
கண்ணுதல சேயரே வாரும்.
ஒண்ணுதல் நேயரே வாரும்.

செங்கதிர் தோன்றிற்றுத் தேவர்கள் சூழ்ந்தனர்
செங்கல்வ ராயரே வாரும்
எங்குரு நாதரே வாரும்.

அருணன் உதித்தனன் அன்பர்கள் சூழ்ந்தனர்
ஆறுமுகத் தோரே வாரும்
மாறில் அகத்தோரே வாரும்.

சூரியன் தோன்றினன் தொடர்கள் சூழ்ந்தனர்
சூரசங் காரரே வாரும்
வீரசிங் காரரே வாரும்.

வீணை முரன்றது வேதியர் சூழ்ந்தனர்
வேலாயுதத் தோரே வாரும்
காலாயுதத் தோரே வாரும்.

சேவல் ஒலித்தது சின்னம் பிடித்தனர்
தேவர்கள் தேவரே வாரும்
மூவர் முதல்வரே வாரும்.

பத்தர்கள் சூழ்ந்தனர் பாடல் பயின்றனர்
பன்னிரு தோளரே வாரும்
பொன்மலர்த் தாளரே வாரும்.

மாலை கொணர்ந்தனர் மஞ்சனம் போந்தது
மாமயில் வீரரே வாரும்
தீமையில் தீரரே வாரும்.

தொண்டர்கள் நாடினர் தோத்திரம் பாடினர்
சுப்பிர மணியரே வாரும்
வைப்பின் அணியரே வாரும்.

முருகனை விடியலில் வரவேற்கும் மகளிர் பாடும் சிந்துப்பாடல்கள் (சிந்து விளக்கம்: மூன்று அடிகளில், முதலடி அளவடியாலும், பின்னிரண்டடி சிந்தடியாலும் அமைந்து சிந்தடியின் ஈற்றுச் சீர் ஒன்றிவரத் தொடுக்கப் பட்டுள்ளது.)

திருவருட்பா, திருவருட்பிரகாச வள்ளலார் - சிதம்பரம் இராமலிங்க அடிகள்;
51. சண்முகர் வருகை;
பாடல்கள்: 538-549
http://www.tamilvu.org/node/154572?linkid=120565

---

13.

**மலைவாழ் பழங்குடி பளிஞர் இன மக்கள் பாடல்களாக சில ...**

அகவல் மகள், ஆவேசத்துடன் நாகர் பீடத்துக்கு வணக்கம் செய்து விட்டு அகவும் பாடல்;

பழங்குடி தலைவனுக்குக் கட்டளையிடும் பாடல்...

சொக்கையா சொக்கையா
சோறு வையடா
சொக்கையன் பெண்டாட்டிக்கு
நீறு வையடா!

எதிர்காலத்தில் நிகழப்போவதாக அகவல் மகள் குறிப்பு கூறும் பாடல் ....

ஊரான ஊர்விட்டு
ஒருத்தன் இங்கே வருவானாம்!
பேரான சீமைவிட்டு
ஒருத்தன் இங்கே வருவானாம்!
கட்டான ஆண்பிள்ளையும்
கண்மணியாம் பெண்பிள்ளையும்
திட்டான வார்த்தையிலே
திசைமாறி நின்றிடுவார்!

ஆனாலும் இந்தமலை
அருமையான மலையல்லோ
போனாலும் வந்தாலும்
புண்ணியந் தான் சேருமல்லோ!
ஆகையினாலே - சொக்கி குடிதனிலே
சோதனைகள் நடவாமல்
பக்கம் இருந்திடுவான்
பாங்கான முருகனுமே!

பழங்குடி தலைவனின் மகளுக்கு திருமணம் நடக்கப்போவதாக அகவல் மகள் அறிவித்து விடை பெறுதல்....

பளிஞர் குலத்தினிலே
பருவத்தில் பூத்திட்ட
பளிங்குக் கொடியான
பத்தினிக் கன்னிக்கு
பாக்கியங்கள் வந்திடுமாம்

பர்த்தாவும் வந்திடுவான்
ஆக்கினைகள் செய்திடுவாள்
அரசாட்சி நடத்திடுவாள்!

மானுக்காய் இரங்கியிந்த
மான் போலும் கன்னியிவள்
போன உயிர்காத்த
புண்ணியத்தால் நன்மையுண்டு!
இத்தனை தான் இந்நேரம்;
இனியுள்ள சேதியெல்லாம்
பித்துடனே வருமந்தப்
பேரான மனிதனிடம்
சொல்ல வருவேன் நான்,
சொக்கையா கேட்டாயோ!
மெல்ல நடந்திடுவேன்
மேலேறிச் செல்லுகிறேன்!
[***குறிப்பு: பழங்குடியினர் திருமணம் குறித்த பாடல் தனியே கொடுக்கப்படும் ...***]

திருமணம் நன்றே முடிந்ததாகவும் தான் கூறிய குறியின்படியே அனைத்தும் நிகழ்ந்ததாகவும் அகவல்மகள் அறிவிக்கும் பாடல்...
ஊரான ஊர்விட்டு
ஒருத்தன் இங்கே வந்தானாம்
பேரான சீமைவிட்டு
ஒருத்தன் இங்கே வந்தானாம்
கட்டான ஆண்பிள்ளையும்
கண்மணியாம் பெண்பிள்ளையும்
திட்டான வார்த்தையிலே
திசைமாறி நின்றிட்டார்
ஆனாலும் இந்தமலை
அருமையான மலையல்லோ
போனாலும் வந்தாலும்
புண்ணியந்தான் சேருமல்லோ!
ஆகையினாலே சொக்கி குடிதனிலே
சோதனைகள் நடவாமல்
பக்கம் இருந்திட்டான்
பாங்கான முருகனுமே!

---

14.

**பளிஞர் - பழங்குடியினர் திருமணவிழா பாடல்:**

தும்பிக்கையார் பிள்ளையாரைத்
தொழுதுபாதம் தெண்டனிட்டோம்
ஆனைமுகத்து நாயகரை
அடிபணிந்து தெண்டனிட்டோம்!
தாமரைப் பூ பூத்துநின்ற
தையலவள் வாசலிலே
பூமகளும் நிலமகளும்
பொருந்தும் மண வாசலிலே
ஆனைமுகனார் வந்துநின்று
அசைந்தாடும் வாசலிலே
ஆறுமுக வேலவர்தான்
அவதரித்த வாசலிலே
வேலும் மயிலும்
விளையாடும் வாசலிலே
அன்னம் மிதந்து
அசைந்தேகும் வாசலிலே
வண்மை வளம் உடையாள்
வந்து நிற்கும் வாசலிலே
செல்வம் பெரிதுடையாள்
சேவைதரும் வாசலிலே
கலியாணம் கலியாணம்
காரிகைக்கே கலியாணம்
அல்லி அரசாணிக்கும்
அர்ச்சுனர்க்கும் கலியாணம்
ஆணழகன் அர்ச்சுனர்க்கும்
பெண்ணழகி அல்லிக்கும்
ஆசார வாசலிலே அழகுக் கலியாணம்!

கலியாணம் என்று சொல்லிக் காடெல்லாம் முழுதறிய
உற்றார் உறமுறையார் ஊரெல்லாம் பாக்கு வைத்து
சம்பந்தி மார்களுக்குச் சதிருடனே பாக்குவைத்து
வாருங்கள் என்று சொல்லி வணங்கி வரவேற்று
முன்னூறு காதம் மூடியே பந்தலிட்டார்!
ஆயிரம் காதம் அகலமாய்ப் பந்தலிட்டார்!

எண்ணூறு காதம்பேர் இட முள்ள பந்தலிலே
வாழை மரம் கட்டி வண்ணக் கொடிகட்டி
மாணிக்கப் பந்தலிலே வரிசையுடன் தான் தூக்கி
தென்னங் குருத்து வெட்டிச் சோலைக் கிளிகள் கட்டி
தாரும் கமுகுகளும் தனித்தனியே தொங்கவிட்டார்!
சொக்கட்டான் பந்தலிட்டுச் சோளக் கதிர்கட்டி
பாளங்கள் தொங்கவிட்டுப் பந்தல் அலங்கரித்தார்!

கலியாணம் கலியாணம்
காரிகைக்குக் கலியாணம்
அல்லிக்குக் கலியாணம்
அர்ச்சுனர்க்குக் கலியாணம்
அல்லிக்கும் அர்ச்சுனர்க்கும்
அழகான கலியாணம்!

திருமணம் முடிந்த பின்னர் மணமகனின் நண்பர்கள் அவனை நோக்கி பாடும் பாடல்...

புளிய மரத்துக் கிளி
பூவெடுத்துத் தின்னும் கிளி
உன்னை அடுத்த கிளி-கந்தப்பா
உனக்கேத்த சொக்கிக் கிளி!

அரச மரத்துக் கிளி
அத்திப் பழம் கொத்தும் கிளி
பஞ்ச வர்ணக் கிளி-கந்தப்பா
பாட்டிலே பேசுங் கிளி!

ஆல மரத்துக் கிளி
ஆறு தாண்டி வந்த கிளி
சோலை மரத்துக் கிளி -கந்தப்பா
சொந்தமாகி வந்த கிளி!

மணமகனின் தோழர்கள் மணமகனைக் கேலி செய்யும் பாடல் ....

கொய்யாமரத்து மேலே
கொம்புப் பழம் உறங்கும்
கொம்புப் பழம் விழுந்தால்
குயிலா நினைவு வரும்.

கண்ணாளஞ் சோலையிலே
கனிஞ்ச பழம் உறங்கும்
கனிஞ்ச பழம் விழுந்தா
கண்ணா நினைவு வரும்.

மாமரத்து உச்சியிலே
மாங்காப் பழம் உறங்கும்
மாங்காப் பழம் விழுந்தா
மயிலா நினைவு வரும்!

மணமகளின் தோழியர் மணமகளைக் கேலி செய்யும் பாடல்...
கருமலையிலே கல்லுருட்டி
கன்னிமார் எல்லாம் கூடிக்கிட்டு
மூணு முழத்தில் அடுப்புக்கட்டி
முத்துக் குடங்கொண்டு பால் காய்ச்ச
காய்ச்சின பாலும் கசக்குதென்பா
கட்டித் தயிரும் புளிக்குதென்பா
வேப்பம் பட்டை இனிக்குதென்பா
வெள்ளரிப் பிஞ்சும் கசக்குதென்பா.

---

15.

**பழங்குடிப் பெண் பாடும் பாடல்:**

“கொள்ளுப் போட்டா எள்ளு விளையும் - எங்க காட்டிலே
கோழி வந்து குட்டிபோடும் - எங்க வீட்டிலே
கடலை போட்டா நெல்லு விளையும் - எங்க காட்டிலே
கடுவம் பூனை குட்டி போடும் - எங்க வீட்டிலே
அவரை போட்டாத் துவரை விளையும் - எங்க காட்டிலே
ஆனை போடும் பூனைக்குட்டி - எங்க வீட்டிலே”

---

16.

**மலைவாழ் பழங்குடியினர் பாடல்:**

முருகனாரு சாமி - அது
　　　　முதலான சாமி - எங்க
முன்னோரும் பின்னோரும்
　　　　முறை தொழுத சாமி!

கந்தனாரு சாமி - அது
　　　　கடவுளராம் சாமி - இன்னும்
சொந்தமான பேருக்கெல்லாம்
　　　　சுகம் கொடுக்கும் சாமி!

வேலவராம் சாமி - அது
　　　　வேண்டினார்க்குச் சாமி - எந்தக்
காலமுமே நம்மையெல்லாம்
　　　　காத்துவரும் சாமி!

வெற்றி வேலுச் சாமி - அது
　　　　வீரவேலுச் சாமி - நம்மைச்
சுற்றியுள்ள பகைகள் எல்லாம்
　　　　தொலைத்துநின்ற சாமி!

வள்ளியோட சாமி - அது
　　　　வரிசை தரும் சாமி - தெய்வ
ஆனையோட சாமி நம்மை
　　　　ஆதரிக்கும் சாமி!

குமரனாரு சாமி - அது
　　　　குலதெய்வச் சாமி
கும்பிட்டபேர் எல்லாரையும்
　　　　கும்பி காக்கும் சாமி!

புள்ளிமயில் சாமி - அது
　　　　புஞ்சிரிப்புச் சாமி
வள்ளிதெய்வ யானையோடே
　　　　வரம் கொடுக்கும் சாமி!

---

17.

**பட்டினத்தார் பாடல்:**

வெட்டாத சக்கரம் பேசாத மந்திரம் வேறொருவர்க்கு
எட்டாத புட்பம் இறையாத தீர்த்தம் இனி முடிந்து
கட்டாத லிங்கம் கருதாத நெஞ்சம் கருத்தினுள்ளே
முட்டாத பூசையன்றோ குருநாதன் மொழிந்ததுவே?

http://www.tamilvu.org/slet/l7100/l7100pd1.jsp?bookid=140&pno=130

---

18.

**கண்ணன் பாட்டு: கண்ணன் என் காதலன்**
**-- சுப்பிரமணிய பாரதியார்**

(செஞ்சுருட்டி-திஸ்ர ஏகதாளம்.)
சிருங்கார ரசம்.

தூண்டிற் புழுவினைப்போல் -- வெளியே
சுடர் விளக்கினைப்போல்,
நீண்ட பொழுதாக -- எனது
நெஞ்சந் துடித்த தடீ.
கூண்டுக் கிளியினைப்போல் -- தனிமை
கொண்டு மிகவும் நொந்தேன்;
வேண்டும் பொருளையெல்லாம் -- மனது
வெறுத்து விட்டதடீ. 1

பாயின் மிசைநானும் -- தனியே
படுத் திருக்கையிலே
தாயினைக் கண்டாலும், -- சகியே,
சலிப்பு வந்ததடி.
வாயினில் வந்ததெல்லாம், -- சகியே,
வளர்த்துப் பேசிடுவீர்;
நோயினைப் போலஞ் சினேன், -- சகியே
நுங்க ளுறவையெல்லாம். 2

உணவு செல்லவில்லை; -- சகியே
உறக்கங் கொள்ளவில்லை.
மணம் விரும்பவில்லை; -- சகியே,
மலர் பிடிக்கவில்லை;
குண முறுதியில்லை; -- எதிலும்
குழப்பம் வந்ததடீ;
கணமும் உள்ளத்திலே -- சுகமே
காணக் கிடைத்ததில்லை. 3

பாலுங் கசந்ததடீ; -- சகியே,
படுக்கை நொந்ததடீ.
கோலக் கிளிமொழியும் -- செவியில்
குத்த லெடுத்ததடீ.
நாலு வயித்தியரும் -- இனிமேல்
நம்புதற் கில்லையென்றார்;
பாலத்துச் சோசியனும் -- கிரகம்
படுத்து மென்றுவிட்டான். 4

கனவு கண்டதிலே -- ஒரு நாள்
கண்ணுக்குத் தோன்றாமல்,
இனம் விளங்கவில்லை, -- எவனோ
என்னகந் தொட்டு விட்டான்.
வினவக் கண்விழித்தேன்; -- சகியே,
மேனி மறைந்துவிட்டான்;
மனதில் மட்டிலுமே -- புதிதோர்
மகிழ்ச்சி கண்டதடீ. 5

உச்சி குளிர்ந்ததடீ; -- சகியே,
உடம்பு நேராச்சு.
மச்சிலும் வீடுமெல்லாம் -- முன்னைப்போல்
மனத்துக் கொத்ததடீ.
இச்சை பிறந்ததடீ -- எதிலும்
இன்பம் விளைந்ததடீ.
அச்ச மொழிந்ததடீ; -- சகியே,
அழகு வந்ததடீ. 6

எண்ணும்பொழுதி லெல்லாம், -- அவன்கை
இட்ட விடத்தினிலே
தண்ணென் றிருந்ததடீ; -- புதிதோர்
சாந்தி பிறந்ததடீ
எண்ணியெண்ணிப் பார்த்தேன்; -- அவன்தான்
யாரெனச் சிந்தைசெய்தேன்;
கண்ணன் திருவுருவம் -- அங்ஙனே
கண்ணின்முன் நின்றதடீ. 7

http://www.tamilvu.org/node/154572?link_id=185

---

19.

**தோத்திரப் பாடல்கள்: முத்துமாரி**
**-- சுப்பிரமணிய பாரதியார்**

உலகத்து நாயகியே, -- எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரி!
உன்பாதம் சரண்புகுந்தோம், -- எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரி!
கலகத் தரக்கர்பலர், -- எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்துமாரி!
கருத்தினுள்ளே புகுந்துவிட்டார், எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரி!
பலகற்றும் பலகேட்டும், -- எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரி!
பயனொன்று மில்லையடி, -- எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரி!
நிலையெங்கும் காணவில்லை, -- எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரி!
நின்பாதம் சரண்புகுந்தோம், -- எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரி!

துணிவெளுக்க மண்ணுண்டு, -- எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரி!

தோல்வெளுக்கச் சாம்பருண்டு, -- எங்கள் முத்து
  மாரியம்மா, எங்கள் முத்து மாரி!
மணிவெளுக்கச் சாணையுண்டு, -- எங்கள் முத்து
  மாரியம்மா, எங்கள் முத்து மாரி!
மனம்வெளுக்க வழியில்லை, -- எங்கள் முத்து
  மாரியம்மா, எங்கள் முத்து மாரி!
பிணிகளுக்கு மாற்றுண்டு, -- எங்கள் முத்து
  மாரியம்மா, எங்கள் முத்து மாரி!
பேதைமைக்கு மாற்றில்லை, -- எங்கள் முத்து
  மாரியம்மா, எங்கள் முத்து மாரி!
அணிகளுக்கொ ரெல்லையில்லாய், -- எங்கள் முத்து
  மாரியம்மா, எங்கள் முத்து மாரி!
அடைக்கலமிங் குனைப்புகுந்தோம், -- எங்கள் முத்து
  மாரியம்மா, எங்கள் முத்து மாரி!

http://www.tamilvu.org/node/154572?link_id=44

---

**20.**

**கோளறு திருப்பதிகம்**:

வேய் உறு தோளி பங்கன், விடம் உண்ட கண்டன், மிக
நல்ல வீணை தடவி,
மாசு அறு திங்கள் கங்கை முடிமேல் அணிந்து, என்
உளமே புகுந்த அதனால்
ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன் வியாழம், வெள்ளி,
சனி, பாம்பு இரண்டும், உடனே
ஆசு அறும்; நல்ல நல்ல; அவை நல்ல நல்ல, அடியார்
அவர்க்கு மிகவே.

திருஞானசம்பந்தர் அருளிய தேவாரம் (இரண்டாம் திருமுறை)

http://www.tamilvu.org/slet/l4120/l4120son.jsp?subid=1748

---

**21.**

**தோத்திரப் பாடல்கள்: வேலன் பாட்டு**

**-- சுப்பிரமணிய பாரதியார்**

[ராகம் -- புன்னாகவராளி] [தாளம் -- திஸ்ர ஏகம்]

வில்லினை யொத்த புருவம் வளைத்தனை,
  வேலவா! --அங்கொர்
வற்பு நொறுங்கிப் பொடிப் பொடி
  யானது, வேலவா!
சொல்லினைத் தேனிற் குழைத்துரைப் பாள்சிறு
  வள்ளியைக் --கண்டு
சொக்கி மரமென நின்றனை
  தென்மலைக் காட்டிலே.
கல்லினை யொத்த வலிய மனங்கொண்ட
  பாதகன் --சிங்கன்
கண்ணிரண் டாயிரங் காக்கைக்
  கிரை யிட்ட வேலவா!
பல்லினைக் காட்டிவெண் முத்தைப் பழித்திடும்
  வள்ளியை --ஒரு
பார்ப்பனக் கோலந் தரித்துக் கரந
  தொட்ட வேலவா! 1

வெள்ளலைக் கைகளைக் கொட்டி முழங்குங்
  கடலினை --உடல்
வெம்பி மறுகிக் கருகிப்
  புகைய வெருட்டினாய்.
கிள்ளை மொழிச்சிறு வள்ளியெனும் பெயர்ச்
  செல்வத்தை --என்றும்
கேடற்ற வாழ்வினை இன்ப
  விளக்கை மருவினாய்.
கொள்ளை கொண்டே அமராவதி வாழ்வு
  குலைத்தவன் --பானு
கோபன் தலைபத்துக் கோடி
  துணுக்குறக் கோபித்தாய்.
துள்ளிக் குலாவித் திரியுஞ் சிறுவன
  மானைப்போல்-தினைத்

தோட்டத்தி லேயொரு பெண்ணை
மணஙகொண்ட வேலவா! 2

ஆறு சுடர்முகங் கண்டு விழிக்கின்ப
மாகுதே; --கையில்
அஞ்ச லெனுங்குறி கண்டு
மகிழ்ச்சியுண் டாகுதே.
நீறு படக்கொடும் பாவம் பிணி பசி
யாவையும்-இங்கு
நீக்கி அடியரை நித்தமுங்
காத்திடும் வேலவா!
கூறு படப்பல கோடி யவுணரின்
கூட்டத்தைக் --கண்டு
கொக்கரித் தண்டங் குலுங்க
நகைத்திடுஞ் சேவலாய்!
மாறு படப்பல வேறு வடிவொடு
தோன்றுவாள் --எங்கள்
வைரவி பெற்ற பெரு ங்கன
லேவடி வேலவா! 3

http://www.tamilvu.org/node/154572?link_id=17

---

**22.**

**திருமூலர் பாடல்**:

மந்திரமாவதும் மாமருந் தாவதுந்
தந்திர மாவதுந் தானங்க ளாவதுஞ்
சுந்தர மாவதுந் தூய்நெறி யாவதும்
எந்தை பிரான்தன் இணையடி தானே.

https://shaivam.org/thirumurai/tenth-thirumurai/446/thirumoolar-nayanar-thirumandiram-tantiram-6-sivaguru-thiruvadi-peru

---

23.

**தோத்திரப் பாடல்கள்: சரசுவதி தேவியின் புகழ்**
**-- சுப்பிரமணிய பாரதியார்**

ஆனந்த பைரவி ராகம் -- சாப்பு தாளம்

வெள்ளைத் தாமரைப் பூவில் இருப்பாள்
  வீணை செய்யும் ஒலியில் இருப்பாள்
கொள்ளை யின்பம் குலவு கவிதை
  கூறு பாவலர் உள்ளத் திருப்பாள்
உள்ள தாம்பொருள் தேடி யுணர்ந்தே
  ஓதும் வேதத்தின் உள்நின் றொளிர்வாள்
கள்ள மற்ற முனிவர்கள் கூறும்
  கருணை வாசகத் துட்பொரு ளாவாள். (வெள்ளைத்) 1

மாதர் தீங்குரற் பாட்டில் இருப்பாள்
  மக்கள் பேசும் மழலையில் உள்ளாள்
கீதம் பாடும் குயிலின் குரலைக்
  கிளியின் நாவை இருப்பிடங் கொண்டாள்
கோத கன்ற தொழிலுடைத் தாகிக்
  குலவு சித்திரம் கோபுரம் கோயில்
ஈதனைத்தின் எழிலிடை யுற்றாள்
  இன்ப மேவடி வாகிடப் பெற்றாள். (வெள்ளைத்) 2

வஞ்ச மற்ற தொழில்புரிந் துண்டு
  வாழும் மாந்தர் குலதெய்வ மாவாள்
வெஞ்ச மர்க்குயி ராகிய கொல்லர்
  வித்தை யோர்ந்திடு சிற்பியர் தச்சர்
மிஞ்ச நற்பொருள் வாணிகஞ் செய்வோர்
  வீர மன்னர்பின் வேதியர் யாரும்
தஞ்ச மென்று வணங்கிடுந் தெய்வம்
  தரணி மீதறி வாகிய தெய்வம். (வெள்ளைத்) 3

தெய்வம் யாவும் உணர்ந்திடுந் தெய்வம்
  தீமை காட்டி விலக்கிடுந் தெய்வம்
உய்வ மென்ற கருத்துடை யோர்கள்
  உயிரி னுக்குயி ராகிய தெய்வம்
செய்வ மென்றொரு செய்கை யெடுப்போர்

செம்மை நாடிப் பணிந்திடு தெய்வம்
கைவ ருந்தி உழைப்பவர் தெய்வம்
கவிஞர் தெய்வம், கடவுளர் தெய்வம். (வெள்ளைத்) 4

செந்த மிழ்மணி நாட்டிடை யுள்ளீர்!
சேர்ந்தித் தேவை வணங்குவம் வாரீர்!
வந்த னம்இவட் கேசெய்வ தென்றால்
வாழி யஃதிங் கெளிதன்று கண்டீர்!
மந்திரத்தை முணுமுணுத் தேட்டை
வரிசை யாக அடுக்கி அதன்மேல்
சந்தனத்தை மலரை இடுவோர்
சாத்தி ரம்இவள் பூசனை யன்றாம். (வெள்ளைத்) 5

வீடு தோறும் கலையின் விளக்கம்
வீதி தோறும் இரண்டொரு பள்ளி
நாடு முற்றிலும் உள்ளன வூர்கள்
நகர்க ளெங்கும் பலபல பள்ளி
தேடு கல்வியி லாததொ ரூரைத்
தீயி னுக்கிரை யாக மடுத்தல்
கேடு தீர்க்கும் அமுதமென் அன்னை
கேண்மை கொள்ள வழியிவை கண்டீர். (வெள்ளைத்) 6

ஊணர் தேசம் யவனர்தந் தேசம்
உதய ஞாயிற் றொளிபெறு நாடு
சேண கன்றதோர் சிற்றடிச் சீனம்
செல்வப் பார சிகப்பழந் தேசம்
தோண லத்த துருக்கம் மிசிரம்
சூழ்க டற்கப் புறத்தினில் இன்னும்
காணும் பற்பல நாட்டிடை யெல்லாம்
கல்வித் தேவியின் ஒளிமிகுந் தோங்க. (வெள்ளைத்) 7

ஞானம் என்பதோர் சொல்லின் பொருளாம்
நல்ல பாரத நாட்டிடை வந்தீர்!
ஊனம் இன்று பெரிதிழைக் கின்றீர்!
ஓங்கு கல்வி யுழைப்பை மறந்தீர்!
மான மற்று விலங்குக ளொப்ப
மண்ணில் வாழ்வதை வாழ்வென லாமோ?

போன தற்கு வருந்துதல் வேண்டா,
புன்மை தீர்ப்ப முயலுவம் வாரீர்! (வெள்ளைத்) 8

இன்ன றுங்கனிச் சோலைகள் செய்தல்
இனிய நீர்த்தண் சுனைகள் இயற்றல்
அன்ன சத்திரம் ஆயிரம் வைத்தல்
ஆலயம் பதி னாயிரம் நாட்டல்
பின்ன ருள்ள தருமங்கள் யாவும்
பெயர்வி ளங்கி யொளிர நிறுத்தல
அன்ன யாவினும் புண்ணியம் கோடி
ஆங்கோர் ஏழைக் கெழுத்தறி வித்தல். (வெள்ளைத்) 9

நிதிமி குத்தவர் பொற்றகுவை தாரீர்!
நிதி குறைந்தவர் காசுகள் தாரீர்!
அதுவு மற்றவர் வாய்ச்சொ லருளீர்!
ஆண்மை யாள ருழைப்பினை நல்கீர்!
மதுரத் தேமொழி மாதர்க ளெல்லாம்!
வாணி சைக் குரியன பேசீர்!
எதுவும் நல்கியிங் கெவ்வகை யானும்
இப்பெருந்தொழில் நாட்டுவம் வாரீர்! (வெள்ளைத்) 10

http://www.tamilvu.org/node/154572?link_id=7

---

**24.**

**பெண்மை**

**-- சுப்பிரமணிய பாரதியார்**

பெண்மை வாழ்கென்று கூத்திடு வோமடா
பெண்மை வெல்கென்று கூத்திடு வோமடா
தண்மை இன்பம்நற் புண்ணியஞ் சேர்ந்தன
தாயின் பெயரும் சதியென்ற நாமமும்.1

அன்பு வாழ்கென் றமைதியில் ஆடுவோம்
ஆசைக் காதலைக் கைகொட்டி வாழ்த்துவோம்
துன்பம் தீர்வது பெண்மையி னாலடா
சூரப் பிள்ளைகள் தாயென்று போற்றுவோம். 2

வலிமை சேர்ப்பது தாய்முலைப் பாலடா
மானஞ் சேர்க்கும் மனைவியின் வார்த்தைகள்
கலி யழிப்பது பெண்க ளறமடா
கைகள் கோத்துக் களித்துநின் றாடுவோம். 3

பெண்ண றத்தினை ஆண்மக்கள் வீரந்தான்
பேணு மாயிற் பிறகொரு தாழ்வில்லை;
கண்ணைக் காக்கும் இரண்டிமை போலவே
காத லின்பத்தைக் காத்திடு வோமடா. 4

சக்தி யென்ற மதுவையுண் போமடா
தாளங் கொட்டித் திசைகள் அதிரவே
ஒத்தி யல்வதோர் பாட்டும் குழல்களும்
ஊர் வியக்கக் களித்துநின் றாடுவோம். 5

உயிரைக் காக்கும் உயிரினைச் சேர்த்திடும்
உயிரினுக் குயிராய் இன்ப மாகிடும்
உயிரினும் இந்தப் பெண்மை இனிதடா
ஊது கொம்புகள், ஆடு களிகொண்டே. 6

'போற்றி தாய்' என்று தோள்கொட்டி யாடுவீர்
புகழ்ச்சி கூறுவீர் காதற் கிளிகட்கே
நூற்றி ரண்டு மலைகளைச் சாடுவோமே
நுண்ணி டைப்பெண் ணொருத்தி பணியிலே. 7

'போற்றிதாய்' என்று தாளங்கள் கொட்டடா
'போற்றிதாய்' என்று பொற்குழ லூதடா
காற்றி லேறியவ் விண்ணையுஞ் சாடுவோம்
காதற் பெண்கள் கடைக்கண் பணியிலே. 8

அன்ன மூட்டிய தெய்வமணிக் கையின்
ஆணை காட்டில் அனலை விழுங்குவோம்

கன்னத் தேமுத்தம் கொண்டு களிப்பினும்
கையைத் தள்ளும்பொற் கைகளைப் பாடுவோம். 9

http://www.tamilvu.org/node/154572?link_id=295

---

**25.**

பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின்.

வாழ்க்கைத் துணைநலம் - குறள் 54.

---

இவை ரவிசந்திரிகா வழங்கும் பல்சுவைப் பாடல்கள்:
ரவிசந்திரிகா
'சோமு' (மீ. ப. சோமசுந்தரம்)
வானதி பதிப்பகம்
நான்காம் பதிப்பு: 1989

# தமிழ் மரபு அறக்கட்டளை நிகழ்வுகள் மற்றும் வெளியீடுகள்

## *தமிழ் மரபு அறக்கட்டளையின் செய்திகள்*

***http://thf-news.tamilheritage.org/***

---

***மண்ணின் குரல் - மரபுக் காணொளிகள் வெளியீடு ( THFi - Channel)***

*https://www.youtube.com/channel/UCbPUhkB63Rooe7RQ94kGWag/videos*

**ஏப்ரல் - 2019**

ஏப்ரல் 24, 2019

அரிஞ்சய சோழன் பள்ளிப்படை கோயில்

https://www.youtube.com/watch?v=Qyp03UZsY-g

ஏப்ரல் 27, 2019

மகேந்திரப் பல்லவனின் மாமண்டூர் குடைவரைகள்

https://www.youtube.com/watch?v=pXyhfAfjFuo

**மே - 2019**

மே 3, 2019

நாட்டுப்புறக் கலையல்ல, நாட்டுக்கலை - பகுதி 1 கருத்துரையாடல் நிகழ்ச்சி

https://www.youtube.com/watch?v=mZI18D69ikY

மே 10, 2019

நாட்டுப்புறக் கலையல்ல, நாட்டுக்கலை - பகுதி 2 கருத்துரையாடல் நிகழ்ச்சி

https://www.youtube.com/watch?v=yvJiqOAhFo8

மே 17, 2019

நாட்டுப்புறக் கலையல்ல, நாட்டுக்கலை - பகுதி 3 கருத்துரையாடல் நிகழ்ச்சி

https://www.youtube.com/watch?v=Ekotm3JE3Rs

மே 25, 2019

இலங்கையின் கன்னிக்காட்டை நோக்கிய தூரப் பயணம்

https://www.youtube.com/watch?v=eTANtNUa74M

மே 28, 2019

பேராதனைப் பல்கலைக்கழக நூலகம், அதன் அரிய சுவடிகள்

https://www.youtube.com/watch?v=rbShnwd-ik8

**ஜூன் - 2019**

ஜூன் 9, 2019

மன்னர்களின் செய்திகளை ஆராய்வது மட்டும் தான் வரலாறா?

https://www.youtube.com/watch?v=N2JQRKfLNFw

**ஜூலை - 2019**

ஜூலை 5, 2019

கீழடி அகழாய்வு - 10 நிமிடச் செய்தி

https://www.youtube.com/watch?v=9m9B5tQ_mc4

ஜூலை 6, 2019

இராஜராஜசோழன் குறித்து தொல்லியல் தடயங்கள் கூறுவது என்ன?

https://www.youtube.com/watch?v=beZMHf5tlVg

ஜூலை 9, 2019

கொடுமணல் அகழ்வாய்வு பற்றி பேரா.டாக்டர்.க.ராஜன்

https://www.youtube.com/watch?v=W1wwVdrgrGA

ஜூலை 12, 2019

பொருந்தல் அகழ்வாய்வு பற்றி பேரா.டாக்டர்.க.ராஜன்

https://www.youtube.com/watch?v=6X9Oe0LxCzY

ஜூலை 15, 2019

கீழடி அகழ்வாய்வு சொல்லும் செய்தி: அமர்நாத் இராமகிருஷ்ணா

https://www.youtube.com/watch?v=eah0X5VpWOw

***நிகழ்வுகள்:***

ஜூன் 1, 2019 உயராய்வு உரைத்தொடர் 1 - (சென்னை)

http://thf-news.tamilheritage.org/2019/05/29/உயராய்வு-உரைத்தொடர்-1-ஜூன/

ஜூலை 4, 2019 வட அமெரிக்க தமிழ்ச் சங்க கூட்டமைப்பு ஆண்டு விழாவில் “கைத்தறி அணிவோம்” நிகழ்வு http://thf-news.tamilheritage.org/2019/07/01/கைத்தறி-அணிவோம்/

ஜூலை 7, 2019
10ம் உலகத் தமிழாராய்ச்சி மாநாட்டு உரை: ஐரோப்பிய ஆவணப்பாதுகாப்பகங்களில் உள்ள அரிய ஓலை மற்றும் காகித ஆவணங்கள்
https://www.youtube.com/watch?v=yVZitYq4zuM

***மின்னூல் வெளியீடு:***

இணையமும் அஞ்சலும்; ஆசிரியர்: முனைவர் பெ.சந்திரபோஸ்
http://www.tamilheritage.org/old/text/ebook/THF_InaiyamumAnjalum-ChandraBose.pdf

# மின்தமிழ் மேடை



## "தமிழுக்கான இன்றைய ஆய்வுகள்"

**தமிழ் மரபு அறக்கட்டளை** *(www.tamilheritage.org)*
வெளியிடும் காலாண்டு மின்னிதழ்
மின்தமிழ்மேடை - காட்சி: *18*
ஜூலை – *2019*




**18**